# கல்கி

## பொருளடக்கம்

**நவம்பர் 29, 1959**



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

டி.எஸ்.ஆர் & கோ

கும்பகோணம்










| | | | |
|---|---|---|---|
| மலர் 19<br>இதழ் 18 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா | —பாரதியார் | விகாரி ௵<br>கார்த்திகை 13௳ |


# குழப்புவார்கள்; ஏமாற வேண்டாம்!

பிரதமர் நேருஜியைப் போலவே திரு காமராஜ் "சென்ற 12 ஆண்டுகளாக 12,000 கோடி ரூபாய் செலவு செய்தும் பலன்கள் அதிகமாகக் கிடைக்கவில்லை. இதைக் காங்கிரஸ் உணர்ந்திருக்கிறது!" என்று கூறினார்.

நேருஜி விவசாயத்தைப்பற்றி மாத்திரம் 900 கோடிதான் நஷ்டம் என்றார். திரு காமராஜ் அவர்களோ, முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இரண்டுக்கும் சேர்த்துச் செலவான பன்னிரண்டாயிரம் கோடி ரூபாயும் விழலுக்கு இறைத்த நீர் ஆகிவிட்டது என்று ஒப்புக் கொள்கிறார்.

இத்தனை நாட்களும் "காங்கிரஸ் கட்சிதானே திட்டம் போட்டிருக்கிறது. வேறு எந்தக் கட்சிக்கு என்ன திட்டமிருக்கிறது?" என்று பிற கட்சிகளைப் பற்றிச் சொல்லி வந்தார்கள்.

"நாங்கள்தானே பக்ரா நங்கல் திட்டம் போட்டோம். நாங்கள்தானே எஃகு உற்பத்திசாலை அமைத்தோம். நாங்கள்தானே பழுப்பு நிலக்கரித் திட்டம் நெய்வேலியில் ஏற்படுத்தினோம்!" என்று சென்ற காலத்தில் பல நிர்வாகங்களில் செய்ய நினைத்திருந்ததை யெல்லாம் தாங்களே செய்ததாக மார் தட்டிக் கொண்டு வந்தார்கள்.

இப்பொழுது காலம் மாறிவிட்டது. அந்த வீண் பிரதாபங்களெல்லாம் மக்கள் காதில் ஏறாது என்பதை உணர்ந்து கொண்டு விட்டார்கள்.

காங்கிரஸ்காரர்கள் இந்திய நாட்டில் பல இடங்களில் போட்டிருக்கும் திட்டங்கள் உருப்படியான பலன் அளிப்பதற்கு முன் உள் நாட்டில் அன்றாடத் தேவைக்கான பண்டங்களின் விலைகள் 'கப கப' என்று விஷம்போல் ஏறிக்கொண் டிருக்கின்றன. திட்டங்களின் செலவுக்காக அச்சடித்த காகிதப் பணமும், அந்நிய நாடுகளிலிருந்து தேசத்தை அடகு வைத்து வாங்கும் பணமும் இந்த வினையை விதைத்திருக்கின்றன

இதை யெல்லாம் சுதந்திரக் கட்சி ஓயாமல் எடுத்துச் சொல்லி வந்திருக்கிறது. மக்கள் சுதந்திரக் கட்சியினர் சொல்வதிலுள்ள உண்மையை உணரத் தலைப்பட்டிருக்கின்றனர். இதனால் மக்கள் சுதந்திரக் கட்சியின் பக்கம் சேர்ந்து விடுவார்களோ என்று காங்கிரஸ்காரர்கள் உள்ளத்தில் திகில் ஏற்பட்டிருக்கிறது. சுதந்திரக் கட்சியின் எதிர்ப்பை உத்தேசித்து வியாபாரக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி வருகிறார்கள். தஞ்சையில் நெல் கொள்முதல் செய்யப் போவதில்லை என்று கூறினார்கள்.

மொத்தத்தில் 'பொதுமக்களின் பணத்தை நஷ்டப்படுத்தி விட்டோம்' என்று காங்கிரஸ்காரர்களே ஒப்புக் கொண்டார்கள் என்று திருப்தியடையலாம். ஆயினும் காங்கிரஸ் ஆட்சியில் இனிமேலாகிலும் அத்தகைய வீண் செலவு நேராது என்று சொல்ல முடியாது.

உள்ளத்தில் உண்மையாகத் தங்கள் திட்டங்கள் தோல்வியடைந்து விட்டன என்று உணர்ந்து கொண்டால், திட்டத்தை மாற்ற வேண்டும்; கொள்கைகளையும் மாற்றிக் கொள்ளவேண்டும்.

பொதுத் துறை வியாபாரத்தில் சர்க்கார் அதிகாரிகளின் நிர்வாகத்தைப் பற்றி விசாரிக்க நியமிக்கப்பட்ட ஒரு தனிக் கமிட்டியினர் பல சிபாரிசுகள் செய்திருக்கின்றனர்.

அந்தச் பொரிகைகளினின்றே சர்க்கார் உத்தியோகஸ்தர்களுடைய நிர்வாகத்தினால் இடைஞ்சலே தவிர லாபமில்லை என்று தெரிய வருகிறது. அந்த முறையை மாற்றிவிட வேண்டியதிருக்க, காரியத்துக்கு உதவாத விதிகளைச் பொரிக செய்திருக்கின்றனர்.

முதலிரண்டு திட்டங்களைவிட மிகப் பெரிய திட்டமாக மூன்றாவது திட்டம் போடப்படுகிறது. பத்தாயிரம் கோடி ரூபாய் செலவழிக்கப் போகிறார்களாம்! இந்தப் பத்தாயிரம் கோடி ரூபாய் எங்கேயிருந்து வரப்போகிறது?

சிறிதளவு அந்நிய நாட்டுக் கடனாகவும், புது வரிகள் மூலமாகவும் வரும். மிச்சம் நாஸிக்கிலுள்ள சர்க்கார் அச்சகத்தில் அச்சடித்து வழங்கும் காகிதமாக வரப் போகிறது.

இது போதாதென்று நேருஜியின், அண்டை வீட்டுப் பஞ்சசீல நண்பர் சீனா செய்த நம்பிக்கைத் துரோகத்தின்விளைவாக நமது ராணுவச் செலவும் ஏராளமான அளவில் அதிகரிக்க வேண்டியதாகும். நமது மத்திய சர்க்காரின் வருவாயில் பெரும் பகுதி இப்பொழுதே ராணுவத்துக்குப் போய் விடுகிறது என்றால், மாறுபட்ட இன்றையச் சூழ்நிலையில் இன்னும் அதிகம் செலவழிக்க வேண்டியிருக்கும்.

அந்தப் பற்றாக்குறையை இட்டு நிரப்ப இன்னும் கொஞ்சம் காகிதப் பணம் அச்சடிக்க வேண்டியதாகும்.

இப்போதிருக்கிற பொறுக்க முடியாத விலைவாசிகள் இன்னும் ஏறும்.

கம்யூனிஸ்ட் சீனா ஏற்படுவதற்கு முன் சியாங்கே ஷேக் சீனாவில் ஒரு பெரிய சாக்கு நிறைய நோட்டுக்கள் கொண்டு போனால் தான் ஒரு படி அரிசி கிடைக்குமாம்! இன்று நமது தேசம் போகிற போக்கைப் பார்த்தால், அந்தக் கதி இங்கும் வந்து விடுமோ என்ற அச்சம் எழலாம்.

ஆனால் அந்த அச்சத்தைத் தவிர்க்கும்படியான சூழ்நிலை நமது நாட்டில் ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸ் ஒன்றே கட்சி, அதைத் தட்டிக் கேட்க அகில இந்திய ரீதியில் கட்சி இல்லை என்றால்தான் அந்தப் பயங்கர நிலை ஏற்படும். நல்ல வேளையாக, சுதந்திரக் கட்சி நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. சுதந்திரக் கட்சியின் வளர்ச்சி காங்கிரஸாருக்கு அச்சத்தைத் தருகிறது. அதனாலேயே சுதந்திரக் கட்சியின் கொள்கைகளைக் காங்கிரஸ் கட்சியினர் எடுத்துப் பேச ஆரம்பிக்கின்றனர். பேச்சளவில் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை ஒப்புக் கொண்டாலும் காரியத்தில் காங்கிரஸார் செய்து காட்ட மாட்டார்கள். பொது மக்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். காங்கிரஸார் செய்யும் கருத்துக் குழப்பங்களுக்குப் பலியாகி விடாமல், சுதந்திரக் கட்சியைப் பலமான கட்சியாக்க வேண்டும்.

# முகம்மது ஸேட்டின் அரிய பிரசங்கம்

சுதந்திரக் கட்சிக்கு நாட்டின் பல பகுதிகளில் கிளைகள் ஏற்பட்டு, ஜில்லா மகாநாடுகள், தாலூக்கா மகாநாடுகள் யாவும் துரிதமாக நடைபெறுகின்றன. அங்கத்தினர்கள் சேர்க்கும் வேலையும் வெகு வேகமாக நடைபெற்று வருகின்றது.

மைசூர் ராஜ்யத்தில் ஹாஸன் ஜில்லாவில் சகலேஷ்புர் தாலூக்காவில் ஒரு மகாநாடு நடைபெற்றது. இந்த மகாநாட்டை மைசூர் சட்டசபை அங்கத்தினரான ஜனாப் முகம்மது ஸேட் துவக்கி வைத்தார். அவர் ஒரு சுயேச்சை அங்கத்தினர். அவருக்கு வயது 76. அவர் இருக்குமிடத்துக்கும் மகாநாடு கூடுமிடத்துக்கும் இடையில் 150 மைல்கள் இருக்கின்றன. இந்தத் தூரத்தை ரோடு மார்க்கமாகக் கடக்க வேண்டுமேயன்றி ரயில் வசதி கிடையாது. இவ்வளவு இடையூறுகளையும் பொருட்படுத்தாது ஜனாப் முகம்மது ஸேட் இந்த மகாநாட்டுக்கு வந்தார் என்றால் அவருக்குச் சுதந்திரக் கட்சியிலுள்ள பேரார்வத்தையே எடுத்துக் காட்டுகிறது. அவர் நிகழ்த்திய திறப்பு விழாப் பிரசங்கமும் அவருடைய ஆர்வத்தை இன்னும் தெளிவாக எடுத்துக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. அந்தப் பிரசங்கத்திலிருந்து ஒரு சில பகுதிகளை இங்கே வெளியிடுகிறோம். முதலில் சுதந்திரக் கட்சியின் அடிப்படை லட்சியத்தை எவ்வளவு நன்றாக வெளியிடுகிறார், பாருங்கள்!

''செல்வம் சேர்ப்பதை மட்டும் நோக்கமாகக் கொள்ளாமல் நமது தார்மீகப் பண்பை நிலைநாட்டுவதை லட்சியமாகக் கொண்டு இந்தக் கட்சி எழுப்பப்பட்டிருப்பதைக் காண்கிறேன். சமுதாயத்தில் எல்லா வகுப் பாருக்கும் நீதியும் நியாயமும், பிறருக்குத் தீங்கு விளைவிக்காமல் வழங்க முனைகிறது. இம் முறைகளால் எல்லா மக்களுக்கும் சுபிட்சம் வழங்கத் திட்டமிட்டிருக்கிறது.

''இப்பொழுது நமது நாட்டில் தார்மீகப் பண்பின் அவசியம் சரியாகக் கணிக்கப்படவில்லை. தார்மீகப் பண்பு இன்றேல் மக்கள் சமுதாயம் சின்னாபின்னப்பட்டுப் போகும்.''

''மக்கள் சமுதாயமாக இணைந்து வாழ்வதாலேயே அரசாங்கம் என்றிருக்கிறது. ஒரு பொது எதிரி இருந்ததால், மக்கள் ஒன்றுபட்டு ஆட்சியைக் கைப்பற்றினார்கள். இப்பொழுது கட்சியின் செல்வாக்கே அரசாங்கத்தின் பலமாகவும் செல்வாக்காகவும் இருக்கிறது. ஆளும் கட்சி, தான் விடாப்பிடியாகப் பதவியில் இருப்பதற்காக ஒரு புது வர்க்கத்தையே சிருஷ்டிக்கிறது. காங்கிரஸில் இந்தப் புது வர்க்கத்தைப் பார்க்கலாம். இவர்களில் கொள்ளை லாபக்காரர்களையும் கறுப்பு மார்க்கெட்காரர்களையும் காணலாம்.

''இந்த வர்க்கம் ஏழைகளைச் சுரண்டிக் காங்கிரஸ் தேவதைகளின் ஆடம்பர வாழ்க்கைக்கு உதவுகின்றனர். ஆடம்பர வாழ்க்கை யென்றாலே ஓயாத பணத் தேவை. இந்தப் பணத்தைத் தேட வரிகள் விதிப்பது, கடன்கள் எழுப்புவது ஆகிய காரியங்களை இந்த ஏழை நாட்டில் செய்யவேண்டியிருக்கின்றன.

''எனது பொது வாழ்வில் சென்ற ஐம்பது வருஷங்களாக மக்களின் வாழ்க்கையைக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறேன். பொருளாதார மந்தம் ஏற்பட்டு, மக்கள் சொல்

## "பேசாதே, ஜாக்கிரதை!"

திரு. கிருஷ்ண மேனனை பதவி-யிலிருந்து நீக்க காங்கிரஸ் பார்லிமெண்டரி அங்கத்தினர்கள் கட்சிக்கூட்டத்தில் செய்த முயற்சி தோல்வியுற்றது. நடவடிக்கைகள் ரகசியமாக இருக்கவேண்டுமென நேருஜி விரும்பினார்.

—ஸ்டேட்ஸ்மென் செய்தி.

காங்கிரஸ் மலரில் இப்போதே விளம்பரம் செய்யுங்கள். பின்னால் உங்களுக்கும் பல நன்மைகள் விளையும்!

பெங்களூர் காங்கிரஸ்
விசேஷ மலர்
விளம்பர விகிதங்கள்
வெளிப்புறம் அட்டை ரூ 15000
முன் உட்புற அட்டை " 10,000
கடைசி உட்புற அட்டை " 8,500
முழு பக்கம் " 4,000
இருவர்ணங்களில் " 8000

தொழிலதிபர்

காங்கிரஸ்தான் உண்மையில் பணக்காரர்கள் கட்சி என்பதற்குப் பெங்களூரில் நடைபெற விருக்கும் காங்கிரஸின் விசேஷ மலர் விளம்பர விகிதம் ஒரு உதாரணம் என்று ராஜாஜி கூறினார்.

வோணக் கஷ்டங்களுக்கு உள்ளான அந்த நாளில்கூட, மக்கள் இன்று அவதிப்படுவது போல் கஷ்டப்பட்டதில்லை.

"ஒரு நாட்டின் செல்வ வளம், அந்நாட்டு மக்களின் உற்பத்தி சக்தியைப் பொறுத்தது. முயற்சியினாலும் உழைப்பினாலுமே லாபம் அடைய முடியும்.

"ஒவ்வொரு மனிதனையும் அவனது திறமையை வைத்தே கவனிக்க வேண்டும். ஒரு தொழிலில் ஒருவனுக்குள்ள சாமர்த்தியத்தையும் உற்பத்திப் பெருக்கின் அளவையும் வைத்தே அவனுடைய செல்வநிலை கணிக்கப்படுகிறது. இப்படித் தனக்குத்தானே வேலை செய்து சம்பாதிக்கும் திறமையே 'சுதந்திரம்' என்பேன். ஊக்கம், உற்சாகம், அக்கறை இவ்வளவும் நிலத்தில் பாடுபடும் விவசாயிக்கு இருந்தால்தான் உணவு உற்பத்தி பெருகும். நிலமில்லாதவர்களுக்கு நிலம் அளிப்பதோ, நிலம் அளிக்கப் போவதாக வாக்களிப்பதோ உணவு உற்பத்தியைப் பெருக்காது. ஊக்கமும் உற்சாகமும் அக்கறையும் மனிதப் பண்பின் அஸ்திவாரமாகும். அவற்றை வேறொரு ஸ்தாபனத்தில் கொண்டுபோய்ப் போடமுடியாது!"

காங்கிரஸ் கம்யூனிஸ்ட் கட்சியாக மாறி வரும் போக்கைப் பற்றி எப்படிச் சொல்லுகிறார், பாருங்கள்!

"காங்கிரஸுக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும் உள்ள மாறுபாடு நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. ஏன், காங்கிரஸ்காரர்கள் தங்கள் எல்லையில் பிரவேசிப்பதாகக் கம்யூனிஸ்டுகள் ஆட்சேபித்தால்கூட வியப்பதற்கில்லை.

"'கம்யூனிடி பிராஜக்ட்' என்று சொல்லிக்கொண்டு கண்மூடித்தனமாகப் பணத்தைச் செலவழிக்கிறார்கள். யாருக்காகச் செலவழிக்கிறார்களோ, அந்த ஏழை மக்களுக்கு எவ்விதப் பயனும் விளைவிக்காமல் செலவழிப்பவர்களுக்கு லாபகரமாக முடியும் திட்டத்தை முன்னேற்றத் திட்டம் என்று எப்படிக் கூறுவது?"

இப்படிப் 'பளீர் பளீர்' என்று சுடர் விடும்படியான பல கருத்துக்களை உணர்ச்சியோடு ஜனாப் முகம்மது ஸேட் கூறியிருக்கிறார்.

இந்த மகாநாட்டுக்கு மைசூர் சுதந்திரக் கட்சியின் உபதலைவரும், விவசாயத்துறை டைரக்டராக இருந்து ஓய்வுபெற்றவருமான திரு கே. எச். சீனிவாசன் தலைமை வகித்தார்.

## காங்கிரஸ் சோஷலிஸம்

தஞ்சையில் பெரிய மிராசுதாரான பூண்டி கிருஷ்ணசாமி வாண்டையார் அவர்கள் சுதந்திரக் கட்சி பணக்காரர் கட்சி என்கிறார். அவர் இருப்பது காங்கிரஸ் கட்சியில்; அவர் பேசுவது காங்கிரஸ் மேடையில். இது போதாதா எந்தக்கட்சி பணக்காரக் கட்சி என்று மக்கள் புரிந்து கொள்வதற்கு?

சமீபத்தில் விஜயநகரம் ராஜா பி. வி. ஜி. ராஜு அவர்கள் காங்கிரஸில் சேர்ந்து விட்டார் என்று ஆந்திர தேசச் செய்தி கூறுகிறது. இன்னும் காங்கிரஸிலுள்ள பல பணக்காரர்களைப் பெயரிட்டு நாம் சொல்ல விரும்பவில்லை. அவர்களுக்காகச் செய்யப்படும் சலுகைகளைப் பற்றியும் நாம் பொருமைப்படவில்லை!

காங்கிரஸ் கட்சியைப் போல் சுதந்திரக் கட்சி வேஷம் போட்டு மக்களை ஏமாற்ற விரும்பவில்லை.

சுதந்திரக்கட்சி, பணக்காரர்கள் ஏழைகள் எல்லாரும் வளம் பெற்று வாழ வேண்டும் என்று விரும்புகிறது. பணக்காரர்கள் நன்றாக வாழ்ந்தால்தான் ஏழைகளும் வாழ முடியும்; பணக்காரர்களை ஏராளமான தொழிற்சாலைகள் ஏற்படுத்தும்படி தூண்டி ஆங்காங்கு உள்ள மக்களுக்கு வேலைசெய்து பிழைக்கும் வாய்ப்புகள் ஏற்படுத்தித் தர வேண்டும் என்று விரும்புகிறது. ஆனால் காங்கிரஸ் அரசாங்கமோ எல்லாப் பணக்காரர்களிடமும் உள்ள பணத்தைப் பறித்து 'எல்லோரும் ஏழை என்னும் காலம் வந்ததே' என்று பாடும்படியான சோஷலிஸத்தை ஏற்படுத்தத் திட்டமிட்டிருக்கிறது. ஆனாலும் சாமர்த்தியசாலிகளான பணக்காரர்கள் சிலர் நாட்டில் இல்லாமல் போகவில்லை. அவர்கள் காங்கிரஸ் சொல்வதையே கிளிப்பிள்ளை போல் திரும்பத் திரும்பச் சொல்லித் தங்கள் பணத்தையும் செல்வத்தையும் பாதுகாத்துக் கொள்கிறார்கள்!

## மிருதங்க அரங்கேற்றம்

பழனி சுப்பிரமணிய பிள்ளையின் சிஷ்யர் சிர. எஸ். ஸ்வாமிநாதனுடைய மிருதங்க அரங்கேற்றம் 1959 அக்டோபர் 31உ சென்னை, மயிலை சாஸ்திரி ஹாலில் வெகு விமரிசையாக நடைபெற்றது. அன்று மஹாராஜபுரம் விஸ்வநாதய்யர் கச்சேரிக்கு லால்குடி ஜயராமன் வயலினும், பழனி சுப்பிரமணிய பிள்ளையும், ஸ்வாமிநாதனும், மிருதங்கம் வாசித்து பல அம்சங்களிலும் சிறப்பிக்கச் செய்தனர். திரளான ரசிகர்களும், வித்வான்களும் குழுமியிருந்த ஸதஸுக்கு அக்கிராஸனம் வகித்த பிரதம நீதிபதி ஸ்ரீ பி. வி. ராஜமன்னார் இளைஞனுடைய வாசிப்பைப் பாராட்டி மாலையும் சூட்டினார்.

மாஸ்டர் எஸ். ஸ்வாமிநாதன்




# சுதர்சனம் பிக்சர்ஸ்
# அவள் யார்



என் பிறந்த வீட்டிலிருந்து உங்களுக்கு ஒருவித ஐசுவரியமும் கொண்டு வரவில்லை. என் உள்ளத்தைத்தான் உங்களுக்கு அன்புக் காணிக்கையாகக் கொண்டு வந்திருக்கிறேன்.



நீ நல்லவள் மகாலக்ஷ்மி நீ நல்லவள். வெறி பிடித்த மதியீனன் என்னை நீ மணம் செய்து கொண்டு கண்ட பலன்? ஒன்றுமில்லை! கொடுமைதான் நான் உனக்குக் கொடுத்த பரிசு. அது தான் நான் உனக்கு அளித்த வெகுமதி.



நீயும் எனக்கு ஒரு தாயாராகத்தான் இருந்து வந்தே. இன்னிக்கி நான் ஒரு நல்வாழ்வு வாழ்ந்தா அது உன்னாலே தான் பொன்னி.



ஒளிபடைத்த உங்கள் பார்வையில் இருளுக்கு இடமே கிடையாது. யாருக்காக வேறு யார் செய்த குற்றத்தையோ மறைக்கிறீர்கள்!

அன்பின் சின்னம் அவள்!
அறிவின் சிகரம் அவள்!
பண்பின் திலகம் அவள்!







சென்னை பார்க் டவுன் ஏகாம்பரேசுவரர் அக்கிரகாரத்திலும் ராயபுரத்திலும் நடைபெற்ற சுதந்திரக் கட்சிக் கூட்டங்களுக்கு மக்கள் திரளாக வந்திருந்தனர். ''மக்கள் இவ்வளவு பெருங்கூட்டமாக வந்திருப்பதே இன்றைய சர்க்காரிடம் மக்களுக்குள்ள அதிருப்தியை நன்கு நிரூபிக்கிறது'' என்றார் ராஜாஜி.

1, 5. ஏகாம்பரேசுவரர் அக்கிரகாரத்தில் கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள். 2. மிஸ் நாமஸ் பேசுகிறார். 3. கோவலால் நார்வாடி சுதந்திரக் கட்சியை வரவேற்கிறார். 4. ராஜாஜிக்கு மாலைமரியாதை. 6. காளா சுப்பாராவ் சொற்பொழிவாற்றுகிறார். 7, 8. ராயபுரம் கல்மண்டபத்தில் நடந்த கூட்டத்தில் ராஜாஜியின் அறிவுரை.











# ஆகாச வெடி

'' சென்னை ராஜ்யத்தில் மூன்று இடங்களில் மண்வளப் பரிசோதனைக் கூடங்கள் அமைக்கப்படும். ஒன்று தஞ்சை ஜில்லாவில் துவக்கப்படும்.''

—சென்னை மந்திரி ஒருவர்

மீதி இரு மண் ஆராய்ச்சிச்சாலைகளையும் எங்கே அமைப்பதென்பதில் மண்டையை உடைத்துக் கொண்டு ஆராயப்படுகிறது போலும் !

★

'' விமான எண்ணெயுடன் கலப்படம் செய்த கூந்தல் தைலத்தைத் தடவிக் கொண்டதால் மொராக்கோவில் பல ஆயிரக்கணக் கானவர்களின் தலைமயிர் உதிர்ந்துவிட்டது.''

— செய்தி

'' ஜனங்களுடைய தலையை மொட்டை அடிக்க இதைவிடச் சுலபமாக வரிப்பளுவை உயர்த்தலாமே?'' என்கிறார் இங்கு ஒரு பதவியாளர்.

★

''73 எண்ணெய் விளக்குகள் ஏற்றிவைத்து, பீஹார் முதன் மந்திரி கிருஷ்ண சின்ஹாவின் 73வது பிறந்த நாள் கொண்டாடப்பட்டது.''

— செய்தி

அவரது வயதைத் விளக்க இவ்வளவு விளக்குகள் ஏற்றி வைக்க வேண்டியிருந்ததா ?

★

'' தெரு நடை பாதையில் இரவில் யாராவது நன்றாகத் தூங்குவதைப் பார்த்தால், அவர்களைக் கொன்று விடுகிறான், கான்பூரில் ஒரு பேர்வழி.''

— செய்தி

தெருவில் தூங்குவதற்கே இந்த அமர்க்களப்படுத்துகிறானே, சிலர் ஆபீஸ்களில் தூங்குவதைப் பார்த்தால் அவன் என்ன செய்வானோ ?

'' தேர்தலில் தோற்ற ஆத்திரம் தாளாமல் ஒரு அபேட்சகர் வெற்றி பெற்றவரின் ஆட்களைக் கடித்து விட்டார் !''

—மணிலாவில்

தேர்தல் செலவு, ஒருவேளை அவர் கையைக் கடித்து விட்டதோ ?

★

'' இந்தியப் பகுதி கலிம்பாங்கில், சீனர்கள் சமீபத்தில் நூதனப் பொருள்கள் விற்கும் கடைகள் பல வைத்திருக்கிறார்கள். ஆனால், ஒன்றையும் மக்கள் வாங்குவதில்லை.''

—ஆசார்ய கிருபளானி

கடையைக் கட்டிக்கொண்டு போக உபயோகமாகும் நூதனப் பொருள்களோ அவை ?

★

''காவேரி நதிப் படுகையில் எண்ணெய் ஏராளமாக இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.''

—செய்தி

சியக்காய்த் தூளும் ஆராய்ச்சியால் கிடைக்குமானால் காவேரி ஸ்நானத்துக்கு உபயோகமாகுமே !

★

''தென்னாட்டில் விழாக்களுக்கு மிக அழகாகப் பந்தல் போடுகிறார்கள். இது வடக்கே தெரியாது.''

—இந்திய ரயில்வே மந்திரி

அங்கு விழாக்களில், பெரும்பாலும் மந்திரிகளே வாய்ப்பந்தல் போட்டு விடுவது காரணமாயிருக்கலாம்.

★

'' சைக்கிளைத் திருடிக் கொண்டு ஓடிய கான்ஸ்டேபிளுக்குக் கடுங்காவல்.''

— பங்களூரில்

சைக்கிள் விடத் தெரியாததாலேயே அதை எடுத்துக்கொண்டு ஓடினதாக அவன் கூறியிருக்க வேண்டும்.

சென்னை ஸ்ரீ கச்சாலீச்வரர் கோயிலில் சேங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் நாற்பது தினங்களுக்கு மேல் ராமாயண உபன்யாசம் செய்தார்கள். நவம்பர் 16-ந் தேதி நடைபெற்ற ராம பட்டாபிஷேக வைபவத்தில் ராஜாஜி அவர்கள், ''ரிஷிகள் வைத்த அழியாச் செல்வம் ராமாயணம்; இதைச் சொல்லத் தீக்ஷிதர் போன்ற சிலராவது இன்னும் இருக்கிறார்களே என்று எனக்கு சந்தோஷம்'' என்று கூறினார்கள். தீக்ஷிதருக்கு டாலருடன் கூடிய தங்கச் சங்கிலியையும் ஆயிரத்தொரு ரூபாய் பண முடிப்பையும் பக்தர்கள் சார்பில் ராஜாஜி அவர்கள் வழங்கினார்கள்.



# விலைவாசி






'' நீங்க கலியாணத்துக்குச் சாமான்கள் எல்லாம் வாங்கிப் போட்டுடுங்க. வரதட்சிணையே வேண்டாம்!''

'' ஐயோ! நான் வரதட்சிணையே கொடுத்துவிடுகிறேன். என்னை விட்டு விடுங்கள் !''

சாமா



மந்திரிகள் எல்லோரையும் ஒருவர் விருந்துக்கு அழைத்தார். பல அலுவல்களையும் விட்டு மந்திரிகள் எல்லோரும் விருந்து சாப்பிட வந்தனர். விருந்து வைத்தவர், ''பேஷ்! நீங்கள் எல்லோரும் என் அழைப்புக்கு இணங்கி வந்ததற்கு சந்தோஷம். இந்த விலைவாசி ஏற்றத்தில் எவனாகிலும் விருந்து வைக்கத் துணிவானா என்று யோசிக்காமல் வந்து விட்டீர்களே, உங்களுக்கு என் அனுதாபம்'' என்று சொல்ல, மந்திரிகள் திரும்பினார்கள்.






சர்க்கார், வயிற்றைக் கட்டுங்கள் என்கிறார்கள்.
சரி! ஆனால் கயிறும் ஏக விலை விற்கிறதே! என்ன செய்வது?

'' இந்த விலைவாசி ஏற்றத்தைச் சமாளிக்க ஒரு யோசனைதோன்றியது. அதைச் சொல்லத்தான் மந்திரி அவர்களிடம் ஓடோடி வந்தோம். நாங்கள் இனிமேல் உங்கள் வீட்டிலேயே சாப்பிடப் போகிறோம்!''





# அக்கப்போர் அப்பு



**அப்பு:** நம்ம ஜோஸியம்தான் கடைசியில் ஜயித்தது. பந்தயம் கட்டினீரே, சஞ்சீவி ரெட்டி வர மாட்டார் என்று? இதோ பணத்தை வையும்.

**கோவி:** காங்கிரஸ் பிரசிடெண்டு பதவிக்கு ஆந்திர முதன் மந்திரி சஞ்சீவி ரெட்டியார் வர மாட்டார் என்று நான் நிச்சயமாக ஏன் கூறினேன், தெரியுமா?

**அப்பு:** அவருடைய பெயர் முதலில் அடிபட்ட போது, முதன் மந்திரி பதவியை விட்டு நான் இப்போது வர முடியாது. அப்படி வந்தால் ஆந்திரத்தில் எல்லாக் காரியங்களும் தடைப்பட்டுப் போகும் என்று அவர் கூறினராம்.

**அப்பு:** சஞ்சீவி ரெட்டிகாரு என்ன, இதர ராஜ்யங்களிலுள்ள மந்திரிகளும் இவ்வாறுதான் தங்களை நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது எப்படி இருந்தாலும் சரி. காங்கிரஸ் அக்கிராசனப் பதவி இப்படியும் சீரழிந்து நிற்குமென்று யாரும் நினைக்கவில்லை. அக்கிராசனப் பதவிக்கு ஆள் தேடுவதும், தேடிச் செல்லும் ஆட்கள், 'எனக்கு வேண்டாம் அந்தப் பதவி. எனக்கு உள்ள பதவியே போதும்' என்று தட்டிக் கழிப்பதும் இப்போது வழக்கமாகி விட்டது.

**கோவி:** அடாடா! முன் காலத்திலெல்லாம் காங்கிரஸ் அக்கிராசனப் பதவிக்குத் தேர்தல் என்றால், அதற்கு இருந்த மதிப்பும், நேர்மையும், கண்ணியமும் ... நினைத்தாலே கண்ணீர் விடலாம் போலிருக்கிறது.

**அப்பு:** அந்தக் காங்கிரஸ் வேறு! இப்போதுள்ள காங்கிரஸ் வேறு! முதலில் இதை ஞாபகம் வைத்துக் கொள்ளும்.

**கோவி:** உண்மை சார் அப்பு, உண்மை! அந்தக் காங்கிரஸ் நாட்களில் படி அரிசி ஆறணு விற்றது. இன்று ஒரு ரூபாய்க்கு மேலும் உயர்ந்து கொண்டே போகிறது!

**அப்பு:** அந்தக் காங்கிரஸ் காலத்தில் புளி விலை வீசை நாலணு.

**கோவி:** இந்தக் காங்கிரஸ் காலத்திலே மூணேமுக்கால், நாலு ரூபாய்.

**அப்பு:** அந்தக் காங்கிரஸ்காலத்திலே தனியா வீசை நாலணு.

**கோவி:** இந்தக் காங்கிரஸ் காலத்திலே ஒண்ணரை ரூபாய்.

**அப்பு:** அந்தக காங்கிரஸ் காலத்திலே காய்கறி வீசை மூன்றணு.

**கோவி:** இந்தக் காங்கிரஸ் காலத்திலே வீசை விலை ஒரு ரூபாய்.

**அப்பு:** நீரும் நானும் இப்படியே மாற்றி மாற்றிச்சொல்லிக் கொண்டே போனல் இதற்கு முடிவே இராது. சுருக்கமாகச் சொல்கிறேன் கேளும். இந்தக் காங்கிரஸ்காரன் முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் போட்டான், விலைவாசி ஒரு மடங்கு உயர்ந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் போட்டான், இரண்டு மடங்காக உயர்ந்தது.

**கோவி:** மூன்றாவது திட்டம் போட்டு மூன்று மடங்காக உப்புப் புளி அரிசி விலையை உயர்த்தப் போகிறார்கள், அவ்வளவுதான்.

**அப்பு:** போன வாரம் அகவிலை உயர்வை எதிர்த்துப் பெரிய ஊர்வலம் பல இடங்களில் நடந்தது. அதைப் பார்த்துவிட்டு மந்திரிகள் காங்கிரஸ்காரர்கள் எல்லோரும் பீதியடைந்து விட்டார்களாம். விலைவாசி உயர்வுக்குக் காரணம் வர்த்தகர்கள்தான் என்று சொல்லிக் காங்கிரஸ்காரர்கள் இனிமேலும் தப்பித்துக் கொள்ள முடியாது. ஏனென்றால், காங்கிரஸின் திட்டங்கள், வரிக் கொள்கைகள் பணவீக்கம் இவற்றால் ஏற்பட்ட பலன்தான் விலைவாசிகளின் உயர்வு என்பதை ஜனங்கள் நன்கு தெரிந்துகொண்டு விட்டார்கள்.

**கோவி:** சென்னையில் விலைவாசி உயர்வு எதிர்ப்பு ஊர்வலம் நடந்த அன்று, ராஜாஜி அவர்கள் வேறோர் இடத்தில் நடந்த பிரும்மாண்டமான பொதுக்கூட்டத்தில் விலைவாசி உயர்வின் காரணங்களை எடுத்துரைத்தார். அந்தப் பொதுக்கூட்டத்துக்கு நான் போயிருந்தேன். '**திட்டங்களை நிறைவேற்றுகிறேன்' என்ற பெயரால் அளவுக்கு மீறி ஏராளமாகக் காகித நோட்டுக்களை அச்சடித்துக் காங்கிரஸ்**

ஆட்சி' வெளியிட்டு வருகிறது. இதுவே விலைவாசி உயர்வுக்குக் காரணம். நாட்டில் விளை பொருள்களுக்குப் பஞ்சமில்லை. அதிகமாகவே பொருள்கள் உற்பத்தியாகி யிருக்கின்றன. விலை உயர்வுக்குக் காரணம், நோட்டுப் பெருக்கம் தான் என்று கூறினார்.

**அப்பு:** நோட்டுச் செலாவணியின் மதிப்புக் குறையக் குறைய விலைவாசிகளும் ஏறுகின்றன. ஜனங்களால் தாளமுடியாத அளவுக்கு வரி விதித்து விட்டார்கள். தலைக்குமேல் அயல் நாடுகளிலிருந்து கடனும் வாங்கிவிட்டார்கள். வீம்புக்காகத் திட்டங்களை நிறைவேற்றி வருகிறார்கள். இந்த அழகில் மூன்றாவது திட்டம் வேறு பெரிய அளவில் வரப்போகிறது.

**கோவி:** சென்னைக்கு ஜெர்மன்காரர்கள் கோஷ்டி ஏதோ வந்திருக்கிறது என்று கேள்விப்பட்டேனே, அது என்ன?

**அப்பு:** கிழக்கு ஜெர்மனியிலிருந்து டான்ஸ் கோஷ்டி ஒன்று வந்திருந்தது. அவர்களுடைய நடனத்தைப் பார்த்துவிட்டு வந்தேன்.

**கோவி:** அமெரிக்க டான்ஸ் வந்து விட்டுப் போன பிறகு இந்த டான்ஸ் வந்ததாக்கும். ஏதேது டான்ஸ்கள் போகிற போக்கு...

**அப்பு:** 'போக்கு டான்ஸ்' தான்.

**கோவி:** அப்படியென்றால்?

**அப்பு:** 'ஃபோக்கு டான்ஸ்' என்றால் கிராமிய நடனம் என்று அர்த்தம். சென்னைக்கு வந்த கோஷ்டியார் மிக நன்றாக அந்தத் தேசத்துக் கிராமிய நடனங்களை ஆடிக் காட்டினார்கள். சில அயிட்டங்களில் நமது பரத நாட்டியத்தின் சாயல்கள்கூடத் தோன்றின. 'மலை நாட்டு நடனம்' என்று ஓர் ஆடவனும், பெண்ணும் கை கோத்துக் கொண்டு நடனம் ஆடினார்கள் பாரும், அது ஏறக்குறைய நமது ராதா கிருஷ்ண நடனம் போல் தோற்றமளித்தது.

**கோவி:** இந்த நடன விழாவை இங்கே முன்னின்று யார் நடத்தி வைத்தார்களோ?

**அப்பு:** நம்ப 'சென்னை நாட்டிய சங்கம் தான்'. வேறே யாருமில்லை.

**கோவி:** நம்ம கிராமிய நடனங்களுக்கும் அவர்களுடைய நடனங்களுக்கும் ரொம்ப வித்தியாசம் உண்டா, இல்லையா?

**அப்பு:** வித்தியாசங்கள் எவ்வளவோ இருந்தாலும் ஒரு விதத்தில் எனக்கும், நடன கோஷ்டித் தலைவராக வந்த ஜெர்மானியர் திரு கிளிபோர்க் அவர்களுக்கும் முகத்தோற்றம் ஒரே மாதிரியாயிருந்தது. என்னைப் பார்த்தால் அவரைப் பார்க்க வேண்டாம். அவரைப் பார்த்தால் என்னைப் பார்க்க வேண்டாம். இருவருடைய முகமும் ஒரே மாதிரியாயிருந்தது. இதை அன்று அண்ணாமலை மன்றத்தில் பல பேர்கள் என்னிடமே கூறினார்கள். நானும், அந்த நடன கோஷ்டித் தலைவரைச் சந்தித்துக் கைகுலுக்கினேன்.

**கோவி:** நீரே ஒரு போக்குதான்!

**அப்பு:** நீயும் ஒரு 'போக்கு' தான்!

— **'கொக்கி'**



விஜயவாடா அகில இந்திய ரேடியோவைச் சேர்ந்த திரு எஸ். கிருஷ்ணசாமி அவர்களின் புதல்வர் திரு சீனிவாசன் சௌ. சுந்தராவை மணந்தார்.



கோவை பீடில் சீனிவாசன் அவர்களின் புதல்வி சௌ. லோகநாயகிக்கும், திரு பெருமாள்சாமிக்கும் விவாகம் நடந்தது.



சென்னை அக்கௌண்டெண்ட் ஜெனரல் காரியாலயத்தைச் சேர்ந்த திரு விசுவநாதன் சௌ. தங்கத்தை மணந்தார்.

# வட்டமேஜை



திருவாளர் ராஜாஜி அவர்களுக்கு,

1-11-59 தேதி கல்கி இதழில் மரம் பேசுகிறது என்ற தலைப்பில் நீங்கள் எழுதிய கட்டுரையை படித்தோம். முதிர்ந்த அரசியல்வாதியாகிய தாங்கள் ஒரு வியாபார சமூகத்தை குறித்து இப்படி கீழ்தரமாக எழுதி இருப்பதை பற்றி வருந்துகிறோம். வருந்துவதுடன் தங்கள் தவறை வாபஸ் வாங்குமாறு கேட்டு கொள்கிறோம்.

ஹூட்வார்ப் வால்டாக்ஸ் ரோடு, 17-11-59 — எஸ். தங்கசாமி நாடார் (செயலாளர்) சென்னை விறகு வியாபாரிகள் சங்கம்.

ராஜாஜியின் விளக்கம் : **பலன் தரும் மரங்களை வெட்டலாகாது என்பதுதான் கதையின் கருத்து. விறகு வியாபாரத்தைக் குறைத்துச் சொல்லும் கருத்தே இல்லை. விறகு இல்லாமல் வாழ்க்கை எப்படி நடைபெறும் ?**

★

இப்பொழுது எங்கு பார்த்தாலும் காங்கிரஸ்காரர்கள் சுதந்திரக் கட்சியைப் பற்றியே பேசுகிறார்கள். எங்கள் கல்லூரிக்கு மத்திய அரசாங்க மந்திரி ஒருவர் வந்திருந்தார். அவரிடம் "திட்டக்குழு" [Planning Forum] என்பது பற்றிப் பேசும்படி வேண்டிக் கொள்ளப்பட்டது. அவர் அதைத் தவிர மற்றவைகளைப் பற்றிப் பேசிவிட்டு உடனே சுதந்திரக் கட்சியைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டார். வெளியில்தான் பிரசாரம் செய்கிறார்களே, கல்லூரிகளில் வந்துமா பிரசாரம் செய்ய வேண்டும்? மற்றக் கட்சிகள் மாணவரிடையே அரசியலைப் புகுத்தி விடுகின்றன என்கிறார்களே காங்கிரஸ்காரர்கள்; அவர்கள் இப்பொழுது என்ன செய்கிறார்கள்?

திருச்சி 16—11—59 — பி. ஏ. அனந்தநாராயணன்

★

மத்திய சர்க்கார் மாகாண முதன் மந்திரிகளுக்கு இயந்திரச் சாகுபடி முறையைப் புகுத்துவதற்காக ஏற்ற நிலங்களைத் தேர்ந்தெடுக்கும்படி தாக்கீது அனுப்பி இருப்பதாகத் தினப் பத்திரிகைகளின் வாயிலாக அறிந்தேன். இதற்காக, பத்து கோடி ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. எரிகிற வீட்டில் எடுத்தது ஆதாயம் என்பதற்கு ஏற்றாற்போல் இன்றையக் காங்கிரஸ் கட்சியின் சர்க்கார் செல்லுகிறது.

ஒழுங்கான எதிர்க்கட்சி இல்லாததால்தான் சர்க்காரின் அறிவு அற்ற போக்கைக் கண்டிக்க முடியவில்லை. இயந்திரச் சாகுபடி முறையால் வேலையில்லாத் திண்டாட்டம் இன்னும் பெருகிக்கொண்டே போகும். அது மாத்திரம் அன்றி, சர்க்கார் நினைத்துக் கொண்டிருக்கிறபடி உணவுஉற்பத்தி ஒன்றும் பெருகி விடாது. சர்க்கார் ஒரு காரியத்தை எடுத்துக் கொண்டால் பணம் எப்படித் தண்ணீர் போல் பெருவாரியாகச் செலவழிகிறது என்பதும் அதன் பலன் பூஜ்யம் என்பதும் நாடறிந்த உண்மை.

அம்பாசமுத்திரம் 17—11—59 — வி. எஸ். மணியம்

★

ஜனநாயக சர்க்காரில் எல்லா வியாபாரிகளையும் ஒரேமாதிரி பாவிக்க வேண்டும்.

நான் கைத்தறி வியாபாரி. எனக்கு வருமான வரி உண்டு. சர்க்காரால் ஆதரிக்கப்படும் கூட்டுறவுச் சங்க வியாபாரிகளுக்கு வருமானவரி கிடையாது. தீபாவளி,பொங்கல் முதலிய விசேஷ காலங்களில் கூட்டுறவு வியாபாரிகளுக்கு ரூபாய் 1-க்கு ஒரு அணா, இரண்டு அணா தள்ளுபடி கொடுத்து ஆதரிக்கிறார்கள். தனியார் துறை வியாபாரிகளுக்கு ரிபேட் தள்ளுபடி சர்க்கார் கொடுப்பதில்லை. கூட்டுறவுச் சங்க வியாபாரிகளுக்குச் சர்க்கார் கடன் கொடுத்து உதவுகிறார்கள். தனியார் துறை வியாபாரிகளுக்குச் சர்க்கார் கடன் கொடுப்பதில்லை.

நான் கூட்டுறவுச் சங்கத்தில் உற்பத்தி ஆகும் ஜவுளிகளுடன் போட்டிபோட வேண்டியிருக்கிறது. அதனால் போட்டியைச் சமாளிக்க முடியவில்லை.

எது எடுத்தாலும் எந்தத் தொழில் எடுத்தாலும் கூட்டுறவு என்று பெயர் வைத்து, சர்க்கார் தொழில் நடத்தினால், தனிப்பட்ட வியாபாரிகள் என்ன தொழில் செய்து பிழைப்பது? தனிப்பட்ட வியாபாரிகள் கூட்டுறவு வியாபாரிகளால் பலவிதத் தொந்தரவுகளை அடைகிறார்கள். தனியார்துறை வியாபாரிகள் தங்கள் பரம்பரைத் தொழில் செய்து ஜீவனம் செய்ய வழியில்லையா ?

மதுரை 18—11—59 — ஆர். எல். ராமாச்சாரி

## ராஜாஜியின் சுற்றுப்பிரயாணம்

கோவை ஜில்லா சுதந்திரக் கட்சி மகாநாட்டை இம் மாதம் 29ந் தேதி சிறப்பாக நடத்த ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. இம் மகாநாட்டை திரு வி. டி. ராஜன் துவக்கி வைக்கிறார். பேராசிரியர் எம். ரத்தினசுவாமி தலைமை வகிக்கிறார். ராஜாஜியும் கலந்து கொள்கிறார். டிசம்பர் 1உ ராஜாஜி சேலம் ஜில்லா ஹோசூருக்கு விஜயம் செய்து, அங்கு வர்த்தகர் சங்கக் கூட்டத்தில் பேசுகிறார்.



# ஆயிரக்கணக்கான இளைஞர்களுக்குத் துர்காபூரில் புதுவாழ்வு தொடங்குகிறது

துர்காபூரில் பயிற்சி முடிந்த இவ்விளைஞர், இத்துறையில் தனது முதல் ஸர்வே வேலையில் ஈடுபடுகிறார். அவர் அனுபவமும், வேலையில் திறமையும் பெற்று விட்டால், அதிக சம்பளம் பெறுவார். அதோடு அவருக்கு நம்பிக்கை தரும், நல்லதொரு எதிர்காலமும் உண்டு.

இன்று துர்காபூரில், பத்துலக்ஷம் டன் எஃகு உற்பத்திசெய்யும், பிரும்மாண்டமான யந்திரங்களை நிர்மாணிக்கும் பொறுப்பேற்றுள்ள 'இஸ்கான்' ஏற்கனவே ஏராளமான இந்திய இளைஞர்கள், தொழில் நுணுக்கத் துறையில் பயிற்சிபெற உதவியுள்ளது. இது வருங்காலத்தில், இந்திய எஃகு தொழிற்சாலைகளை மட்டுமின்றி, அவைகளை இயக்குவதற்குத் தேவையான தொழில் வல்லுனர்களையும் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு, இந்திய இளைஞர்களுக்கு, இங்கும், இங்கிலாந்திலுள்ள எஃகு தொழிற்சாலைகளிலும், அதைப்பற்றி போதிக்கவும், அவர்களும் உடன் இருந்து பணிபுரியும் வாய்ப்பு பெறவும், 'இஸ்கான்' வகுத்துள்ள கூட்டுறவு திட்டத்தின் முக்கிய அம்சமாகும்.

# இஸ்கான்

இந்தியன் ஸ்டீல் ஒர்க்ஸ் கன்ஸ்ட்ரக்ஷன் கோ. லிட்.

டேவி அண்டு யுனைட்டெட் என்ஜினீரிங் கம்பெனி லிமிடெட். ஹெட்ரைட்ஸன் & கம்பெனி லிட்., ஸைமன் கார்வ்ஸ் லிட்., தி வெல்மேன் ஸ்மித் ஓவன் என்ஜினீரிங் கார்ப்பொரேஷன் லிட். தி ஸிமென்டேஷன் கம்பெனி லிட். பிரிட்டிஷ் தாம்ஸன்-ஹுஸ்டன் கோ. லிட்., தி இங்கிலிஷ் எலக்ட்ரிக் கம்பெனி லிட். தி ஜெனரல் எலக்ட்ரிக் கோ. லிட். மெட்ரோபோலிடன் - விக்கர்ஸ் எலக்ட்ரிகல் எக்ஸ்போர்ட் கோ. லிட். ஸர் வில்லியம் அர்ரால் & கம்பெனி லிட்., க்ளிவ்லண்ட்பிரிட்ஜ் & என்ஜினீரிங் கோ. லிட்., டோர்மேன் லாங் (பிரிட்ஜ் & என்ஜினீரிங்) லிட்., ஜோஸப் பார்க்ஸ் & ஸன் லிட். இஸ்கான் ஸ்டுவர்ட்ஸ் அண்டு லாய்ட்ஸ் லிட். அண்டு பெரிய ஜெனரல் கேபிள் மூக்ஸ் லிட்.)

இந்தியாவுக்காக வேலை செய்யும் பிரிட்டிஷ் கம்பெனிகள்

---

# ஆளும் கட்சியில் அலங்கோலம்

கொழும்பு, நவம்பர் 18உ

இலங்கையில் ஒரு தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நிறுவும் பிரச்னை மேலும் மேலும் நெருக்கடியை அடைந்து வருகிறது. சென்ற வாரம் தமிழ்ப் பல்கலை இயக்கப் பிரமுகரும் அட்டர்னி ஜெனரலுமான திரு எம். திருச்செல்வம் பிரதம மந்திரி திரு விஜயானந்த தஹநாயகாவைச் சந்தித்து, தமிழ்ப் பல்கலைக் கழகத்தைப் பற்றிப் பேசினர். தமிழ்மொழி மூலமாகப் பாட போதனை செய்யும் ஒரு பல்கலைக் கழகத்தின் அவசியத்தைப் பிரதமர் திரு தஹநாயகா கொள்கையளவில் ஒப்புக்கொண்டார். ஆயினும் இது விஷயமாகத் தமிழர்கள் ஏகோபித்த முடிவு செய்து ஒருமனப்பட்ட ஒரு மகஜரைச் சமர்ப்பிக்க வேண்டுமென்றும், அப்பொழுதுதான் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை ஸ்தாபித்துக் கொடுப்பது பற்றி அரசாங்கம் ஆலோசனை செய்ய முடியுமென்றும் பிரதம மந்திரி பதிலளித்தாராம். அதாவது சென்ற சில தினங்களுக்கு முன்னால் யாழ்ப்பாணம் பரமேசுவராக் கல்லூரி அதிபரும் முன்னாள் தபால் தகவல் இலாகா அமைச்சருமான திரு எஸ். நடேசன் பிரதமரைச் சந்தித்து யாழ்ப்பாணத்தில் ஒரு தமிழ் இந்து பல்கலைக் கழகத்தை நிறுவிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டதைப் பிரதமர் கவனத்தில் கொண்டே தமிழர்களுக் கிடையில் ஏகோபித்த அபிப்பிராயம் ஏற்பட முடியாதென்று கருதி இவ்விதம் சொல்லியிருக்க வேண்டுமென்று கருதப்படுகிறது. சில ஆண்டுகளுக்கு முன்னால் யாழ்ப்பாணத் துறைமுகங்களில் ஒன்றைப் பிரயாணிகள் போக்குவரத்துக்குத் திறந்து விடப்போவதாக அரசாங்கம் அறிவித்தவுடன் யாழ்ப்பாணத்திலுள்ள எந்தத் துறைமுகத்தைத் திறப்பதென்பதைப் பற்றித் தமிழ்த் தலைவர்களுக் கிடையில் கடுமையான கருத்து வேற்றுமை ஏற்பட்டது. "நீங்கள் ஒற்றுமையாக ஏதாவது ஒரு துறைமுகத்தைத் திறக்குமாறு கேளுங்கள். பிறகு அதைப் பற்றி யோசிப்போம்" என்று அரசாங்கம் பதில் அளித்தது. இன்று வரையில் தமிழர்களிடையில் இது விஷயமாக ஒற்றுமை ஏற்படாதது அரசாங்கத்துக்குத் தட்டிக் கழிக்கச் சௌகரியமாகப் போய்விட்டது. அதேபோன்ற ராஜதந்திரத்தைத் தஹநாயகா அரசாங்கமும் கையாளுவதாகக் கருதப்படுகிறது. கல்வி விஷயத்தில் கூடத் தமிழ் மக்களிடையில் கருத்து ஒற்றுமை நிலவ முடியாமல் இருப்பது தமிழர்களின் மிகப் பெரிய சாபத்தீடாகவே தோன்றுகிறது. ஆயினும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தினர் இதற்காகச் சற்றும் கவலைப் படவில்லை. திருகோண மலையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நிறுவ அவர்கள் ஏற்கெனவே நிலம் வாங்கியிருப்பதுடன் கட்ட வேலைகளையும் ஜரூராக ஆரம்பித்து நடத்த ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள்.

## விபரீதமான உத்தரவு

வெறுப்புவாதப் பேயைக் கிளப்பிய தனிச் சிங்களச் சட்டம் நாட்டில் சர்வநாசம் உண்டு பண்ணியதை எல்லோரும் நன்கு அறிந்திருந்தும் இப்பொழுது அதே பூதத்தை மறுபடியும் கிளப்பப் பிரதமமந்திரி ஒரு புதிய உத்தரவைப் பிறப்பித்திருக்கிறார். வர்த்தக ஸ்தாபனங்களெல்லாம் அரசாங்கத்துடன் சிங்கள மொழியிலேயே கடிதப் போக்குவரத்து நடத்துமாறு கட்டாயப்படுத்தப்பட வேண்டுமென்று இலாகா தலைவர்களுக்குப் பிரதமர் வெளியிட்டிருக்கும் சுற்று நிருபம் வர்த்தக வட்டாரங்களில் மிகுந்த அதிருப்தியை விளைவித்திருக்கிறது. இலங்கையில் வர்த்தகத் துறையில் தமிழர், முஸ்லிம்கள், ஐரோப்பியர், பரங்கியர் முதலான பலரும் ஈடுபட்டிருக்கிறார்கள். இவ்விதம் இருக்கையில் சிங்களம் தெரியாத வர்த்தகர்களெல்லாம் சிங்களத்தில்தான் அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து நடத்த வேண்டுமெனக் கட்டாயப்படுத்துவது பெரிய அநீதியென்பது ஒருபுறமிருக்க, இது வர்த்தகத்தைக் கடுமையாகப் பாதிப்பதாகவும் இருக்கும். இந்த உத்தரவைச் சிங்கள வர்த்தகச் சங்கத்தினரே கடுமையாக ஆட்சேபித்திருப்பதிலிருந்து இது எவ்வளவு பெரிய அநியாயச் சட்டமென்பது தெளிவாகும். அரசாங்கத்தில் ஒரேயொரு தமிழ் அங்கத்தினரான உதவி மந்திரி திரு எஸ். யு. எதிரிமன்னசிங்கம் பிரதமரின் இந்த உத்தரவை ஆட்சேபித்து ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறார்.

## மற்றொரு நம்பிக்கையில்லாத் தீர்மானம்

பார்லிமெண்டின் அடுத்த கூட்டத்தில் மற்றொரு நம்பிக்கையில்லாத் தீர்மானம்

# சிரிக்காதே!

## பையன் புகார்!

**உபாத்தியாயர்:** தகப்பனார் செய்யும் தவறெல்லாம் பிள்ளைகளைப் பாதிக்கும் என்பதற்குச் சந்தர்ப்பம் கூறு!

**மாணவன்:** ஆமாம்! பாதிக்கிறது, சார்! வீட்டுக் கணக்கை யெல்லாம் என் தகப்பனார் தவறாகச் செய்து நான் உங்களிடம் அடி வாங்கிக் கொள்கிறேன்!

## பரிகொடுத்தவர்!

"என்ன ஐயா, எதையோ பறி கொடுத்த மாதிரி உட்கார்ந்திருக்கி றீர்கள்!"

"'பறி' கொடுக்கலே சார்! பரி ஒண்ணு வாங்கினேனுங்க. அது வண்டி யில் பூட்டினா உதைக்குதுங்க! அதான்!"

## சமாதானம்!

ஒருவர் பழைய கார் ஒன்று வாங்கி னார். 'காரில் உள்ள எல்லாப் பாகங்களி லிருந்தும் ஓசை வருகிறது. ஹாரனி லிருந்து மட்டும் ஓசை வருவதில்லை' என்று கடிதம் எழுதினார். அதற்குக் கார் விற்றவர், "அதென்ன, பிரமாதம்! ஹாரனை ரிப்பேர் செய்து விடலாம்" என்று பதில் எழுதினார்

## அவர் கவலை!

"கையில் பணமில்லை. இந்த வெள்ளிப் பாத்திரத்தை அடகு வைக்கக் காக கடைக்குப் போனேன்!"

"அட! என்னிடம் ஒரு வார்த்தை சொல்லி யிருக்கக் கூடாதோ!"

"ஏன்! சொன்னால் நீங்கள் பணம் கொடுத்து உதவி இருப்பீர்களோ?"

"இல்லை. நானும் எனக்காக ஒரு பாத் திரம் கொடுத்து அனுப்பி இருப்பேனே!"

## கோடி விஷயம்!

**கணவன்:** நாம் கஷ்டங்களின் கோடிக்கு வந்து விட்டோம்.

**மனைவி:** அதற்கு இரண்டு கோடி உண்டு. எந்தக் கோடி?

## தோல்வியின் மிச்சம்!

"நீர் எப்படி இவ்வளவு பணம் சேக ரித்து வைத்திருக்கிறீர்கள்?"

"எல்லாம் வேகம்தான் காரணம்!"

"அப்படி என்றால்?..."

"என் மனைவி வேகமாகச் செலவு செய்தாள். அதைவிட வேகமாக நான் சம்பாதிக்கத் தொடங்கினேன். அவளுக் குத் தோல்வியை உண்டுபண்ணினேன். அந்தத் தோல்வியின் மிச்சம்தான் இந்தப் பணமாக்கும்!

விவாதத்துக்கு வரவிருக்கிறது. சென்ற முறை அரசாங்கத்தின் மீது நம்பிக்கை யில்லாத் தீர்மானம் விவாதிக்கப்பட்ட பொழுது அதிகக் கண்டனத்துக்கு உட் பட்டது நிதி மந்திரி திரு ஸ்டான்லி சொய்ஸா என்பவரே யாகும். காலஞ் சென்ற பிரதம மந்திரியைச் சுட்ட துப்பாக்கியின் சொந்தக்காரர் தமது நண்பர் என்பதை நிதி மந்திரி பார்லி மெண்டில் பகிரங்கமாக ஒப்புக்கொண் டதிலிருந்து கொலை வழக்கு விசாரணை முடியும்வரையிலாவது அவர் மந்திரிப் பதவியிலிருந்து தற்காலிகமாக விலகி யிருக்க வேண்டுமென்று பலமாகக் கோரப்பட்டு வருகிறது. இந்த நம் பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது சுயேச்சையாக வோட்டுக் கொடுக்கும் உரிமை வேண்டுமென்று அரசாங்கக் கட்சி அங்கத்தினர்களே கோரி வருகிறார்கள். இத்தீர்மானம் நிறைவேறினால் பார்லி மெண்டைக் கலைப்பதைத் தவிர தமக்கு வேறுவழியில்லை யென்று பிரதம மந்திரி சொல்லி வருவதாகக் கூறப்படுகிறது. இது எப்படியாயினும் அரசாங்கம் ஆட்டம் கொடுத்து வருவது வெளிப் படையாகத் தெரிந்த விஷயமாதலால் அதன் ஆயுட்காலம் வெகு காலத்துக்கு நீடிக்க முடியாதென்பதை மட்டும் எல் லோரும் உணர்ந்திருக்கிறார்கள். அரசாங் கக் கட்சிக்குள்ளேயே கட்சிகள் பல தோன்றித் தகராறு இருந்து வருகிறது.

## காங்கிரஸும் தேர்தலும்

**கா**ங்கிரஸ் காரியக்கமிட்டியின் முக் கியமானதொரு கூட்டம் இவ்வாரம் நடைபெற்றது. அக்கிராசனர் திரு எஸ். சோமசுந்தரம் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். அடுத்து வரும் வவுனியா உப தேர்தலில் காங்கிரஸ் தனது அபேட்ச கரை நிறுத்தி வைத்துப் போட்டியிடு வதா அல்லது வேண்டாமா என்ற பிரச் னையைப் பற்றி நீண்ட நேரம் வரை விவாதம் நடைபெற்றது. இதில் அங்கத் தினர்களிடையில் கருத்து வேற்றுமை தென்பட்டது. பார்லிமெண்டின் ஆயுட் காலமே சந்தேகத்தில் இருக்கையில் உப தேர்தலில் பணத்தையும் பிரயாசையை யும் விரயம் செய்ய வேண்டுமா என்று பலர் வினவினார்கள். வவுனியாவின் முன்னாள் அங்கத்தினரான திரு ஸி. சுந் தரலிங்கம் தாமாக வலுவில் ராஜினாமாச் செய்தபடியால் அவர் மறுபடியும் தேர்த லுக்கு நிற்பதாயின் அவருடன் போட்டி யிடக் கூடாதென்றும் அவர் அபேட்சக ராக நிற்காதபட்சத்தில் அந்தத் தேர்த லில் போட்டியிடுவதா, வேண்டாமா என்பதைப் பிறகு முடிவு செய்வதென்றும் காங்கிரஸ் தீர்மானித்தது. ஆயினும் அடுத்த பொதுத் தேர்தலில் தமிழர் வாழும் சகல தொகுதிகளிலும் காங்கிரஸ் தனது அபேட்சகர்களை நிறுத்தி வைத்துப் போட்டியிட வேண்டுமென்று காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது. —ரஜனி

# புயலுக்குப் பின்...

கிரிஜா

கல்யாண் :

இரண்டாண்டுகளுக்கு முன் வைத்தியக் கல்லூரியை விட்டு நான் வெளி வந்த போது தொழிலே எங்கே தொடங்கலாம்' என்ற ஆலோசனைக்கே இடம் வைக்கவில்லை என் மாமா. திருவாரூர்க் கமலாலயக் கரையில் உள்ள தமது வீட்டை என் தொழிலுக்காக ஒதுக்கி அதில் சகல ஏற்பாடுகளையும் செய்து என்னையும் ஆசி கூறி அனுப்பி வைத்தார். தாய். தந்தை இருவருமற்ற எனக்கு அவரே எல்லாமாக இருந்தார். 'கல்யாணசுந்தரம்' என்ற என் பெயரையும் குறைத்துக்'கல்யாண்' என்றே அழைப்பார் மாமா. அதனுல் அப் பெயரையே பெயர்ப் பலகையிலும் பொறித்துக் கொண்டு தொழிலேத் தொடங்கினேன்.

ஆண்டு இரண்டில் தொழில் துறையில் நல்ல உற்சாகமான முன்னேற்றம் இருந்தது. ஆனல் மனத்தில் மட்டும் உற்சாகம் குன்றித்தான் இருந்தது. காரணம் உற்சாகம் ஊட்டும் நண்பர் எவரும் கிடைக்காததே.

அன்று கமலாலயம் கீழ்க்கரைப் பக்கமாக வந்து கொண்டிருந்தவன் தற்செயலாகத்தான் அந்தப் புதிய போர்டைக் கவனித்தேன். மனம் உற்சாகத்தால் துள்ளியது. 'டாக்டர் சுந்தர் எம். பி. பி. எஸ்.' என்று அதில் பொறித்துள்ள பெயரைப் பலமுறை எனக்குள் சொல்லிக் கொண்டேன். என் மனத்தை உற்சாகம் கொள்ளச் செய்ய இதோ ஒரு நண்பர் கிடைக்கப் போகிறர்.

இரண்டு முறை அந்தப் பக்கமே உலவினேன். அந்தப் புதிய நபரின் தரிசனம் எனக்குக் கிடைக்கவில்லே. நாமே முன் சென்று அறிமுகம் செய்து கொள்வது என்ற துணிவுடன் அந்தப் புதிய வைத்திய இல்லத்துக்குள் நுழைந்தேன்.

சுந்தர் :

தமது அருமை மகளின் இல்வாழ்வில் துன்பத்தையே கண்டு துடித்தாராம் என் தாத்தா. அதனுல் இல்வாழ்வில் என்னையும் பிடித்துத் தள்ளத் துணிவின்றிப் படிக்க வைத்து விட்டார். அவர் அப்படிச் செய்ததால் தான் நான் ஒரு டாக்டர் பட்டத்தைப் பெற முடிந்தது. அன்னை தந்தை இருவருமற்ற எனக்குத் தாத்தாதான் சகலமும். அருமைப் பேத்தியான என்னையே பேரனுகவும் கண்ட தாத்தா, சுந்தர் என்றுதான் அருமையாக அழைப்பார். அதையே பெயர்ப் பலகையிலும் பொறித்துக் கொண்டேன்.

தாத்தாவுக்குச் சொந்தமான வீடு. நில புலன்களெல்லாம் வேளூர் என்று வழங்கும் கீழ்வேளூரில்தான் இருந்தன. சொந்த ஊரும் அதுதான். ஆகவே பல சௌகரியங்களை உத்தேசித்து அருகிலுள்ள திருவாரூரில் கமலாலயக் கரையில் என் தொழிலேத் தொடங்க ஏற்பாடு செய்தார் தாத்தா.

முருகவேளின் இருப்பிடமான கீழ்வேளூரில் பிறந்து வளர்ந்த எனக்கு அந்தப் பெருமானிடம் பக்தி ஏற்பட்டதில் வியப்பில்லே. மருத்துவ இல்லத்தை வகைப்படுத்துமுன் முருகவேளின் படத்தை எடுத்து மாட்டி, மலர்மாலேயையும் சூட்டினேன். அப்போதுதான் அந்த வேடிக்கை நடந்தது. வேகமாக உள்ளே நுழைந்த ஒருவர், '' டாக்டர் சுந்தரம் இருக்கிறரா ?'' என்றர். எனக்கு வியப்பாக இருந்தது. நான்தான் டாக்டர் சுந்தரம். உங்களுக்கு என்ன வேண்டும் ?' என்று நான் கேட்டிருக்கலாம். ஏதோ ஒரு குறுகுறுப்பு என்னை அவ்விதம் சொல்ல விடவில்லே. '' உங்களுக்கு என்ன வேண்டும் ?'' என்றேன். அவர் முகத்தில் புன்னகை. '' டாக்டர் சுந்தரத்தைப் பார்க்க வேண்டும் '' என்றர் வந்தவர்.

எனக்குச் சிரிப்பு வந்தது. 'டாக்டர் சுந்தரத்தைப் பார்க்க வேண்டுமா ? அவரை உங்களுக்குத் தெரியுமா ?'' என்று கேட்டேன்.

சிரித்த அவர் முகம் 'ஜிவ்'வென்று சிவந்தது. '' மன்னிக்கவும் ; டாக்டர் சுந்தரம் இருக்கும் போது வந்து பார்த்துக் கொள்கிறேன் '' என்று சொல்லி விட்டு அவர் வேகமாகப் போய் விட்டார். அவர் கோபம் எனக்கு வேடிக்கையாக இருந்தது.

மருத்துவ இல்லத்தைச் சரிவர ஒழுங்கு படுத்தி, அழகுபடுத்த எனக்கு இரண்டு தினங்கள் பிடித்





தன. பிறகுதான் என்னுல் ஊரைச் சுற்றிப் பார்க்க முடிந்தது.

கமலாலயக் கரையின் மறு பக்கத்திலுள்ள அழகான இல்லத்தின் வாசலில் பதித்திருந்த பலகையில் உள்ள பெயரைப் பார்த்ததும் திகைத்தேன். ஆவலால் மனம் துள்ளியது. என் கல்லூரித் தோழி கல்யாணியின் பெயரல்லவா அது?

கல்லூரித் தோழி கல்யாணி இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே படிப்பை முடித்துப் புறப்பட்டவள். படிப்பின் சுமையில் மூழ்கியிருந்த எனக்கு அவள் எங்கே தொழிலைத் தொடங்கினுள் என்று அறிய அவகாசம் இல்லை. அவள் நினைவை மட்டும் மறக்கவில்லை. கலகலப்பாகப் பேசிப் பழகும் அவளை நாங்கள் 'கல்யாண் !' என்றே அருமையாக அழைப்போம். அதை மறக்காமல் பெயர்ப் பலகையிலும் போட்டு விட்டாளே ! புது ஊரில் பழைய நேசம். எவ்வளவு நல்ல வாய்ப்பு. இனிய நினைவுகள் மனத்தில் எழும்போது வேறு எதையுமே மனம் சிந்திப்பதில்லை. பலகையில் இருக்கும் பெயர் கல்யாணியுடையதுதான் என்று தீர்மானமாக நினைத்துவிட்டதால் அந்த இல்லத்தில் நுழைய எனக்குத் தயக்கமே ஏற்படவில்லை. 'கல்யாண் !' என்று அழைத்தபடியே ஆவலுடன் நுழைந்தேன்.

**கல்யாணி :**

இரண்டு தினங்கள் வரையில் டாக்டர் சுந்தரத்தைப் பார்க்கப் போக முடியாமல் அலுவல்கள். ஒன்றன்பின் ஒன்ருகப் பல கேஸ்கள். அலுவல்களிடையே அன்று நடந்த அந்தச் சம்பவமும் மறக்காமல் வந்து, வந்து நினைவைக் கவர்ந்தது....'அவரைத் தெரியுமா உங்களுக்கு?' என்று கேட்டதற்கு, 'தெரியாது அறிமுகம் செய்து கொள்ளவே வந்தேன்' என்று சொல்லியிருக்கலாம். ஆனுல் அப்பெண்ணின் குரலில் இழைந்த பரிகாசம் என்னைக் கோபம் கொள்ளச் செய்து விட்டது. வியப்பால் விரிந்த கண்கள் ! குறும்பால் மலர்ந்த இதழ்கள் ! மெல்ல அசை போட்டது மனம். அவள் டாக்டர் சுந்தரத்தின் மனைவியாக இருக்கலாம்....இருக்காது.

டாக்டர் சுந்தரத்தைத் தெரியுமா உங்களுக்கு?' என்று கேட்டாளே? டாக்டரின் மனைவியாயிருந்தால் பெயரைச் சொல்லத் துணிய மாட்டாள். அப்பெண் டாக்டரின் சகோதரியாக இருக்கலாம். அசை போட்ட மனம் வலை பின்னத் தொடங்கி விட்டது.

'அன்று எப்படியும் சுந்தரத்தைச் சந்தித்து விடுவது' என்று தீர்மானித்துக் கொண்டேன். அந்தப் பக்கம் நோயாளி ஒருவரைப் பார்க்க வேண்டிய கடமையும் இருந்ததால் என் அலுவல் உடைகளை அணிந்து கொண்டு, சுவாஸக் குழாயையும் கழுத்தில் மாட்டிக் கொண்டு திரும்பினேன். என்ன அதிசயம் ! 'கல்யாண் !' என்று அழைத்தபடி உள்ளே வந்து கொண்டிருந்தாள் சுந்தரத்தின் வீட்டில் நான் கண்ட பெண்மணி.

ஆவலுடன் உள்ளே நுழைந்தவள் நிமிர்ந்து பார்த்ததும் நிலை மிதித்தவள் போல் திகைத்து நின்று விட்டாள். அவள் முகம் வெளிறியது. நெற்றியில் முத்திட்டது வியர்வை: தளிர் உடல் இலேசாக நடுங்கியது. அச்சத்தாலும் அவமானத்தாலும் திணறிய அவள் நிலை என் மனத்தை உலுக்கியது. அப்போதுதான் பளிச்சென்று என் மூளையில் ஒரு விஷயம் தாக்கியது. அன்று நானும் இதே பிழையைத்தான் செய்திருக்கிறேன். என் முன் நிற்கும் பெண்மணிதான் டாக்டர்..... என் எண்ணங்கள் மேலே தொடருவதற்கு முன் அப்பெண், ''மன்னியுங்கள்; நான் தவருக...'' மேலே சொல்ல முடியாமல் தலை கவிழ்ந்தவள் திரும்பி நடக்கத் தொடங்கி விட்டாள்.

என் உள்ளம் உதட்டில் வந்துவிட்ட மாதிரி, ''சற்று நில்லுங்கள் !'' என்றேன். அவள் நின்று விட்டாள். ஆனுல் தலை நிமிரவோ, திரும்பவோ இல்லை. சற்று அருகில் வந்தவள், ''மன்னிக்க ஒன்றுமில்லை; அன்று நான் செய்த பிழையைப் போலவே இன்று நீங்களும் செய்தீர்கள் ! டாக்டர் சுந்தர் தாங்கள்தானு?'' என்று கேட்டேன்.

''ஆம் : நான்தான் !'' பதில் இறுத்தபடி நிமிர்ந்தவள் முகம் சிவக்க மீண்டும் தலை குனிந்து கொண்டாள்.

''நான் ஒரு தோழனைத் தேடி உங்கள் வீட்டில் நுழைந்தேன். நீங்கள் ஒரு தோழியைத் தேடி என் வீட்டில் நுழைந்தீர்கள். இதெல்லாம் நமது பெயரின் கோளாறுதான். இருந்தால் என்ன ? தொழில் முறையில் ஒன்றுபட்டுள்ள நாம் ஒருவரையொருவர் அறிமுகம் செய்து கொள்ள வேண்டியதும் அவசியந்தான். அது தானுக்வே நடந்து விட்டது ! இதில் கூச்சப்பட ஒன்றுமில்லையே ?''

இப்படிக் கலகலப்பாகப் பேசி அவள் கலக்கத்தைப் போக்க முயன்றேன். முயற்சி வீண் போகவில்லை. மெல்ல நிமிர்ந்தவள் தன் அழகிய விழிகளால் என்னை நோக்கினுள். ஆசனத்தை அவள் அருகில் இழுத்து உட்காரச்

சொன்னபோதும் அவள் மறுக்கவில்லை. நானும் உட்கார்ந்தேன்.

கைக்குட்டையால் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டவள், "அப்பாடி! நான் பயந்து விட்டேன். அன்று சாதாரணமாக, 'டாக்டர் சுந்தரத்தைத் தெரியுமா?' என்று கேட்டதற்கே பிரமாதமாகக் கோபித்துக் கொண்டவர் இன்று என் அசட்டுத்தனத்தைக் கண்டு எப்படியெல்லாம் கோபிப்பீரோ? என்று நடுங்கி விட்டேன், அதற்கு..."

"...மாறாக நான் கலகலப்பாகப் பேசியது உங்கள் பயத்தைப் போக்கி விட்டது. இல்லையா?" என்று சிரித்தேன்.

புன்னகையுடன் அவள் "அதுமட்டுமல்ல. நீங்கள் ஒரு முன் கோபி அல்ல என்ற நிம்மதியும் ஏற்பட்டது" என்றாள்.

"அட தேவலையே! உங்கள் நிம்மதி நீடிக்கட்டும். ஆனால் ஒன்று. இனியும் உங்கள் தோழி கல்யாணி என்று மட்டும் என்னை நினைத்து விடாதீர்கள்" என்று நான் சொன்னதும் அவள் கலகலவென்று சிரித்து விட்டாள்.

சுந்தர்

"டாக்டர் கல்யாண் ஒப்பற்ற அழகர் என்பதில் ஐயமேயில்லை. குறும்பு துள்ளும் விழிகளும், சுருண்டு புரளும் மயிர்க் கற்றைகளும் அவர் முகத்துக்கு ஒரு வசீகரத்தையே அளித்து விடுகின்றன. பொதுவாகவே அவருடன் சில நிமிஷங்கள் பழகியவர்கள் கூடப் பல நிமிஷங்கள் அவரது வசீகரத் தோற்றத்தையே நினைத்தபடி இருப்பார்கள். அப்படிப்பட்ட அவரது அறிமுகம் எனக்குக் கிடைத்தது என் பாக்கியமே.

கலகலப்பாகப் பேசிப் பழகிய நாங்கள் ஒருவர் மனத்தை மற்றவர் அறிய முயலும் போது மட்டும் தயக்கத்தால் தடுமாறினோம். அன்று எப்படியும் விஷயத்தை அறிவது என்ற முடிவுடன் சுற்றி வளைத்து ஆரம்பித்தேன். "இத்தனை பெரிய வீட்டில் நீங்கள் மட்டும் இருப்பது உங்களுக்குக் கஷ்டமாக இல்லையா?" என்றேன் மெதுவாக.

கல்யாண் :

'நல்ல கேள்வி! எப்படி யெல்லாம் சுற்றிக் கொண்டு வருகிறாள் கள்ளி! நெருங்கிப் பழகியும் மனத்தைத் திறந்து பேச எவ்வளவு தயக்கம். நல்ல அழுத்தக்காரி. அந்த அழுத்தத்தைக் கலகலக்க வைக்கிறேன், பார்!' குறுகுறுத்த என் மனம் இப்படி முடிவு செய்து கொண்டது.

"தனிமை யெல்லாம் கொஞ்ச நாட்கள் தான்... அவளும், குழந்தையும் வந்து விட்டால் பிறகு இந்த வீடு போதாது." துணிந்து ஒரு பெரும் பொய் சொல்லி விட்டேன்.

டாக்டர் சுந்தரின் அழகிய முகம் வாடி விட்டது. அவள் பேசவேயில்லை. நான் எதிர் பார்க்கவில்லை, அவள் இப்படி மௌன விரதம் எடுப்பாள் என்று. இல்லாத என்



மனைவியைப் பற்றிக் கேலியாக ஏதாவது கேட்பாள், பக்குவமாகப் பதில் கொடுத்து மேலும் அவளைக் கலங்க வைக்க வேண்டும் என்று எண்ணியிருந்த எனக்கு ஏமாற்றமே நேர்ந்தது.

சட்டென்று எழுந்தவள், "நான் வருகிறேன், டாக்டர்! தாத்தா காத்திருப்பார்" என்று சொல்லிப் பதிலுக்குக்கூடக் காத்திராமல் புறப்பட்டுப் போய்விட்டாள்.

வியப்புக்கு மேல் எனக்குச் சிரிப்பு வந்தது. மறுநாள் காலை விஷயத்தை உடைத்து அவளை ஆனந்தப்படுத்த வேண்டும் என்ற இன்ப நினைவுடன் இரவைக் கழித்தேன்.

மறுதினம் என் நோயாளிகளைக் கவனித்து அனுப்பி விட்டு உடை மாற்றிக் கொண்டு புறப்பட்டபோது முகத்தில் மகிழ்ச்சி பொங்க வந்து கொண்டிருந்த சுந்தரியைக் கண்டு திகைத்தேன்.

"டாக்டர்! ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்ல வந்திருக்கிறேன். அது என்னவென்று சொல்லி விடுங்கள், பார்க்கலாம்!" என்றாள் உள்ளே நுழைந்தபடியே.

திகைப்பைச் சமாளித்துக் கொண்டு, "நான் படித்தது வைத்தியக் கல்லூரியில்தான்; ஜோசியக் கல்லூரியில் இல்லை" என்றேன்.

கலகலவென்று சிரித்த சுந்தரி, "உத்தேசமாகச் சொல்வீர்கள் என்று பார்த்தேன். போகட்டும், விவரித்துச் சொல்ல அவகாசம் இல்லை. தாத்தா எனக்கென்று ஒருவரை நிச்சயம் செய்து வைத்திருந்தார். அவருக்கும் சம்மதந்தான். என் சம்மதத்துக்காகவே இதுவரை காத்திருந்தார்கள். நேற்று இரவு என் மனத்தைத் திடம் செய்துகொண்டு என் சம்மதத்தையும் கொடுத்துவிட்டேன். பிறகு கேட்க வேண்டுமா? இன்று தாத்தா அவர்களுக்குத் தந்தி கொடுத்துவிட்டார்!" என்றவள் கைக்கடிகாரத்தைப் பார்த்தாள்.

நான் வாயடைத்து நின்றேன்.

"மணியாகிவிட்டது. தாத்தா வண்டியில் காத்துக் கொண்டிருப்பார். ஜவுளி எடுக்கப் போகிறோம். நான் வரட்டுமா?" சிட்டாகப் பறந்து சென்று வண்டியில் ஏறி விட்டாள் சுந்தரி. அப்பொழுதுதான் வாசலில் வண்டி நிற்பதைக் கவனித்தேன். வண்டியும் சென்று விட்டது. பிரமை பிடித்தாற்போல் நான் நின்ற இடத்திலேயே நின்றேன். விளையாட்டாகச் சொன்ன பொய் எவ்வளவு விபரீதத்தில் கொண்டு போய் விட்டுவிட்டது!

'மனத்தைத் திடம் செய்து கொண்டு சம்மதத்தைக் கொடுத்து விட்டேன்.' இந்த வார்த்தை சுழன்று சுழன்று வந்து என் மனதைத் தாக்கிப் பைத்தியம் கொள்ளச் செய்து விடும் போல் இருந்தது. வேதனையின் சுமையைத் தாங்க முடியாமல் தத்தளித்தது மனம். எப்படியும் அன்றே சுந்தரியிடம் எல்லாவற்றையும் விண்டு சொல்லி விபரீதம் விளைவதற்கு முன் தடுத்தே தீரவேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

நான் வீட்டில் நுழையும்போது முகமலர்ச்சியுடன் என்னை வரவேற்றாள் சுந்தரி. அவள் முகத்தில் துன்பத்தின் குறியேயில்லை! 'ஒரு வேளை நம்மை அவள் நேசிப்பதாக நினைத்தது தவறோ?' இந்த எண்ணம் எழுந்ததும் தயக்கம் ஏற்பட்டது. இருந்தாலும் பேச்சுக்கிடையே சம்மதம் கொடுத்து விட்டேன். "நான் நேற்று மனைவி குழந்தை என்றதெல்லாம் வெறும் கற்பனை! விளையாட்டாகச் சொன்ன பொய். என்னை மன்னித்து விடு. விளையாட்டு இவ்வளவு விபரீதம் ஆகும் என்று நான் நினைக்கவில்லை" என்றேன்.

என் சுந்தரின் கண்கள் அகல விரிந்தன.

"என்ன கற்பனையா? விளையாட்டா...?"

"ஆம், சுந்தர்! என்னை நம்பு. உன்னைச் சீண்டி வேடிக்கை பார்க்க நினைத்தது விபரீதமாகி விட்டது."

"இனி அதைச் சொல்லி என்ன பயன்? காரியம் மிஞ்சிவிட்டதே?"

"இல்லை; மிஞ்சவேயில்லை, சுந்தர்! முயன்றால் நம் எண்ணம் நிறைவேற வழியுண்டு."

"வழியே இல்லை! நாக்கு ஒன்றுதான். கொடுத்தவாக்கை நான் எப்படி மீறமுடியும்?"

"வாக்கைக் காப்பாற்றி வாழ்வையே பாழாக்கிக் கொள்ளப் போகிறாயா?"

"அது நேற்றே பாழாகி விட்டது, உங்கள் விபரீத விளையாட்டால்?"

"சுந்தர்!" நான்கத்தினேன் கோதிப்புடன். அவள் கலகலவென்று சிரித்தாள். எனக்கு எரிச்சலூண்டது. "இதென்ன விளையாட்டு?"

"விளையாட்டேதான். நீங்கள் விளையாடலாம். நான் மட்டும் விளையாடக் கூடாதாக்கும்!" சுந்தரி தன் வெண்முத்துப் பற்கள் ஒளி வீச மீண்டும் சொன்னாள்:

"கலியாணமான ஆளைப் பார்த்தாலே தெரியாதா?"

"எப்படித் தெரியும்? கழுத்திலே பொன் தாலிதொங்குமோ?" என்று நான் கேட்டதும், 'களுக்' கென்று சிரித்தாள் அவள்.

"பொன் தாலி தொங்காது. பேச்சினிடையே 'மனைவி' என்னும் சொல் அடிக்கடி புகுந்துவிடும். கலியாணமானவர்கள், என் மனைவி...அப்படி...இப்படி என்று அடிக்கொருமுறை சொல்லிப் பெருமைப்படாமல் இருக்கவே மாட்டார்கள்."

"ஓகோ!"

"அதனால் உங்கள் கற்பனையை நம்புவதாக நடித்து, நானும் சிறு வேடிக்கை செய்தேன்" என்று முடித்தாள் அந்தக் குறும்புக்காரி.

சுந்தர்:

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு எங்கள் நேசம் வளர்பிறைபோல் வளர்ந்தது. எங்கள் அன்பைக் கண்ட தாத்தாவும் தடுக்கமுடியாது என்று கண்டு தம்முடைய சம்மதத்தைக் கொடுத்து விட்டார்.

அன்று முக்கிய காரியமாகக் கீவளூருக்குப் புறப்பட்டேன். டாக்டர் கல்யாணும் வருவதாகச் சொல்லவே, பெரு மகிழ்ச்சியுடன் கிளம்பினேன்.

போகும்போது அவர் பரிகாசமாகக் கேட்டார்: "கீழ் வேளூர் என்கிறீர்களே அப்படியானால் 'மேல் வேளூர்' என்று மற்றொரு ஊரும் இருக்க வேண்டுமே?"

ஆனாலும் நான் அதைப் பொருட்படுத்தாமலே விஷயத்தை விளக்கினேன்.

"இருக்கிறது! ஸ்ரீ கந்தவேளுக்கு, தேவலோகத்தில், 'மேல் வேளூர்' என்று பொருள்படும், 'தேவஸ்கந்தபுரம்' ஒன்று இருப்பதால்

இது 'கீழ் வேளூர்' ஆயிற்று. 'வேள்' என்று பெயர் தாங்கிய வள்ளிகேள்வன் தங்கித் தவமிருந்து பரமனைப் பூசித்ததால், 'வேளூர்' என்றும் வழங்கினார்கள்'' என்றேன்.

அவர் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. பிறகு ஊரையும், என் வீட்டையும் பார்த்துக் கொண்டு கோவிலுக்கு வந்தபோது அவர் பெரும் வியப்பில் ஆழ்ந்து போனார்.

தரிசனத்தை முடித்துக் கொண்டு ஸ்தல விருக்ஷமான இலந்தை மரத்தடிக்கு வந்து உட்கார்ந்தோம். அப்போது அவர் கேட்டார்: ''அகஸ்தியருக்கு வலது பாத தரிசனம் தந்து மாறியாடும் நடன சபாபதியைப் பற்றி விசேஷமாக எதுவும் சொல்வதற்கு இல்லையா?'' என்றார். நான், ''இருக்கிறது'' என்று சொல்லி ஆரம்பித்தேன்:

''லோகசரண்யனின் கல்யாணத் திருக்கோலத்தைக் காணும் ஆவலில் அனைவரும் வடதிசையில் வந்து குவிந்து விடவே வடபுறம் பாரத்தால் தாழ அதனால் அன்னை பூமியின் சுழற்சியில் தடுமாற்றம் ஏற்பட்டது. இரவும், பகலும் கூட மாறின. பக்தர்கள் இந்நிலை கண்டு கலங்கினார்கள்.

பக்தர்களின் கலக்கம் கண்ட பார்வதி கேள்வன் அகஸ்திய முனிவரைக் குறிப்பாக நோக்கினார். நீலகண்டனின் நோக்கத்தைப் புரிந்து கொண்ட அகஸ்திய முனிவரும், ''பிறைசூடிய பெருமானே அடியேன் மட்டும் மணக்கோலத்தைக் காண வேண்டாமோ?'' என்று கேட்டு வருத்தத்தோடு நின்றார். அது கண்ட கங்கை கொண்டோன், ''புங்கவரே! வருந்தற்க; தக்ஷிணப் பதரிகாரண்யம், (கீவளூர்) சென்று தங்கும். அங்கேயே எமது திருமணக் கோலத்தையும் காணலாம்'' என்று அருளி அவரைத் தென்புறம் அனுப்பி வைத்தார். தமிழ் மறை கண்ட அம்முனிவர் பெருமான் நிறைகண்டு பூமியும் சமன் அடைந்தது. ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசரின் கல்யாணமும் கோலாகலமாக நடந்தது. பக்த வெள்ளமும் கண்டு களித்து மீண்டது.

அகஸ்தியருக்கு வாக்களித்தபடி, தக்ஷிணப் பதரிகாரண்யத்தில், பதரி-இலந்தை-மரத்தின் கீழ் தமது கல்யாணக் கோலத்துடன் காட்சியளித்து நின்றார் சிவபெருமான். அக்காட்சியைக்கண்ட அகஸ்தியர் ஆனந்தக் கண்ணீரால் ஐயனின் பாத கமலங்களை அர்ச்சித்தபடி மெய்மறந்து நின்றார். அப்போது சிவபெருமான், ''மறை வளர்த்த மாமுனியே! என் மனம் மகிழ்வித்தீர். எது வேண்டுமாயினும் கேளும்'' என்றார்.

நீர் சோர நின்ற மாமுனிவரோ, 'ஆடும் பெருமானே! அடியேனுக்கு நீண்ட நாட்களாகவே ஓர் ஆவலுண்டு. எனையாளும் ஐயனின் தாண்டவக் கோலத்தில் வலது பாத தரிசனத்தைக் காண வேண்டும்'' என்றார்.

'அவ்விதமே ஆடிப் பாத தரிசனம் தருவோம்'' என்று அருளிய நடராஜன் தமது மணக் கோலத்தை மாற்றிப் பத்துக் கரங்கள் உடையவராகி இடது பாகத்தை ஊன்றி,

வலது பாதத்தைத் தூக்கி. அகில உலகமும் கண்டு களிக்க ஆடினார். தாண்டவ மூர்த்தி, மாறியாடிய இதுவும் இவ்வூரின் புனிதமே' என்று நிறுத்தினேன்.

அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்: ''ஸ்தலப் பெயரின் காரணமும், நடராஜப் பெருமானின் தனி விசேஷமும் அழகாகச் சொல்லி விட்டாய். அதுப்போலவே, பால முருகனின் தவக் கோலத்துக்கான காரணமும், அக்ஷயலிங்கேசுவாரின் வரலாறும் கூடச் சுவாரஸ்யமாக இருக்கும் போல் இருக்கிறதே? அந்தக் கதைகளையும் கேட்க ஆவல்தான்'' என்று கூறினார்.

' இறைவன் திருவிளையாடலை இன்னொரு முறை, 'கதை' என்று அலட்சியமாகச் சொல்லி விடாதீர்கள்'' என்று கூறிவிட்டுச் சுருக்கமாக முருகப் பெருமான் திரு அவதாரத்தைச் சொன்னேன்.

அசுரனைக் கொன்ற பாவத்தைப் போக்கி மனச்சாந்தியைப் பெற விரும்பிய குமரன், பூவுலகில் அமைதியான இடம் தேடி நின்ற போது அங்கு வந்த நாரத முனிவர், ''தவக் குமரா, கேள்: முன்னம் பாற்கடலைக் கடைந்த போது, இரு அமுதத் துளிகள் சிதறிப் பூவுலகில் விழுந்தன. ஒன்று காசிக்கு வடக்கே விழுந்து பதரி (இலந்தை) மரமாகிப் பின் வனமாக, பதரிகாசிரமம் ஆயிற்று. மற்றது தெற்கே நாகைத் துறைமுகத்துக்கு இப்பால் விழுந்து தக்ஷிணப் பதரிகாரண்யம் என்று ஆயிற்று. அவ்வாரண்யம் சென்று கைலாய நாதனைப் பூஜித்தால் பாபம் நீங்கி அமைதியடைவாய்'' என்று சொன்னார்.

அது கேட்டு மகிழ்ந்த முருகவேள் பதரி காரண்யம் அடைந்து, ஆரண்யத்தைச் சீர்ப்படுத்தி, கைலாசநாதரையும், சௌந்தர நாயகியையும் பல பெயர்களால் அர்ச்சிக்கும் நவலிங்க பூஜை, துவாரலிங்க பூஜை யாவும் முடித்துப் பின் மத்தியில் உள்ள இலந்தை விருக்ஷத்தை அணுகி, அதன் கீழ் சுந்த சுயம்புவாய், ஜோதி வடிவாய் நின்ற சிவலிங்கப் பெருமானைப் பூஜித்து, அர்ச்சித்துத் தவத்தை மேற்கொண்டார். தவக்கோலம் கொண்ட பாலசுப்பிரமண்யன் தவத்தைக் கலைக்கப் பல இடையூறுகள். அப்போது அம்மை, மைந்தன் தவம் காக்கக் காளியுருத் தாங்கி வந்தார். மைந்தனைச் சுற்றி வந்து வட்டம் கொடுத்து அதற்குள் வரும் இடையூறு யாவும் நீக்கிக் களைந்து 'ஐந்து வட்டத் தம்மை' என்ற பெயரையும் ஏற்றார்.

அன்னையின் அரவணைப்பிலே நிம்மதியடைந்த முருகவேள் தான் ஆக்கிய சரவண புஷ்கரணியில் நீராடிக் கடுந்தவம் புரிந்தார். மைந்தன் தவம் கண்டு மகிழ்ந்த மகேசுவரன் வடிவேள் முன் தோன்றி, ''செல்வ! நின் மனச் சுமையகற்றினேம். வேறு வேண்டுவன கேள்'' என்று பணித்தார்.

மயிலேறும் வடிவழகன் தந்தையை வலம் வந்து வணங்கி, ''தந்தையே! இப்பதரி வனத்தில் தாங்கள் இருந்து பக்தர் இடர்தீர்க்க அருள் புரிய வேணும்'' என்று வேண்டினார்.

---

மெல்லச் சிரித்த சந்திரசூடர், "மைந்த! நின் விருப்பப்படி அழியா அக்ஷய லிங்கரூபமாக இங்கு இருப்போம். குழந்தாய்! நீயும் இந்தத் தவக்கோலத்துடனேயே இங்கு அமர்ந்து பணிவார் பாபம் நீக்குவாய்; உமையும் சுந்தர குஜாம்பாளாகக் காட்சி தந்து காணுவார் பாபம் போக்குவதுடன் 'ஐந்து வட்டத்தம்மை' என்ற காளியுருவுடன் உன் தவங்காத்தாற்போல், பக்தர் விரதம் காத்து அருள் புரிவாள். உன்னால் பூசிக்கப்பட்ட இந்த இடம், 'பூசரண்யபுரம்' என்றும், 'கீழ்வேளூர்' என்றும் பெயர் பெற்று விளங்கும்" என்று திருவாய் மலர்ந்தருளினார் உமாமகேசுவரன்.

இப்படி முப்புரம் எரித்தவன் கோபத்தால் எழுந்த புயலுக்குப் பின் அமைதி ஏற்பட்டு, பக்தர்களுக்கு அவன் அருளும் கிடைத்தது" என்று முடித்தேன்.

கலகலவென்று சிரித்த அவர், "நல்ல அழகான கட்டுக்கதைகள்" என்றார். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவர் கேலி என் கோபத்தை அளவுக்கு அதிகமாகவே கிளறி விடவே, "போதும், உங்கள் பரிகாசம். இறைவன் திருவிளையாடலை எள்ளி நகையாடும் அளவு அறிவுமந்தமானவர்களுடன் பேசுவதே தவறு. உள்ளத் தூய்மைக்கு வித்து பக்தியில் தான் இருக்கிறது. தெய்வ பக்தியால் தூய்மை பெறாத உள்ளத்தில் அன்பும் பண்பும் இருக்காது. அப்படிப்பட்டவருடன் கூடி வாழ்க்கை நடத்துவதே — தவறாக — முட்டாள்தனமாக முடியலாம்" என்று சொல்லிவிட்டேன்.

'ஜில்'லென்று அவர் முகம் சிவந்தது. "நல்ல வேளை! வாழ்க்கையில் ஒன்றுபடுவதற்கு முன் இந்த முட்டாள்தனத்தை உணர்ந்து எனக்கும் உணர்த்தினாயே, அதற்கு நன்றி!" சொன்னவர் வெடுக்கென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு எழுந்துவிட்டார்.

கல்யாண் :

இறைவன் வாழ்விலே எழுந்த புயலைப் பற்றிச் சொன்னவள் என் வாழ்விலும் புயலை எழுப்பி விட்டாள். கடமையைச் செய்து அதில் கடவுளைக் கண்டு மகிழ்பவன் நான். அவள் நினைத்திருக்கும் அளவு பக்தியற்ற கசடனல்ல. அவசரப்பட்டுத் தவறு செய்து விட்டாள். சற்றுக் கோபமூட்டி வேடிக்கை செய்யும் விருப்பத்துடன் ஏதோ சொல்லப் போக, அது இவ்வளவு விபரீதத்துக்கு அடிகோலும் என்று நான் நினைக்கவில்லை.

மறு தினமே என்னைக் காண ஓடி வருவாள் என்றுதான் எதிர்பார்த்தேன். அவள் வரவில்லை. மனம் அவளைக் காணத் துடித்தது. சுய கௌரவம் குறுக்கே வந்து தடுத்தது.

என்று சுந்தர் மூலம் அக்ஷயலிங்கேசுவரர் பெருமையை...உயர்வை அறிந்தேனோ, அன்று முதல் அவகாசம் கிடைக்கும்போதெல்லாம் 'கீழ்வேளூர்' கிளம்பி விடுவேன். கீழ்வேளூர் சென்று ஆறுமுகனையும் பணிந்து அந்தப் பதரி விருக்ஷத்தின் அடியில் உட்கார்ந்து வந்தால் தான் என்மனத்துக்குச்சற்று ஆறுதல்ஏற்படும்.

அன்றும் அப்படித்தான் கீழ்வேளூர் சென்றேன். தரிசனம் முடித்து அந்த இலந்தை மரத்தடிக்கு வந்தபோது திடுக்கிட்டுப் பின் வாங்கினேன். டாக்டர் சுந்தர்!—அவளையொட்டி ஓர் ஆடவன்! காதில் விழுந்த பேச்சு எரிமருந்தாகச் சுட்டது. வந்த சுவடு தெரியாமல் திரும்பி வந்த வழியே சென்று வண்டியில் ஏறினேன்.

சுந்தர் :

நான் வாசலுக்கு வந்தபோது கார் கிளம்பிச் சென்று விட்டது. பறந்து செல்லும் பொன் வண்டு நிறக் கார் அவருடையதே தான்! ஐயோ இதென்ன விபரீதம்!

'உண்மை அன்புக்கு முன் எதுவுமே ஒரு பொருட்டல்ல. அவர் அன்பும் உண்மையானால் ஒரு நாள் ஓடி வருவார். இப்படித் தான் காத்திருந்தேன். நான் செய்ததும் தவறுதான். ஆனாலும் பக்தியை, இறைவன் அருளை எள்ளிநகையாடும் அவர் தம் தவற்றை உணர வேண்டும் என்பதற்காகக் காத்துக் கொண்டிருந்தேன்.

துன்புற்று வருந்தும் எனக்கு ஒரு ஆறுதல் போல் அன்று என் அண்ணா மணி வந்து சேர்ந்தார். அண்ணா மணி, என் பெரியம்மா பிள்ளை, சின்ன வயசில் ஒன்றாக விளையாடி வளர்ந்த நாங்கள், பெரியப்பாவின் வேலை மாற்றத்தால் பிரிந்துவிட்டோம். வெகு நாட்களுக்குப் பிறகு முக்கிய காரியமாகச் சென்னைக்கு வந்தவர் என்னையும், தாத்தாவையும் காண வந்திருந்தார்.

அவருடன் பேசிக்கொண்டிருந்தபோதுதான் பின்னால் ஆள் அரவம் கேட்டது. சட்டென்று திரும்பிப் பார்த்தவள் திடுக்கிட்டேன். இருள் படி வரும் அந்திப் பொழுதில் நன்றாகத் தெரியாவிட்டாலும் அது "அவர்தான்" என்று என் உள்ளத்துக்கு நன்றாகப் புரிந்து விட்டது. அண்ணாவுடன் அவசரமாக வாசலுக்கு ஓடிவந்தேன். புறப்பட்ட கார் அவருடையதுதான்.

கல்யாண் :

வண்டியை எப்படி இயக்கினேன், எப்படி ஊர் வந்து வீட்டை அடைந்தேன் என்பதொன்றும் எனக்கே தெரியாது. உள்ளம் அத்தகைய குமுறலுக்கும், கொந்தளிப்புக்கும் ஆளாகியிருந்தது. அன்று விளையாடியதை, இன்று உண்மையாக்கி விட்டாள்! சே! சே! இவ்வளவு கபடம் நிரம்பிய பெண்ணா அவள்! நம்பமுடிய வில்லையே! நினைக்க, நினைக்க என் கொதிப்பு அதிகமாயிற்று. உள்ளக் குமுறலுக்கு ஒரு வழி காட்டினால் அன்றி மனம் ஓயாதுபோல் தோன்றியது. 'ஆம்! அவளை நானும் மறந்து விட்டேன் என்பதைக் காட்டியே தீரவேண்டும்' என்று மனம் தீவிரமாக முனைந்து விட்டது.

பிரசித்தி பெற்ற திருவாரூர்த் தேர்விழாவுக்கு இன்னும் சில தினங்களே இருந்தன. உற்சவத்தைக் காண வரும்படி என் மாமன் மகள் லலிதாவுக்குத் தந்தி ஒன்று அடித்தேன். அதன் பிறகே மனம் சற்றுச் சும்மா இருந்தது.

மறுதினமே வந்து சேர்ந்த மாமன் மகளுடன் ஊரையே சுற்றினேன். ஒரு முறைக்குப் பன்முறை அவள் பார்வைக்கு எங்களை இலக்காக்கிக் கொண்டேன். உளைச்சலின் வேகத்திலே இப்படியெல்லாம்செய்து மனத்தைஇதப்படுத்திக் கொண்டு விட்டதாக எண்ணினேன்.

அன்று தனித்து வெளியே சென்று திரும்பிய லலிதா உள்ளே நுழையுமுன்பே குதூகலத்துடன், "அத்தான்! இவர்தான் என்.... அப்பாவும் சம்மதித்து நிச்சயித்திருக்கும் மாப்பிள்ளை. உங்களை அறிமுகம் செய்து கொள்ளவே வந்தார்" என்றாள் முகம்சிவக்க.

"நமஸ்காரம், டாக்டர்!" என்ற லலிதாவின் காதலரை வரவேற்க நினைத்து நிமிர்ந்தவன் அப்படியே திகைத்து நின்று விட்டேன். எந்த மனிதர் என் உள்ளத்தில் பெரும்புயலைக் கிளப்பினாரோ, அவரே என் முன் நின்றவர். "டாக்டர் சுந்தர் உங்கள் உறவினரா?" வரவேற்புக்குப் பதிலாக என் வாயினின்றும் எழுந்தது இந்தக் கேள்வி. முந்திக் கொண்டு பதில் சொன்னாள் லலிதா.

"ஆமாம்! இவரது சித்தப்பா பெண்தான் டாக்டர் சுந்தர்; பாவம் என்ன ஏமாற்றமோ, வாழ்வில் வெறுப்புற்றுவிட்ட அவள் இன்று காலராப் பிரதேசத்துக்குப் போவதாக ஒப்புக் கொண்டு விட்டாளாம். இவர் என்ன தடுத்தும் கேட்கவில்லையாம். தங்கை வீட்டுக்கு வந்துள்ள இவரை இன்றுதான் தற்செயலாகக் கண்டேன்." லலிதா நிறுத்தி விட்டாள்.

"என்ன?"

எனக்கு மனம் நிதானமடையவே, சில நிமிஷங்கள் பிடித்தன. பறக்கும் மனத்துடனும், துடிக்கும் உடலுடனும் புறப்பட்டேன், என் சுந்தரைக் காண—அவளைக் காலராப் பிரதேசம் செல்லாமல் தடுக்க.

சுந்தர் :

அன்று அண்ணா வெளியூர் சென்றிருந்தார். இனியும் பொறுக்க இயலாது என்ற நிலையில் இன்று எப்படியும் அவரைக் கண்டு பேசுவது என்ற தீர்மானத்துடன் புறப்பட்டேன். ஸ்ரீ தியாகேசன் உற்சவத்தால் ஊரே ஆனந்தத்தில் மிதந்தது. தேர் கமலாலயக் கரையை நெருங்கி விட்டது. தேரின் பாரத்தால் கமலாலயத்தின் ஜலத்திலேயே குமிழி கிளம்புவதைக் கண்டு சற்றே நின்றேன். அதே சமயம் எதிர்ப்புறம் டாக்டரின் குரல் கேட்கவே. ஆவலுடன் நிமிர்ந்தவள் திடுக்கிட்டேன். என் தலை சுழன்றது. டாக்டருடன் குழைந்து, சிரித்துப் பேசிக்கொண்டிருந்தாள் ஓர் அழகி. அவளைக் கண்கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தார் டாக்டர்.

'கனவாகிவிடக் கூடாதா?' என்று ஏங்கியது மனம். ஆனால் மறுநாளும் அதே காட்சியைக் கண்ட போது என் மனம் பேதலிக்காமல் இருந்தது விந்தையே. விஷயத்தை அறிந்த போது என் கண்கள் கண்ணீரில் மூழ்கின. அவரது மாமன் மகளே அப்பெண்.

வெளியூரிலிருந்து திரும்பிய அண்ணா உற்சாகத்துடன் "சுந்தர்! இதோ பார், யாரென்று. உன் அண்ணனின் கைப்பற்றப் போகிறவள்" என்றபடி உள்ளே நுழைந்தார். அந்தப் புது முகத்தை வரவேற்க வேண்டி எழுந்து திரும்பியவள் திகைத்தேன். எந்தப் பெண் என் மனத்திலே புயலைக் கிளப்பினாளோ, அவளே மணி அண்ணாவின் காதலியாக என் முன் நின்றாள்.

**டிசம்பர் 7உ கொடி தினம்**

**இந் நன்னாளில் மாஜி ராணுவத்தினருக்கும் அவர்களது குடும்பத்தினருக்கும் தாராளமாக உதவி புரியுங்கள்.**

"டாக்டர் கல்யாண் உங்கள் அத்தை மகனல்லவா?" நெஞ்சு எழும்பிக் கேள்வியாக வெடித்தது.

கலகல வென்று சிரித்த அந்தப் பெண், "ஆமாம்; அவர் என் அத்தை மகன் மட்டும் அல்ல, ஒன்றாக வளர்ந்த அன்புச் சகோதரர். விளையாட்டும், வேடிக்கையுமாகப் பேசுபவர். ஏனோ இங்கு வந்த பின் வாடி விட்டார். பாவம், என்ன வேதனையோ, வெறுப்புற்றவர் நான் என்ன தடுத்தும் கேளாமல் காலராப் பிரதேசத்துக்குப் போக அவர் ஒப்புக்கொண்டிருக்கிறார்."

"என்ன...அவர்...?"

"ஆமாம், சுந்தர்! வந்து பேசிக் கொள்ளலாம். கவலைப்படாதே. நாங்கள் கடைத்தெருவரையில் சென்று வருகிறோம்" என்று பதில் சொன்ன அண்ணா அவளையும் அழைத்துக் கொண்டு வெளியே சென்று விட்டார்.

துள்ளும் மனத்தை அடக்கச் சில விநாடிகள் பிடித்தன. எழுந்து பரபரப்புடன் கிளம்பினேன். அவரைக் கண்டு என் மனத்தைக் கொட்ட நான் என் அறையை விட்டு வெளி வந்த போது, அப்படியே நின்றுவிட்டேன். வியர்க்க, விறுவிறுக்க என் முன் நின்றார் அவர். கண்கள் இமைக்கும் சக்தியை இழந்தே விட்டன. கண்கள் நீரைச் சொரிய அவர் பாதத்தில் என் முகத்தைப் புதைத்துக் கொண்டு விட்டேன்.

நிலைமை மீண்டபோது அவர் கேட்டார்: "சுந்தர், நீ எப்படி என் அனுமதியின்றிக் காலராப் பிரதேசம் போக ஒப்புக் கொள்ளலாம்?" இப்படிக் கேட்ட அவர் முகத்திலே குறுநகை தவழ்ந்தது. எனக்கு அது வியப்பாக இருந்தது.

"நானா ஒப்புக் கொண்டேன்? நீங்களல்லவா அப்படிக் காலராப் பிரதேசம் போக முடிவு செய்து விட்டதாக அவர்கள் சொன்னார்கள்."

சற்று நிதானித்த அவர் சிரித்தார். இது என் மாமன் மகளின் குறும்பு. "சரிதான்! காலராப் பிரதேசமும் அவள் சிருஷ்டிதான்" என்றார். நானும் சிரித்தேன்.

"ஆமாம்: உங்கள் மாமன் மகளான என் அருமை அண்ணிக்குக் கலியாணத்துக்கு என்ன பரிசு அளிக்கலாம்? அதைச் சொல்லுங்கள் முதலில்" என்று நான் கேட்கும் போதே உள்ளே அண்ணாவும், லலிதாவும், "அதைப் பற்றி நாங்களே சொல்லி விடுகிறோம். எங்கள் கலியாணத்துக்குப் பரிசாக உங்கள் கலியாண அழைப்பிதழை அளிக்க வேண்டும்" என்று சொன்னதும், மகிழ்ச்சியால் அவர் முகம் மலர்ந்தது. நானும் தலை கவிழ்ந்தேன்.

# தமிழ் நல்லுலகம் கூறும்





**ப**ங்களூர் நுண்கலைக் கழகத்தினர் அக்டோபர் 4-ம் தேதி மைசூர் தசரா கண் காட்சியில் தமிழ் ஹாஸ்ய நாடகமொன்றை மிகச் சிறப்பான முறையிலே நடித்தனர். மக்கள் நாடகத்தை வெகுவாக ரசித்தார்கள்.

அதே நாடகத்தை 17-ம் தேதி லார் புட்டண்ண செட்டி டவுன் ஹாலில் உயர்திரு வி. எஸ். மேனன் தலைமையிலும், முன்னாள் மைசூர் முதலமைச்சர் திரு ஹனுமந்தய்யா அவர்கள் முன்னிலையிலும் அங்கஹீனமுள்ளவர்கள் சங்க உதவி நிதிக்காகச் சிறந்த முறையிலே நடித்தனர். இக் கழகம் 'நுண் கலை' என்ற கையெழுத்து மாதப் பத்திரிகையையும் நடத்தி வருகிறது.

★

**டே**ராடூன் தக்ஷிண பாரத் சங்கத்தின் ஆதரவில் நவம்பர் 5-ந் தேதி ஒரு விசேஷக் கூட்டம் புனித ஜோஸப் அகாடாமியில் நடைபெற்றது. டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்கள் இனியதொரு சொற்பொழிவாற்றினார். திரு. எம். பி. ராமச்சந்திர ராவ் ஸ்ரீ கிருஷ்ணனை வரவேற்றுப் பேசினார். நம் நாட்டுப் பண்டைக் கலாசாரத்தின் பெருமையை விளக்கி அதை வளர்க்கவும், அதில் நம்பிக்கையூட்டவும் எளிய நடையில் எழுதப்பட்ட ஸாரமும் லட்சியமுமுள்ள ஸ்ரீ ராஜாஜியின் "சக்கரவர்த்தித் திருமகன்" என்பது போன்று பல நூல்களின் அவசியத்தை டாக்டர் கிருஷ்ணன் உணர்த்தினார்.

குமாரி பாரதி ராமகிருஷ்ணனும் ஸ்ரீமதி லேதா சீதாராவும் இனிய குரலில் பிரார்த்தனை பாடக் கூட்டம் துவங்கியது. சங்கத்தின் உபதலைவர் டாக்டர் புருஷோத்தம் வந்தனோபசாரம் கூற இனிது முடிந்தது.

★

**கா**ர்க்கி கலாமந்திரத்தின் ஆதரவில் 8-11-59 அன்று கார்க்கி ராணுவ ஆஸ்பத்திரி நாடக ஹாலில் திரு டி. பி. நடராஜ சுந்தரம் பிள்ளை அவர்களின் நாதஸ்வரக் கச்சேரி இனிது நடந்தது. தமிழ் நாட்டின் தனிப்பெருங் கலையான நாதஸ்வரத்தை, பல கல்கள் தள்ளி வந்து வாழும் தமிழர்கள் கேட்டு, ரசிக்க, முதன் முதல் இந்தச் சந்தர்ப்பம் கிடைத்தது. திருமிஞ்ஞானம் நடராஜசுந்தரமும் அவர் கோஷ்டியும் இனிது வாசித்துத் தமிழ் மக்களை—கார்க்கிவாழ் தமிழர்களை மகிழ்வித்தனர். வித்துவானைக் கௌரவிக்க ஒரு தங்கப் பதக்கம் பரிசளிக்கப்பட்டது.

★

**க**ல்கத்தா தென்னிந்தியர் பாக்கியத்தாலும், சிருங்கேரி தவப் பெருந்திரு சங்கராச்சாரிய சுவாமிகளுடைய நல்லாசியும் அமையப் பெற்ற செங்கோட்டை, பிரும்மஸ்ரீ பால கிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களுடைய தேவி பாகவதம் உபன்னியாசம் ஒரு வாரத்துக்கு மேலாக வெகு சிறப்பாக நடைபெற்றது. வெள்ளிப் பாத்திரங்கள், சால்வை இவற்றைச் சிருங்கேரி சுவாமிகளின் கல்கத்தாப் பிரதிநிதிகளான ஸ்ரீ சீதாபதி, கிருஷ்ணய்யர் ஆகியோர் ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரிகளுக்குப் பரிசாக வழங்கிக் கௌரவித்தார்கள்.

★

**கா**சி இந்து பல்கலைக் கழகத் தமிழ் சங்கத்தின் ஆதரவில் 11-11-59 புதனன்று மாலை ஆறு மணிக்கு, ஒரு சிறப்பு இசைக் கதை நிகழ்ச்சி நடைபெற்றது. அவ்வமயம் 'காலக்ஷேப ரத்ன' சித்தூர் குமாரி சரஸ்வதி அவர்கள் "வள்ளி திருமணம்" என்னும் பொருள் பற்றி இசைக் கதை நடத்தி மகிழ்வித்தார். திரு கிருஷ்ணன் மிருதங்கத்திலும், சித்தூர் குமாரி ராஜலட்சுமி வயலினிலும் இசையொலி எழுப்பி ஒத்துழைத்தனர்.

★

"**ப**ம்பாயைச் சேர்ந்த கோரேகானிலுள்ள ஸ்ரீராமபஜனை சமாஜத்தின் ஆதரவில் ஸ்கந்தசஷ்டி மஹோத்சவம் வெள்ளிக்கிழமை முதல் மூன்று தினங்கள் நடைபெற்றன. ருத்திராபிஷேகத்துடன் முதல் நாள் காலை துவக்கப்பட்டு, முதல் இரண்டு நாட்கள் மாலை பக்திப் பாடல்களைப் பலர் பாடினர். லட்சார்ச்சனையும் முருகன் அவதாரத்தைப் பற்றிய உபன்யாசமும் சிறப்பாக நடந்தேறின.

# பல் டாக்டர்கள் 'கோலினஸ்' முறை பற்களின் ஆரோக்கியத்திற்கு உகந்தது எனக் கூறுவார்கள்




இது புதியது! இது சிறந்தது!
ஏனெனில், 'கோலினஸ் சூப்பர் ஒயிட்' பற்பசை அளிக்கும் நுரையில் சாதாரணமாகவுள்ள 2 சுத்திகரணிகளுக்குப் பதில் 3 சுத்திகரணிகள் உள்ளன. இந்த அதிகப்படியான சுத்திகரணியுள்ள பற்பசையினால் பல் துலக்கும் போது பற்களிடையிலிருக்கும் சொத்தைப் பற்கள் ஏற்படுவதற்குக் காரணமான உணவுத் தூள்கள் அகற்றப்படுவதுடன் உங்கள் பற்களை இயற்கையான வெண்மையுடனும் பிரகாசத்துடனும் இருக்கச் செய்கிறது. வேறெந்தப் பற்பசையும் உங்களுக்கு இதைவிட அதிக திருப்தியை அளிக்கமுடியாது.

## ஏனெனில் புதிய கோலினஸ் சூப்பர் ஒயிட் பற்பசை, பற்களுக்கு மேலான பாதுகாப்பையளிக்கிறது

**இதோ அந்தக் 'கோலினஸ் முறை':**

1. ஈரமான டூத் பிரஷின் மீது அரை அங்குல அளவு மட்டும் 'கோலினஸ சூப்பர் ஒயிட்' பற்பசையை உபயோகிக்கவும்.
2. காலையிலும் இரவிலும் இரண்டு நிமிஷங்களுக்கு உங்கள் பற்களின் எல்லா பாகங்களையும் நன்கு கவனித்து துலக்கவும்.
3. இரவில் பல் துலக்குவது மிகவும் அவசியம். ஏனெனில், அது சொத்தைப் பற்களுக்கு முக்கிய காரணமான உணவுத் துணுக்குகள் பற்களிடையில் தங்கவிடாமல் வெளியேற்றுகிறது.
4. உங்கள் பல்டாக்டரிடம் வருஷத்திற்கு இரு முறையாகிலும் சென்று பற்களைப் பரிசோதித்துக்கொள்ளுங்கள்.




...3 சுத்திகரணிகளும் அத்துடன் நுரைவளமும் கொண்டுள்ளது.

Registered User: GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

F. 28-TAM.

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி வியாதிகளுக்கு

## வழக்கமான மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | நேரம் |
|---|---|---|
| கரூர் | 1 | 9 to 11 காலை |
| சேலம் | 2 | 9 to 12 பகல்<br>3 to 5 மாலை |
| ஈரோடு | 3 | 9 to 11 காலை |
| திருப்பூர் | 3 | 3 to 5 மாலை |
| கோயமுத்தூர் | 4 | 9 to 12 பகல்<br>3 to 5 மாலை |
| பாலக்காடு | 5 | 8-30 to 12 பகல் |
| பொள்ளாச்சி | 5 | 2-30 to 3-30 மாலை |
| உடுமலைப்பேட்டை | 5 | 4-30 to 5-30 மாலை |
| பழனி | 5 | 6-30 to 7-30 இரவு |
| திண்டுக்கல் | 6 | 9 to 11 காலை |
| மதுரை | 7, 8, 23 | 9 to 12 பகல்<br>4 to 6 மாலை |
| விருதுநகர் | 9 | 8 to 9 காலை |
| கோயில்பட்டி | 9 | 10-30 to 11-30 காலை |
| தூத்துக்குடி | 9 | 3 to 5 மாலை |
| திருநெல்வேலி ஜங். | 10 | 9 to 12 பகல்<br>3 to 6 மாலை |
| நாகர்கோயில் | 11 | 10 to 12 பகல் |
| ஸ்ரீவைகுண்டம் | 11 | 4 to 5 மாலை |
| அம்பாசமுத்திரம் | 12 | 9 to 12 பகல் |
| தென்காசி | 12 | 3 to 5 மாலை |
| திருவனந்தபுரம் | 13 | 9 to 12 பகல்<br>3 to 6 மாலை |
| ராஜபாளையம் | 14 | 9 to 11 காலை |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | 1 to 3 மாலை |
| காரைக்குடி | 15 | 9 to 12 பகல்<br>3 to 6 மாலை |
| சிவகங்கை | 16 | 8-30 to 9-30 காலை |
| தேவகோட்டை | 16 | 11 to 12 பகல் |
| புதுக்கோட்டை | 16 | 3 to 5 மாலை |
| * ராமநாதபுரம் | 22 | 9 to 11 காலை |

| இடம் | தேதி | நேரம் |
|---|---|---|
| தஞ்சாவூர் | 17 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| பட்டுக்கோட்டை | 18 | 9 to 11 காலை |
| திருத்துறைப்பூண்டி | 18 | 3 to 5 மாலை |
| மன்னார்குடி | 19 | 9 to 11 காலை |
| திருவாரூர் | 19 | 3 to 5 மாலை |
| நாகப்பட்டினம் | 20 | 9 to 11 காலை |
| நன்னிலம் | 20 | 3 to 5 மாலை |
| மாயவரம் டவுன் | 21 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| சீர்காழி | 22 | 9 to 11 காலை |
| விருத்தாசலம் | 22 | 3 to 5 மாலை |
| சிதம்பரம் | 23 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| கடலூர் N. T. | 24 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| பாண்டிச்சேரி | 25 | 9 to 11 காலை |
| திண்டிவனம் | 25 | 3 to 5 மாலை |
| விழுப்புரம் | 26 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| காஞ்சிபுரம் | 28 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| வேலூர் | 29 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| ஜாம்ஷெட்பூர் | 15 | 9 to 11 காலை<br>4 to 6 மாலை |
| கரக்பூர் | 4 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை |
| ஜபல்பூர் | 15 | 8 to 12 பகல்<br>3 to 5 மாலை |
| ** ராய்ப்பூர் | 25 | 8 to 12 பகல்<br>3 to 5 மாலை |

* குறிப்பு: திருச்சி கிளைக் காரியாலயத்திலுள்ள எமது டாக்டர் ராமநாதபுரத்திற்கு விஜயம் செய்து ஆலோசனை கூறுவார்.

** குறிப்பு: நாகபுரி கிளைக் காரியாலயத்திலுள்ள எமது டாக்டர் ராய்ப்பூருக்கு விஜயம் செய்து ஆலோசனை கூறுவார்.

ஒவ்வொரு ஊரிலும் வழக்கமான விலாசத்திலேயே டாக்டரை சந்திக்கலாம். மற்ற விவரங்களுக்கு காரியாலயத்துக்கு எழுதவும்.

**ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்**

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்

# வேங்கையின் மைந்தன்

ஆறும் அத்தியாயம்

## கூண்டுக் கிளியின் குரல்

அகிலன்

கற்பனை மிக்கதோர் ஓவியனின் கைவண்ணம் போல் காட்சியளித்தது இரவு நேரத்துக் கமலாலயத் திருக்குளம். குளத்தங்கரையின் சுவர்களில் பொருத்தப்பட்ட தீவர்த்திகளும், நடுவர் ஆலயத்தைச் சூழ்ந்திருந்த பெரிய பெரிய அகல் விளக்குகளும் ஆயிரக்கணக்கான வெண் தாமரை மொட்டுக்களை ஏந்திக் கொண்டிருந்தன. பகலில் செந்தாமரைக் காடாக மலர்ந்திருந்த கமலாலயம் இரவு நேரத்தில் வெண்தாமரை வனமாக மாறியிருந்தது.

தீச்சுடர்கள் சிந்திய ஒளியில் ஒரு மயக்கம் தெரிந்தது. மிக மிக மங்கலாச அது கசிந்தொழுகி, குளத்துக்குள்ளேயுப் வெளியிலும் நிரம்பியிருந்த இருளை மெல்லத் தழுவிக் கொண்டிருந்தது.

திருவாரூர் நகரத்துக் கட்டிளம் காளையர் தங்கள் காதல் மனைவியரை மருவியது போன்று சில இடங்களிலும், தாய்மார்கள் தங்கள் பச்சிளம் பசலைகளைத் தழுவியது போன்று இன்னும் சில இடங்களிலும் அந்த ஒளி இருளுடன் உறவு பூண்டிருந்தது. குளத்தின் மத்தியில் முளைத்தெழுந்த ஒளித் தீவான நடுவர் ஆலயத்தைப் பார்த்த வண்ணம் இளங்கோவும் ரோகிணியும் குளத்தங்கரைப் படிக்கட்டில் அமர்ந்திருந்தனர். சந்திப்பு நிகழ்ந்தவுடன் வெடித்துக் கிளம்பிய பேச்சு அப்படியே பாதியில் அறுந்து விட்டது. அதைத் மீண்டும் ஒட்ட வைத்து உரையாடலைமுன்போல் துவங்க வேண்டும். முதலில் யார் பேசுவது?

அவள் பேசுவாள் என்று அவன் எதிர் பார்த்தான். அவன் பேசுவான் என்று அவள் எதிர்பார்த்தாள்.

ரோகிணிக்கு வாயைத் திறப்பதற்கு அச்சமாயிருந்தது. அவனுக்கோ அவளுடைய மௌனத்தின் காரணம் தெரியவில்லை. பேசக் கூடாதென்று அழுத்தம்



செய்கிறுளா? மன்னிப்புக் கேட்டு விட்டால் மட்டும் போதுமா?

பொறுத்துப் பார்த்தான் இளங்கோ. ரோகிணியின் மௌனத்தை அவனுல் மேலும் பொறுக்க முடியவில்லை. குளத்துக்குள் குனிந்து படியருகில் குவிந்திருந்த ஒரு தாமரையை வெடுக்கெனக் கிள்ளித் தண்ணீரில் வீசி விட்டு, கோபத்துடன் எழுந்தான்; திரும்பி நடந்தான்.

"எங்கே போகிறீர்கள்?" என்று கத்தினுள் ரோகிணி.

"என்னை விரும்புகிறவர்கள் யாரோ அவர்களிடம் போகிறேன். மாமன்னர் என்னை விரும்புகிறுர்; வல்லவரையர் என்னை விரும்புகிறுர். இன்னும் இந்த நாட்டில் எனக்குத் தெரிந்தவர்களும் தெரியாதவர்களுமாக லட்சாதிலட்சம் பேர்கள் என்னை விரும்புகிறுர்கள். அப்படியிருக்கும்போது என்னை விரும்பாதவளின் அருகில் நான் ஏன் இருக்க வேண்டும்? என்னை வெறுப்பவளிடம் எனக்கு என்ன வேலை?"

"மன்னித்து விடுங்கள் என்று சொல்லிக் கெஞ்சினேனே? உங்களுக்கு இரக்கமில்லையா?" என்று மன்றுடினுள் ரோகிணி. "இப்படிச் சற்று அமர்ந்து தயவுசெய்து நான் சொல்வதைக் கேட்டு விட்டுப் புறப்படுங்கள்."

இளங்கோ தயங்கி நின்றுன்.

அவனுடைய தயக்கம் அவளுக்குச் சிறிது துணிவு தந்தது. மெல்லத் தன் வலது கரம் நீட்டிப் பின்புறம் திரும்பி நின்ற அவனுடைய வலக்கரத்தைப் பற்றினுள். இளங்கோவின் மெய் சிலிர்த்தது. ரோகிணியின் முகத்தை மெல்லத் திரும்பிப் பார்த்தான்.

"உங்களைச் சந்திக்க வேண்டுமென்பதற்காகத்தான் நான் இந்த இடத்துக்கு வந்தேன். வீரமல்லன் என்பவனிடம் உங்களை அழைத்து வருமாறு கூறினேன். அவன் மறுத்து விட்டான். நானே அங்கு புறப்பட நினைத்த சமயத்தில், எதேச்சையாக நீங்களே இங்கு வந்து விட்டீர்கள். சற்று நேரம் இங்கு தங்கிச் செல்ல மாட்டீர்களா?"

லட்சாதி லட்சம் பேர் தன்னை விரும்புகிறுர்கள் என்று ஒரு விநாடிக்கு முன்பு தற்பெருமை பேசிய இளங்கோவுக்கு, இப்போது அந்த ஒருத்தியின் அன்பு மற்ற அத்தனை பேருடைய அன்பையெல்லாம் விடப் பெரிதாகத் தோன்றியது. வெறுப்புக் கொண்டவள் விரும்பிக் கரம் பற்றுவாளா? அருகில் அமரச் சொல்லி வேண்டுகோள் விடுப்பாளா?

"உன் வெறுப்பு இப்போது விருப்பாக மாறி யிருக்கிறது போலும்!" என்று தன் இளகிய மனத்தை இரும்பாக்கிக் கொண்டு கூறினுன் இளங்கோ. "மீண்டும் இது வெறுப்பாக மாறலாம் அல்லவா?"

ரோகிணியின் அன்புப் பிடி அவன் கரத்திலிருந்து மெல்ல நழுவியது. "நீங்களுந்தாம் என்னை வெறுப்பதாய்ச் சொன்னீர்கள். அந்த வெறுப்பு மெய்யானதாக இருந்தால் நான் உங்களை வற்புறுத்த வில்லை. இனி உங்கள் சித்தம். என்னைப் பொறுத்த வரையில் நான் ஆத்திரத்தில் அறிவிழந்து சொன்ன சொல் அது. இதை மெய்யென்று நம்பினுல் நீங்கள் இங்கு தங்கலாம்; இல்லாவிட்டால் போகலாம். லட்சக்கணக்கானவர்களின் அன்புக்குப் பாத்திரமான வீரரை நான் எதற்குத் தடுக்க வேண்டும்?"

"ரோகிணி! உன்னை நான் மனதார விரும்புகிறேன், ரோகிணி!" என்று உணர்ச்சி வயப்பட்டுக் கூறிக் கொண்டே



அவள் அருகில் அமர்ந்தான் இளங்கோ. "முதல் முறை உன்னைக் கண்டதிலிருந்து உன்னை நான் மனதார விரும்புகிறேன்."

ரோகிணியின் முகத்தில் மகிழ்ச்சி நிறைந்த நாணம் படர்ந்தது.

"ஓ! நீங்கள் சொல்வது மெய்தானா?" என்று பரிகாசக் குரலில் கேட்டாள். "உங்களுடைய விருப்பம் அதிகமாகும்போது நீங்கள் என்னைக் கடலுக்குள் தூக்கி எறிந்து விடுவீர்கள் போலிருக்கிறது! நாள் கணக்கில் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டீர்கள் போல் இருக்கிறது! மாமன்னருடன் யானைமேல் போனபோது ஒரு முறை கூடப் பின்னால் திரும்பிப் பார்க்காமல் சென்றீர்களே, இதற்கெல்லாம் காரணம் என்னிடம் விருப்பம் மிகுதியானதுதானா?"

"நீதான் என்னை நெருப்பாகப் பற்றிஎரியச் செய்துவிட்டாயே!" என்றான் இளங்கோ. "அந்த நெருப்பில் நானும் வெந்துபோய் வீணாக உன்னையும் வாட்டிவிட்டேன்."

"அப்படியானால் உங்கள் தாத்தா சொன்னதெல்லாம் மெய்தான்."

"என்ன சொன்னார் அவர்?"



"நெருப்போடு பழகுவது போல் உங்களிடம் பழக வேண்டுமென்றூர். இருங்கள், சற்று உங்களிடமிருந்து விலகி உட்கார்ந்து கொள்ளுகிறேன். நெருப்பிடம் நெருங்கினுல் அது என்னைப் பொசுக்கி விடுமல்லவா?"

வேண்டுமென்றே சிறிது ஒதுங்கிக் கொண்டு, கலகலவென்று சிரித்தான் ரோகிணி. மங்கலான அந்த ஒளியில் கூட அவளுடைய முத்துப் பல் வரிசை மின்னலெனப் பளிச்சிட்டது.

"இவ்வளவு அழகாகச் சிரிக்கத் தெரிந்த நீதானு அன்று அப்படி என் மீது சீறி விழுந்தாய்? என்ன காரணத்துக்காக நீ என்னைச் சினந்து கொண்டாய்? சொல்ல மாட்டாயா, ரோகிணி?"

ரோகிணியின் முகம் உடனே வாட்டம் கண்டது. "இந்த வேளையில் அதை ஏன் கிளறி விடுகிறீர்கள்? உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேனே, அது போதாதா உங்களுக்கு?"

"போதாது: எனக்குக் காரணம் தெரிந்தாக வேண்டும். அப்போது தான் என் மனம் அமைதி பெறும்" என்ருன் அந்தப் பிடிவாதக்காரன்.

"உங்கள் மன அமைதிக்காக என் மனத்தின் அமைதியை இழக்க வேண்டியிருக்கிறது. இருந்தாலும் சொல்கிறேன்" என்று துயரம் நிறைந்த குரலில் கூறினுள் ரோகிணி. சொல்ல முடியாமல் அவள் தவித்த தவிப்பு அவள் முகத்தில் நன்ருகத் தெரிந்தது.

"அப்படியானுல் அதைச் சொல்ல வேண்டாம் ரோகிணி, விட்டு விடு" என்ருன் இளங்கோ.

"இல்லை; அதில் ஒன்றும் ரகசியமில்லை. நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியதுதான்" என்ருள் ரோகிணி. அவள் குரல் தழுதழுத்தது. "நான் அளவுக்கதிகமாக என்னுடைய நாட்டின் மீது பற்றுதலும் பக்தியும் வைத்திருக்கிறேன். என் தந்தையாரிடமும் தம்பியிடமும் ஆழ்ந்த பாசம் வைத்திருக்கிறேன். உண்மையைச் சொல்லப் போனுல் உங்கள் சோழ நாட்டுக் கப்பல் என் உடலைத்தான் இங்கே சுமந்து கொண்டு வந்திருக்கிறது. என்னுடைய உயிரில் ஒரு பாதி கப்பகல்லகம் அரண்மனைக்குள் கலகலப்போடு சுற்றிக் கொண்டிருக்கிறது. மறுபாதி ரோகணத்துக் காட்டுக்குள் என் தம்பியைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறது. நான் என்ன செய்வேன்? விதி என்னை இருகூருய்ப் பிய்த்தெடுத்து வேடிக்கை பார்க்கிறது."

கண்களைத் துடைத்துக் கொண்டு மேலே கூறினுள் ரோகிணி. "கூண்டில் அடைபட்ட கிளியாக நான் கப்பலில் நின்று துடித்துக் கொண்டிருந்த வேளையில் நீங்கள் எதிர்ப்பட்டு வந்தீர்கள். விதியின் மேல் பொங்கி எழுந்து கொண்டிருந்த வெறுப்பு உங்கள் மீது திரும்பியது. நான் விதியை வெறுத்தேன்; என்னையே நொந்து கொண்டேன்; உங்களை வெறுக்கவில்லை."

"விதி என்கிற சொல்லில் எனக்கும் பங்கு உண்டல்லவா? நீ இந்த நிலைக்கு வருவதற்கு நானுந்தானே ஒரு காரணம்?" என்ருன் இளங்கோ.

"காரண காரியங்களை இப்போது ஆராய்ந்து பயனில்லை. முதன்முதலில் உங்கள் சக்கரவர்த்தி தூது அனுப்பிய போதே என் தந்தையார் அதை ஒப்புக் கொண்டிருக்கலாம். அமைச்சரின் உருவில் விதி குறுக்கே நின்று தடுத்துவிட்டது. அடுத்தாற் போல் அது எங்களுக்குப் போரில் தோல்வியைத் தந்தது. அதையும் அடுத்து என் தம்பியைப் பிரித்தது. பிறகு என் உருவத்திலேயே போய் என் தந்தையைக் காட்டிக் கொடுத்தது; மணிமுடியை உங்களுக்கு மீட்டுக் கொடுத்தது; எங்களை அடிமைகளாய்க் கப்பலேற வைத்தது."

குலுங்கிக் குலுங்கி அழுதாள் ரோகிணி. அவளை எப்படித் தேற்றுவது என்று இளங்கோவுக்குத் தெரியவில்லை. அன்பான மொழிகள் பல சொல்லிப் பார்த்தான். ஆதரவான வார்த்தைகளால் ஆறுதல் அளிக்க முயன்ருன். எளிதில் அவளால் தன்னைத் தேற்றிக் கொள்ள இயலவில்லை.

"இளவரசே! நாங்கள் நாடு இழந்து வீடிழந்து வந்திருக்கும் அநாதைகள். தஞ்சைத் தலைநகருக்குப் போனபிறகு எங்களுடைய எதிர்காலம் எப்படியிருக்குமோ என்னவோ தெரியாது. அரண்மனையில் இருப்பவர்கள் எங்களை எப்படி நடத்துவார்களோ, அது புத்தபகவானுக்குத்தான் தெரியும். இதுவரை உங்களிடம் மட்டுமே ஓரளவு நெருங்கிப் பழகியிருக்கிறேன். பழகிய அந்த ஒரே மனிதரின் மனத்தையும் புண்படுத்தி விட்டேன். அதற்காக ஆயிரம் முறை மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவே உங்களைச் சந்திக்க விரும்பினேன். என்னை மன்னிப்பீர்களா?"

"போதும் ரோகிணி!" என்று செல்லமாகக் கடிந்து கொண்டான் இளங்கோ.

"தஞ்சைக்குப் போய் விட்டால் இனி உங்களைச் சந்திப்பது கடினம்! நீங்கள் ஆண் பிள்ளை, அதிலும் ஒரு நாட்டின் இளவரசர். தஞ்சையிலிருந்து சொந்த ஊருக்குப் போனுலும் போவீர்கள். அல்லது இன்னும் எத்தனையோ போர்க்களங்கள் உங்களுக்காகக் காத்திருக்க

லாம். அப்படியே நீங்கள் தஞ்சையில் தங்கினாலும் மீண்டும் உங்களைப் பார்க்க முடியுமோ முடியாதோ? பெரும்பாலும் இதுவே நம்முடைய கடைசிச் சந்திப்பாக இருந்தாலும் இருக்கும். அதனால் தான் இன்று உங்களை எப்படியும் பார்க்க வேண்டுமென்று துடித்தேன். பிரியும் போது மனக் கசப்புடன் பிரியக்கூடாதல்லவா? நான் உங்களை வெறுக்கவில்லை. இதை நீங்கள் தெரிந்து கொண்டால் போதும். — போய் வாருங்கள்.''

கரம் கூப்பி விட்டுச் சரேலென்று எழுந்து சென்றாள் ரோகிணி.

"ரோகிணி!'' என்று பதறினான் இளங்கோ. "நில்! ஒரே ஒரு கணம் நின்று விட்டுப் போ!''

"என்ன?''

"நீ நினைப்பதுபோல் இது நம் கடைசிச் சந்திப்பாக இருக்காது.''

"எப்படியாவது இருந்து விட்டுப் போகட்டும்'' என்று துக்கத்துடன் கூறினாள் அவள்.

"நீ என்னை வெறுக்கவில்லை என்று மட்டும்தானே சொன்னாய்? விரும்புவதாகச் சொல்லவில்லையே?''

ரோகிணி பதில் அளிக்கவில்லை.

"சொல், ரோகிணி! நீ என்னை விரும்புகிறாயா?'' — மீண்டும் கேட்டான் இளங்கோவேள்.

மௌனமாக அடுத்த அடி எடுத்து வைத்தாள் ரோகிணி.

"சொல்லி விட்டுப் போ!'' என்று வெடுக்கென்று அவள் கரத்தைப் பற்றி இழுத்தான் இளங்கோ.

"தயவுசெய்து இப்போது எனக்குத் துன்பம் தராதீர்கள். நான் போய் என் தந்தையாரைப் பார்க்கவிரும்புகிறேன்.''

இளங்கோவின் கைப்பிடி நழுவியது. ரோகிணியும் அவன் பார்வையிலிருந்து நழுவினாள். அவன் எழுப்பிய வினாவுக்கு விடை கொடுக்க வேண்டிய அவளது உருவம் இருளில் மறைந்து சென்று கொண்டிருந்தது.

## ஏழாம் அத்தியாயம்

# மலர் தூவிய மங்கையர்

அவள் சென்று மறைந்த இருள் வெளியைப் பார்த்துக் கொண்டு நின்ற இளங்கோ, சட்டென்று படிகளில் ஏறிக் கரையோரமாக நடந்தான். இனம்புரியாத வேதனையால் அவன் மனம் புழுங்கத் தொடங்கியது. 'விரும்புகிறேன்' என்று ஒரே ஒரு சொல் அவள் சொல்லி விட்டுப் போகக் கூடாதா? வெறுப்பையாவது அவனால் ஒரு வகையில் தாங்கிக் கொள்ள முடிந்தது. விருப்பும் வெறுப்பு மற்ற சூனியத்தை எப்படித் தாங்குவது?

ஒன்று, சொர்க்கத்தில் மிதக்கவேண்டும்; அல்லது நரகத்தில் உழல வேண்டும். சொர்க்கமும் நரகமுமற்ற ஓர் அந்தரத்தில் தலைகீழாகத் தொங்கவிட்டு விட்டுப் போய் விட்டாளே?

குனிந்த தலை நிமிராமல் அவன் நடந்து கொண்டிருந்த போது, "இளங்கோ!'' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டான். குளத்தங்கரைச் சுவரில் ஓர் உருவம் சாய்ந்து கொண்டு நின்றது.

"யாரது?''

"பாவம்! குரல்கூட உனக்கு மறந்து விட்டது. இந்த ஏழை நண்பனை நீ அதற்குள்ளாக மறந்திருக்கக் கூடாது, இளங்கோ!''

வீரமல்லனின் கரம் உரிமையோடு இளங்கோவின் தோளை வளைத்துக் கொண்டது. இளங்கோவுக்கு அது பிடிக்க வில்லை. மெதுவாக அவன் கரத்தைத் தன்னிடமிருந்து எடுத்து விட்டுக் கொண்டே, "ஓ! நீயா?'' என்று ஏதோ கனவிலிருந்து விழித்துக் கொண்டவனைப் போலக் கேட்டான்.

"ஆமாம்! நான்தான் உன்னுடைய துர்ப்பாக்கியசாலியான நண்பன். கப்பலை விட்டு நீ இறங்கியவுடனேயே ஓடிவந்து உன்னைத் தழுவிக் கொள்ள வேண்டுமென்று நினைத்தேன். அது கைகூடவில்லை. நீயோ மிகப் பெரியவனாகிவிட்டாய்; பெரியவர்களிடமிருந்து உன்னைப் பிரித்துக் காண முடியவில்லை. போகட்டும்! உன்னுடைய வெற்றி என் வெற்றி! நீ வெற்றியுடன் திரும்பி வந்ததற்கு என்னுடைய வாழ்த்துக்களை ஏற்றுக்கொள், இளங்கோ!''

"நமக்குள் இந்த உபசார மொழியெல்லாம் எதற்கு?'' என்று கேட்டுச் சிரிக்க முயன்றான் இளங்கோ. சிரிப்பு வரவில்லை. சிரிப்புக்குப் பதிலாகச் சினம் கொப்பளிக்கத் தொடங்கியது. "வீரமல்லா! களைப்பாக இருக்கிறது; மாளிகைக்குப் போய் உறங்க வேண்டும். காலையில் மீண்டும் சந்திக்கலாம்.''

"உன்னிடம் ஒரு செய்தி சொல்வதற்காகத் தேடிக்கொண்டிருந்தேன். அதை மட்டும் கேட்டு விட்டுப் போய் விடு'' என்றான் வீரமல்லன்.

"என்ன?"

"ரோகணத்திலிருந்து வந்திருக்கும் அந்த அடிமைப் பெண் உன்னைத் தனியே சந்திக்க வேண்டுமென்று கூறினாள். எனக்கு அது பிடிக்கவில்லை. என்றாலும் செய்தியைச் சேர்த்து விட வேண்டியது என் கடமையல்லவா?"

"அடிமைப் பெண்ணா! யாரது?" இளங்கோவின் கண்கள் எரி நெருப்பாக மாறின. வீரமல்லனை நன்றாக உற்றுப் பார்த்தான். அவன் தன்னைத் தேடி எங்கும் போகவில்லையென்பதும், தானும் ரோகிணியும் சந்தித்து விட்டதால் தன்னிடம் நல்லவனென்று பெயரெடுப்பதற்காக இப்படிச் சொல்கிறானென்றும் இளங்கோவுக்கு விளங்கி விட்டது.

"வீரமல்லா! யார் அந்த அடிமைப் பெண்?" என்று மீண்டும் அவனைக் கேட்டான் இளங்கோ.

"சக்கரவர்த்திகள் சிறைப்படுத்திக் கொண்டு வந்திருக்கிறார்களே, அந்த மகிந்தரின் மகள்!"

"ஓ!" என்று வினயமான வியப்பொலி கிளம்பியது இளங்கோவிடமிருந்து. "ரோகிணியைப்பற்றிச் சொல்கிறாயா! அவள் உன்னிடம் என்ன கூறி அனுப்பினாள்?"

"இளங்கோ! நீண்ட நாள் பிரிவுக்குப் பின் சந்திக்கும் நாம் ஏதாவது நல்ல விஷயங்களைப் பற்றிப் பேசலாம். ரோகணத்துப் போர்க்களம் எப்படி இருந்ததென்று சொல். நீ எப்படி அந்த மணிமுடியை எடுத்துக் கொண்டு வந்தாய்?"

"ரோகிணியைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தாய்....."

"எனக்கென்னவோ அவளைப் பற்றிப் பேசவே பிடிக்கவில்லை. ரோகணத்துப் பெண்கள் எல்லாருமே இவளைப் போல் தான் இருப்பார்களா? சிறிதுகூட நாணமில்லாமல் என்னை உன்னிடம் இந்த வேலையில் தூது அனுப்பத் துணிந்தாளென்றால், அவளைப் பற்றி என்ன சொல்வது? 'குளத்தங்கரையில் உன்னிடம் ஏதோ தனித்து ரகசியம் பேச வேண்டுமென்றாள். காத்திருப்பதாய்ச் சொன்னாள். இதைக் கேள்வியுற்றால் மாமன்னர் உன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார்?"

"ஒன்றுமே நினைக்க மாட்டார்; மாமன்னருக்கும் அவளைத் தெரியும். அந்த நாட்டின் மற்றப் பெண்களைப் போலவே அவளும் கள்ளம்கபடமின்றிப் பழகக் கூடியவள்."

"உன் பேச்சைப் பார்த்தால் நீகூட அவளுடைய சாகசத்துக்கு அடிமையாகியிருப்பாய் என்று தெரிகிறது" என்று கூறி நகைத்தான் வீரமல்லன். "நண்பனென்ற முறையில் உன்னைச் சற்று எச்சரித்து வைப்பது என் பொறுப்பு. இன்னும் தன்னை ஒரு நாட்டின் இளவரசி என்றே நினைத்துக் கொண்டிருக்கிறாள். அவளைப் போல் அகந்தை கொண்ட சாகசக்காரியை நான் பார்த்ததே இல்லை. நீ மிகவும் கவனமாக நடந்து கொள்ள வேண்டும், இளங்கோ!"

"மிகவும் நன்றி, வீரமல்லா! எனக்கும் அவளைப் பற்றி ஓரளவு தெரியும். இரண்டு மூன்று மாதங்களாக நான் அவளுடன் பழகியிருக்கிறேன்."

"என்ன?"

"ஆமாம்; ஒரு முறை என் உயிரைக் காப்பாற்றியவள். மணிமுடி இந்த நாட்டுக்கு வந்து சேர்வதற்கே ஒரு வகையில் காரணமாக இருந்தவள்."

"வீரனாக ஈழத்துக்குப் புறப்பட்டவன் கோழையாகத் திரும்பி வந்திருக்கிறாய், இளங்கோ!" என்றான் வீரமல்லன். "அடிமைப் பெண்ணுக்காக நீ பரிந்து பேசுவதைப் பார்த்தால் ஏதோ அங்கே விபரீதம் நடந்திருக்குமென்று தோன்றுகிறது. கேவலம் ஒரு பெண்பிள்ளை உன் உயிரைக் காப்பாற்றுவதாவது! மணிமுடியை எடுத்து வந்தவன் நீதான் என்று மாமன்னர் பறைசாற்றிக் கொண்டிருக்கிறார். நீயோ அந்தப் பெருமைக்குரியவள் அந்த அடிமைப் பெண்தானென்கிறாய். நீ சொல்வது விசித்திரமான கதை நண்பா!"

அதற்கு மேலும் அங்கு நின்றால் தன் பொறுமை பாழாகி விடும் என்று தோன்றியது இளங்கோவுக்கு. "சரி, நான் வருகிறேன்" என்று சொல்லி விட்டுத் திரும்பிப் பாராமல் விரைந்தான்.

மறு நாள் மாலை தஞ்சை மாநகரத்தின் கிழக்கு வாயிலுக்கு உள்ளேயும் வெளியேயும் மக்கட் பெருங்கடல் அலைமோதிக்கொண்டிருந்தது. மாமன்னரது வெற்றி ஊர்வலம் செல்லக்கூடிய பிரதான சாலைகள்தோறும் நகரத்து மாந்தர்கள் வந்து குழுமிய வண்ணமாகவே இருந்தனர். கிழக்கு வாயிலுக்கு வெளியே தமது பரிவாரங்களை நிறுத்தி முறைப்படி அணிவகுப்புக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார் சக்கரவர்த்தி.

இதுகாறும் அந்தப் பரிவாரங்களுடன் வந்து கொண்டிருந்த ரதம் ஒன்று இப்போது அங்கு காணப்படவில்லை. பட்டுத் திரை தொங்கிய அந்தப் புரவிகள் பூட்டிய ரதத்தை வல்லவரையரின் துணையோடு தெற்கு வாயில் வழியாக நகருக்குள் அனுப்பி விட்டார் இராஜேந்

திரர். ரதத்துக்குள்ளே வருபவர்கள் யாரென்று தெரிந்து விட்டால், ஒரு வேளை மக்களின் உற்சாக வெறி கட்டுக் கடங்காது போய்விடலாம்.

அன்னிய விருந்தினர்களின் மனத்தைக் கலக்கக்கூடிய அசம்பாவித நிகழ்ச்சிகள் ஏதும் நடந்துவிடக் கூடாதல்லவா? லட்சக்கணக்கான மனிதர்களில் யாரோ ஒரு சிலர் கட்டுப்பாட்டை மறந்து நடந்து கொண்டாலும் அது நாட்டின் பண்பாட்டைத்தானே பாதிக்கும்?

மகிந்தரின் குடும்பத்தார் பத்திரமாகத் தெற்கு வாயில்வழியே நகருக்குள் நுழைந்து அரண்மனைக்கு வந்து சேர்ந்தார்கள். வல்லவரையரின் கண் சாடையிலும் கை அசைப்பிலும் அங்கு அவர்களுக்குச் சற்றும் எதிர்பாராத உபசாரங்கள் நடந்தன. மகிந்தர் பிரமித்துப் போனுர்; ரோகிணியோ வாயடைத்துப் போய் நின்ருள். விருந்தோம்பல் என்பது தமிழர்களின் பிறவிக் குணங்களில் முதன்மையானதா!

அருள்மொழி நங்கைக்கு ரோகிணியை அறிமுகப்படுத்திய வந்தியத் தேவர், "அருள்மொழி! ரோகணத்திலிருந்து உன்னைப் பார்க்க உன் தங்கை ரோகிணி வந்திருக்கிருள்; தங்கமான பெண்" என்று கூறினுர்.

பெண்ணுக்குப் பெண் அழகைக் கண்டு பொருமைப்படுவது வழக்கம். ரோகிணியின் அழகைப் பார்த்து அருள்மொழி பெருமை கொண்டாள். அருள்மொழியின் அடக்கம் கண்டு ரோகிணி வியப்புற்ருள். மாபெரும் சோழ சாம்ராஜ்யத்து மாமன்னரின் மகளா இவள்!

"தாத்தா! அக்காளுக்கு இவர்கள் தங்கை; எனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டுக்கொண்டே குதித்தோடி வந்தாள் அம்மங்கை தேவி.

"அருள்மொழிக்குத் தங்கை; உனக்குத் தமக்கை!" என்ருர் வல்லவரையர். பிறகு ரோகிணியிடம், "ரோகிணி! உனக்கு உன் சகோதரிகளைப் பிடித்திருக்கிறதா?" என்று கேட்டார்.

"நான் பாக்கியம் செய்தவள்!" என்று நாத் தழுதழுக்கக் கூறிக்கொண்டு இரண்டு பெண்களுக்கும் கரம் கூப்பி வணக்கம் தெரிவித்தாள் ரோகிணி. ஆனந்தக் கண்ணீர் வழிந்தோடியது, அவளது நீண்ட விழிகளிலிருந்து.

அருள்மொழியும் அம்மங்கையும் அவளை ஆளுக்கொருபுறமாய்ப் பற்றி இழுத்துக் கொண்டு உள்ளே சென்றனர்.

"இன்னும் நான்கு நாழிகைப் பொழுதில் ஊர்வலம் அரண்மனை வாயிலை அடைந்து விடும். வரவேற்புக்கு அனைவரும் சித்தமாக இருங்கள்" என்று கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டுவிட்டார் வந்தியத் தேவர்.

**ஊ**ர்வலம் ஊருக்குள் நுழைந்தது.

"ஜல்! ஜல்! ஜலஜல ஜல்! ஜல்!" எனப் பல்வகைத் தாளங்களான கஞ்சக் கருவிகள் ஒலி உதிர்த்தன.

சிறிய மேளம், பெரிய மேளம், முரசங்கள் முதலிய தோற் கருவிகளெல்லாம் முழக்கம் செய்தன.

இன்னும் துளைக் கருவிகள், நரம்புக் கருவிகள், கண்டக் கருவிகள் ஆகிய அனைத்தும் அவற்ருேடு ஒன்று சேர்ந்து கொண்டன.



இசை வெள்ளம் பெருக்கிச் சென்ற காளையர்களுக்குப் பின்னுல் ஆயிரமாயிரம் வீரர்கள் புலிக்கொடி ஏந்தி ஏறு நடை போட்டுச் சென்றனர். அவர்களையடுத்து வேல் தாங்கிய வீரர்களின் புரவிக் கூட்டம்.

பட்டத்து யானையின் அம்பாரி மீது தமிழ் மன்னனின் மணிமுடி தனியே சென்றது. மாலைக் கதிரவன் அந்தப் பொன் முடிக்குப் புது மெருகு கொடுத்துக் கொண்டு வந்தான்.

அதற்கடுத்த யானையின் மீது வேங்கையின் மைந்தர் கொடும்பாளூர்க் குலக் கொழுந்தோடு சரியாசனத்தில் அமர்ந்திருந்தார். அவரது கம்பீரமான பார்வை தமது குடிமக்கள் கூட்டத்தை அடிக்கடி தழுவிக் கொண்டு வந்தது. இளங்கோ வேளுக்கு அங்கு இருக்கை கொள்ளவில்லை. மாமன்னரின் ஆணை என்பதால் அமைதியோடு அமர்ந்து வந்தான்.

அரண்மனைக் கோட்டை வாயிலின் மேன்மாடத்தில் நந்தவனத்துச் செடிக் கொண்டைகள் போல் மங்கையர்கள்




"ஸார்! ராவ்சாஹேப் ராமாச்சாரியின் வீட்டுக்குப் போய் அவர் பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுக்கும்படி கேட்டேன். ஆத்திரத்தில் என்னைக் கழுத்தைப் பிடித்துத் தோட்டத்து வாசற்படி வழியாக வெளியே தள்ளினார்!"

"பிறகு?"

"பிறகு நான் ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவன்னு சொன்னதும் என்னை வாசல் வழியாகக் கழுத்தைப் பிடித்து வீட்டினுள்ளே தள்ளி விட்டார்!"

மலர்ந்திருந்தனர். அவர்களுக்கு எதிரில் குவியல் குவியலாக நறுமலர்கள் பொற் தட்டுகளில் குவிந்திருந்தன. அருள்மொழி ஒரு புறமும் அம்மங்கை மறு புறமும் நிற்க, ரோகிணி அவர்களுக்கு மத்தியில் நின்று கொண்டிருந்தாள்.

மணிமுடி தாங்கிய பட்டத்து யானை ஆடி அசைந்து கோட்டை வாயிலை நெருங்கிக் கொண்டிருந்தது. மற்ற இரு பெண்களும் அதை நோக்க, ரோகிணி மட்டும் அடுத்த யானை மீது வரும் இளங்கோவை நோக்கினாள். அவளுடைய கரங்கள் இரண்டும் அவளையறியாமலே மற்றப் பெண்களைப்போல் எதிரே குவிந்திருந்த மலர்களை அள்ளின. மணிமுடியின் மீது தூவின.

இளங்கோவின் மீது தூவுவதாக எண்ணம் ரோகிணிக்கு.

இந்தக் காட்சியைக் கண்ட அருள்மொழிக்குப் புல்லரித்தது. அருள்மொழி ரோகிணியின் கரங்களைத்தான் கண்ணுற்றாளே தவிர, அவள் கண்களைக் கவனித்துப் பார்க்கவில்லை.

'தாங்கள் பறி கொடுத்த முடி என்று கூடப் பாராமல், இந்த வெற்றி விழாவில் பங்கு கொள்கிறாளே, இவள்! எவ்வளவு பரந்த மனம் இவளுக்கு!'

அடுத்தாற்போல் மாமன்னரும் இளங்கோவும் வீற்றிருந்த மதக் களிறு கோட்டை வாயிலை நெருங்கியது. பெண்கள் மூவருமே தங்களை மறந்து மலர்களை வாரி வாரித் தூவத் தொடங்கினர். அருள்மொழி இப்போதும் ரோகிணியின் செய்கையைக் கவனித்தாள். வெற்றி பெற்ற சக்கரவர்த்தியின் மேல், தோல்விகண்ட மன்னரின் மகளுக்குச் சிறிது கூடப் பகைமை யில்லையே! தந்தையார் மீது அவள் சற்றும் தயங்காமல் மலர் மழை பொழிந்த வண்ணமாக இருக்கிறாளே!

மூன்று பெண்களும் போட்டி போட்டுக்கொண்டு தங்களுக்கு எதிரில் பொற் தட்டுகளில் இருந்த மலர்க் குவியல்களைக் கரைக்க முற்பட்டனர்.

யானையின் மீதிருந்த இளங்கோ தன் தலையைத் தூக்கி மேலே கோட்டை வாயில் மாடத்தைப் பார்த்தான். இரண்டு பெண்கள் மட்டிலுமே அவன் கண்களுக்குத் தெரிந்தனர். ஒருத்தி அருள்மொழி; மற்றொருத்தி ரோகிணி. அவர்கள் இருவரது கரங்களிலுமிருந்து உதிர்ந்த மலர்கள் அவனுடைய இரு தோட்களிலும் விழுந்து சிதறின.

மேல் நோக்கி அவன் கையசைத்துச் சிரிப்பதற்குள், யானை அவனைக் கோட்டைக்குள் கொண்டு சென்றது.

அருள்மொழிக்கு அவன் தன்னைப் பார்த்துச் சிரிப்பதுபோல் தோன்றியது. ரோகிணிக்கு அவன் தன்னைப் பார்த்துக் கையசைப்பது போல் தோன்றியது.

ஒரு கணம் சென்றவுடன், "ரோகிணி! எங்கள் நாட்டுப் பண்புக்கு ஈடு இணை கிடையாதென்று இதுவரை எண்ணிக் கொண்டிருந்தேன்; உங்கள் நாட்டுப் பண்பும் எங்களுடையதை ஒத்திருக்கு மென்று இப்போது தெரிகிறது" என்றாள் அருள்மொழி.

ரோகிணிக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"முதலில் மணி முடியின்மீது மலர் தூவினாய். பிறகு மாமன்னரின் மீது தூவினாய். ரோகணத்து இளவரசியாக இருந்தும் உன்னிடம் வேற்றுமையைக் காணோமே!"

'மாமன்னரின்மீது மலர் தூவினேனா!' என்று நினைத்துத் தனக்குள் வியப்புற்றாள் ரோகிணி. மறு கணமே நிலைமையை உணர்ந்துகொண்டு அவள் விழிப் படைந்து விட்டாள்.

"நீங்கள்தாம் என்னை உங்கள் தங்கையாக ஏற்றுக் கொண்டு விட்டீர்களே!" என்ற சொற்கள் ரோகிணியிடமிருந்து வெளிவந்தன.

"உண்மையில் நீ என் தங்கைதான்!" என்று அவளை அன்பின் மிகுதியால் தழுவினாள் அருள்மொழி. (தொடரும்)




வெட்டவெளி தன்னில் ஏகாந்தமாய் இருந்த கிணறு ஒன்று. பூமியோடே உண்டானதுபோல வயசு தெரியாத கிணறு.

வறுமையில் வாடும் தாயைப் போன்றது அந்தக் கிணறு; ஊற்றமில்லாதது.

பனைமரம் அளவின் ஆழத்திலே ஏதோ செல்வத்தை அடக்கி வைத்திருப்பதுபோல் இரண்டு குடம், இரண்டே குடம் தண்ணீரே அதன் சொத்து.

அந்த இரண்டு குடம் தண்ணீரை உலகம் என்று நினைத்து வாழ்ந்த தவளை ஒன்று. அந்த உலகத்தில் உயிருடன் இருந்தது அந்தத் தவளை ஒன்றே. தன்னையே தெய்வமாக நினைத்து வந்தது அந்தத் தவளை. அதற்குப் பசி என்றால் என்ன என்று தெரியாது. வலி என்றால் என்ன என்று தெரியாது. பிறப்பும் தெரியாது; சாவும் தெரியாது.

கிணறே உலகமென்று நினைத்து வாழும் பேதைத் தவளை.

உளுந்தில் எண்ணெய் தடவினாற்போல் இருக்கும் விழிகளை உருட்டி மேலே பார்க்கும். நீல நிறமாய் வட்ட வடிவமாய்த் தூரத்தில் ஏதோ இருப்பதுபோல் அதற்குத் தோன்றும். அதுவே கிணற்றின் சின்னஞ்சிறு வட்டத்தின் வழியாய்த் தெரியும் வானமென்றும், அவ்வானத்தின் அடியில் பரந்து இருக்கும் பெரிய உலகம் ஒன்று உண்டு என்றும் அறியாச் சிறு தவளை அது.

ஆனால் பெரிய உலகத்தில் கஷ்டப்படுவதைவிடச் சின்ன உலகத்தில் திருப்திப்பட்ட தவளை அது.

* * *

ஒரு நாள்.

தன் உலகத்தில் தொப்பென்று யாரோ அந்நீல நிறப் பட்டுப் படுதாவைக் கிழித்துக் கொண்டு விழுந்ததைப் பார்த்தது அத் தவளை.

தன்னைப் போலவே பின்னங்காலை மடக்கிப் போட்டுக் கொண்டு விழிகளை உருட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த விருந்தாளியைக் கண்டு ஆச்சரியப்பட்டது தவளை.

உயிருடன் இன்னொரு பொருளா? இது நியதிக்குத் தகாதென நினைத்தது தவளை; கிணற்றுத் தவளை.

''நீ இங்கே எப்போது வந்தாய்?'' என்று கேட்டது பெரிய உலகத்துத் தவளை.

''எனக்குத் தெரியாது! நான் எங்கிருந்து வருவது? இதைவிட வேறு இடம் எது? உன்னைப்போல் நீலத் திரையிலிருந்து என் நினைவறியாப் பருவத்தில் வந்திருக்கலாம்.''

விருந்தாளித் தவளை பெரிதாய்ச் சிரித்தது.

''அது நீலத் திரையல்ல. வானம். இதுவே உலகம் என்று நினைத்துக் கொண்டாயா? இது வெறும் பாழடைந்த கிணறே. உலகம் என்பது பெரிசு. மிகப் பெரிசு'' என்று முன்னங் கால்களை விரித்துக் காட்டியது விருந்தாளித் தவளை.

கிணற்றுத் தவளைக்கு இதில் நம்பிக்கையே இல்லை. உலகத்தில் சுவர்க்கம், நரகம் என்று கூறுவதை மனிதர்கள் நம்பாததைப் போலச் சிறிதும் நம்பாமல் விழித்தது கிணற்றுத் தவளை.

இதுவே—நம்பாமல் இருப்பதே அந்தத் தவளையின் முதல் அநுபவம். பெரிய உலகத்தில் உள்ள அற்புதமான பொருள்களைப் பேசித் தீர்த்தது விருந்தாளித் தவளை.




"அப்பா, நீ எழுதின கதை வந்திருக்குப்பா!"

"எதிலேடா?"

"தபால்லே!"

"அப்படிப்பட்ட உலகத்தை நீ பார்க்க வேண்டாமா? அந்த உலகத்தில் வாழ வேண்டாமா?"

"எதற்காக அங்கே வர வேண்டும்?"

"உனக்கு ஆசை என்றே இல்லை போலிருக்கிறது. அந்த உலகத்தில் ஆசைப்படாத ஜீவன் இடையாது."

கிணற்றுத் தவளைக்கு ஒன்றும் புரியவில்லை.

"ஆசை என்றால் என்ன?"

கிணற்றுத்தவளை சுத்த அசட்டுத் தவளை—உலகம் தெரியாதது என்று முடிவு செய்தது விருந்தாளித் தவளை.

"நீ ஆசைப்பட்டதே யில்லையா? ஆசை என்றால் நீ இப்போது இருக்கும் நிலையைவிட இன்னமும் நன்றாக இருக்க நினைப்பது."

"அந்த நினைவே ஆசையானால் அந்த நினைவு பூர்த்தியாகும் என்று நிச்சயமா?"

கிணற்றுத் தவளையின் கேள்விக்குப் பதில் தெரியாமல் விழித்தது விருந்தாளித் தவளை. இருந்தாலும் சமாளித்துக் கொண்டது.

"ஆசைப்பட்டால்தான் முயற்சி செய்ய உற்சாகம் வரும். அந்த ஆசை நிறைவேறினால் அப்போது மனசுக்குத் திருப்தி வரும்."

"அப்படியென்றால் ஆசையும் திருப்தியும் மனசில் தோன்றுவதுதானா?"

"ஆமாம். ஆசை முழுதும் பூர்த்தியான பின்னரே திருப்தி உண்டாகும்." இந்தப் பதிலைச் சொல்லிவிட்டு விருந்தாளித் தவளை நன்றாகச் சொன்னோம் என்று மகிழ்ச்சியடைந்தது.

கிணற்றுத் தவளைக்கு மறுபடியும் சந்தேகம்.

"உனக்கு இப்போது திருப்தி இருக்கிறதா?"

இதைக் கேட்டு உலகத்துத் தவளை விழித்தது. தானே யோசித்துப் பார்த்தது. இல்லையென்று தலையை ஆட்டியது.

"ஏன்? உன் ஆசை நிறைவேறவில்லையா?"

உலகத்துத் தவளை மறுபடியும் இல்லையெனத் தலையை ஆட்டியது.

"உன் ஆசைதான் என்ன?"

"என் ஆசை என்று ஒன்று இல்லை. ஆசைப்படுபவர்களின் ஆசை கடல் போன்றது. எனக்கு இருக்கும் ஆசைகள் நிறைவேற இந்த வாழ்க்கை போதாது!" என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டது உலகத்துத் தவளை. இதைக் கேட்டுச் சோர்வடைந்தது கிணற்றுத் தவளை.

"அப்படியென்றால் உனக்குத் திருப்தியே கிட்டாது."

உலகத்துத் தவளைக்குக் கிணற்றை விட்டுப் போக வேண்டுமென்று பரபரப்பு.

"நீயும் என்னுடன் வா. வந்து பார்த்தால் தான் பெரிய உலகத்தின் அருமையை உணர்ந்து கொள்வாய்!"

'சரி' என்று கிணற்றுத் தவளை அரை மனசுடன் ஒப்புக் கொண்டது.

இரண்டும் பின்னங்கால்களை உதைத்துத் தவ்வின.

நீர் மட்டத்துக்கு மேலே நான்கடி உயரத்திலிருந்த கல்லிலே ஊன்றிக் கொண்டன.

"இன்னும் வெகு தூரம் மேலே போக வேண்டும்" என்றது உலகத்துத் தவளை.

ஆனால் இரண்டும் கால் வழுக்கிக் கீழே விழுந்தன.

வலியே இன்னதென்று அறியாக் கிணற்றுத் தவளைக்கு வலி பொறுக்க முடியவில்லை. 'ஓ'வென்று அழுதது. அழுகை அதனுடைய முதல் அநுபவம்.

"இந்த வலி ஒரு பிரமாதமா?" என்று உலகத்துத் தவளை சொல்லி விட்டு அடுத்த முயற்சிக்குத் தயாராகி விட்டது.

கிணற்றுத் தவளையையும் முயற்சி செய்கிறேன் என்று மிகப் பாடுபட்டு ஒத்துக் கொள்ள வைத்தது.

"நீ இப்போது முன்பைவிட நன்றாய் ஆசைப்பட வேண்டும். அப்போது இன்னும் உயரப் போவோம்."

"சரி!"

இந்த முறை இரண்டும் குதித்து எட்டு அடி உயரே சென்றன.

'ஆஹா!' என்று மகிழ்ந்தது உலகத்துத் தவளை.

"பார்த்தாயா? ஆசை அதிகமானால் முயற்சி அதிகமாகிறது."

ஆனால்......

மறுபடியும் கால் வழுக்கி இரண்டும் கீழே விழுந்தன.

"ஐயோ!" என்று அலறியது கிணற்றுத் தவளை. நாலடியிலிருந்து விழுந்ததைக் காட்டிலும் எட்டடியிலிருந்து விழுந்தபோது மிக அதிகமான வலி.

"வலிக்கிறதா?" என்று பரிவுடன் கேட்டது உலகத்துத் தவளை.

"உயிர் போகிறது. உயரம் அதிகமாக அதிகமாகக் கீழே விழும்போது வலி அதிகமாகுமா?"

"ஆமாம். ஆனால் கவலைப்படாதே. முதலில் விழுந்தால் அப்படித்தான் வலிக்கும். போகப் போகச் சரியாகி விடும். என்னைப் பார்!

உயரத் தாவுவதற்கு ஆசை உள்ளவன் கீழே விழுவதைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.''

'' இன்னொரு முறை முயற்சி செய்'' என்று உலகத்துத் தவளை சொன்னபோது முடியாது என்று மறுத்து விட்டது கிணற்றுத் தவளை.

உலகத்துத் தவளை மன்றாடிக் கேட்டுக் கொண்டு அதனை ஒப்ப வைத்தது.

'' இன்னமும் நன்றாய் ஆசைப்படு.''

இரண்டும் இந்த முறை பதினைந்து அடி உயரத்தில் ஒரே தாவாய் வந்து நின்றன.

கிணற்றுத் தவளைக்குக்கூடச் சந்தோஷம்.

''இந்த முறை மிகமிக உயரம் வந்து விட்டோம். நான் இந்த முறை நன்றாக ஆசைப் பட்டேன்'' என்று கூறிக் கொண்டது.

''பெரிய உலகத்துக்கு வா. அப்போது உன் ஆசைகளுக்கு எல்லையே இருக்காது. உலகத்தில் ஒவ்வொருவரும் படும் ஆசையைக் கண்டு நீ பிரமித்துப் போவாய்.''

''அந்த ஆசைகள் நிறைவேறுகின்றனவா?'' ஏக்கத்துடன் கேட்டது கிணற்றுத் தவளை.

அடுத்தகணம்.
கால் வழுக்கி இரண்டும் விழுந்தன.
இரண்டுக்கும் பிரக்ஞை இல்லை.
கிணற்றுத் தவளை முனகி முனகி விழித்தது. உலகத்துத் தவளையும் விழித்தது.

'' இனிமேல் நான் மேலே வரவில்லை.''

அப்போது சரசரவென்று ஒரு குடம் கயிறுடன் கீழே வந்தது.

'' ஆஹா! அதோ பார்! யாரோ ஒருவர் இங்கே தண்ணீரை எடுக்கக் குடத்தை விடுகிறார்கள். நாம் இருவரும் சுகமாய்க் குடத்திலே ஏறிக் கொண்டு போய் விடுவோம்.''

'' இல்லை. நான் வரவில்லை.''—கிணற்றுத் தவளை சாவதானமாய் ஆனால் அளவற்ற உறுதியுடன் பேசியது.

'' ஆசைப்படுவதற்கோ முடிவே இல்லை. ஆசையால் ஆசையின் பயனாகிய திருப்தி ஏற்படுவதில்லை. ஆசைகள் நிறைவேறாமல் போனாலோ உயரம் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகிறதோ அவ்வளவு வலி அதிகமாவது போல் ஏமாற்றம் அதிகமாய் உண்டாகிவிடுகிறது. அந்தப் பெரிய ஏமாற்றத்தைப் பொறுத்துக் கொள்ளும் மனசு படைத்தவர்கள் சின்ன ஆசையைப் பொறுத்துக் கொள்ளலாமே! எனக்கு ஆசையும் வேண்டாம். ஏமாற்றமும் வேண்டாம். இங்கேயே இருப்பேன்.''

'' நீ பிழைக்கத் தெரியாதவன். ஆசைப் படத் தெரியாதவன் பெரிய உலகத்துக்கு லாயக்கில்லை'' என்று சொல்லிக் குடத்தில் ஏறிப் போய் விட்டது உலகத்துத் தவளை.

இரண்டு குடம் நீரில் ஒரு குடம் சென்றதனால் பாதியாகிவிட்ட தன் உலகத்திலே கிணற்றுத் தவளை திருப்தியுடன் அமர்ந்து கொண்டது.

''நான் சொன்னது சாதாரண விஷயம். இதுகூடவா உலகத்துக்குப் புரியாது?''

புரியுமா?



**வா**ழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளை அப்படியே படமாக்கினால் சுவாரஸ்யமாயிருக்கும் என்று சொல்ல முடியாது. அதற்காகச் சில விஷயங்களை மிகைப்படுத்திக் காட்ட வேண்டியிருக்கிறது. கஷ்டங்களையும் மிகைப்படுத்துகிறோம்; சுகங்களையும் மிகைப்படுத்துகிறோம். சில சமயங்களில் வாழ்க்கையில் இல்லாத ஒன்றைக் கூடக் காட்டுகிறோம். அதற்கு உதாரணமாகக் காதல் காட்சிகளைக் கூறலாம். நம் தமிழ்ப் படங்களில் வரும் காதல் காட்சிகள் யாருடைய வாழ்க்கையிலும் நிகழ்ந்திருக்க முடியாதென்றே கூறலாம். ஒவ்வொரு காதலனும் காதலியும் வெண்மதி விரிக்கும் தண்ணிலவில் சந்தித்துப் பரவசமாகி நடனமாடினால்தான் திரை உலகத்தில் காதலித்ததாகக் கொள்ளப்படுகிறது.

நமக்கும் அம்மாதிரி காதல் காட்சிகளைப் பார்த்துப் பார்த்துப் பழக்கமாகி விட்டது. பத்திரிகைகளில் வரும் காதல் கதைகளையும், படங்களில் வரும் காதல் காட்சிகளையும் பார்க்கும்போது இந்தக் காதலர்களுக்கு வேறு வேலையே கிடையாதா என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் காதல் காட்சிகளே இல்லாமல் படம் எடுக்க முடியாதுதான். கொஞ்சம் சூழ்நிலைகளை மாற்றிக் கூடியவரையில் புதிதாக்கிக் கதையை அமைக்கலாம் அல்லவா?

எஸ். பி. எஸ். பிக்சர்ஸாரின் ''தெய்வமே துணை'' படத்தில் காதல் தனியாக இடம் பெறவில்லை. பழைய பாணியில் 'பெண் பார்த்து'க் கல்யாணம் நடக்கிறது.

# தெய்வமே துணை

காந்தன்



பெண்ணின் பெயர் பார்வதி. தாயை இழந்தவள். அப்பாவின் அன்பில் வளர்ந்தவள். பார்வதியாக வரும் பத்மினிக்கு வில்லன் ரத்தினமாக எம். என். நம்பியார் வருகிறார். படம் ஆரம்பமாகும்போதே கதாநாயகனுக்கு முன்பு வில்லன் வந்துவிடுகிறான்.

பார்வதிக்கு நடத்தை கெட்ட ரத்தினத்திடம் துளிக்கூட விருப்பம் இல்லை. அவள் எவ்வளவு வெறுத்தும் அவன் அவளை விடுகிற வழியாயில்லை. இந்தத் தொல்லையிலிருந்து தப்பப் பார்வதியின் தந்தை அவளுக்குச் சீக்கிரம் விவாகத்தை முடித்துவிடத் தீர்மானிக்கிறார். பார்வதியின் சிற்றப்பா மகன் சேகரின் முயற்சியினால் அவன் நண்பன் சங்கருக்கும் பார்வதிக்கும் திருமணம் நடக்கிறது. இது கண்ட ரத்தினத்தின் உள்ளம் கொதிக்கிறது. பார்வதியைக் கடத்திச் செல்ல முயன்று சிறைப்படுகிறான். சிறையிலிருந்து வந்ததும் பார்வதியின் வாழ்வைக் குலைத்துவிட நினைத்து, அவள் ஒழுக்கத்துக்கு மாக கற்பித்து அவள் கணவனுக்குக் கடிதம் எழுதி அவன் உள்ளத்தில் நஞ்சைச் செலுத்துகிறான். பலன் — பார்வதி தன் குழந்தையுடன் வெளியேற்றப்படுகிறாள்.

(இந்தப் பாழாய்ப் போன சந்தேகம் என்று ஒன்று இருக்கிறபடியினால் தமிழ்ப் படக் கதைகளுக்குச் சந்தேகம் இல்லாமல் ஒரு முடிவு கிடைக்கிறது! இல்லையென்றால் கதையை எப்படி முடிக்கலாம் என்று சந்தேகப்பட்டுக் கொண்டே இருக்க வேண்டியதுதான்!)

''தெய்வமே துணை'' படத்தின் வெற்றிக்குப் பத்மினிதான் துணையாயிருக்கிறார்.

பார்வதியாக வரும் அவர் முகத்தில் குடும்பப் பெண்ணின் பதவிசு குடிகொண்டிருக்கிறது. கணவனால் விரட்டப்பட்டது முதல், அண்ணன் சேகர் வீட்டுக்குச் சென்று அண்ணியின் கொடுமைகளுக்கு ஆளாகி வெளியேறி, கணவனின் மறு கல்யாணச் செய்தியைக் கேட்டு விம்மி, தன் வாழ்வைத் தியாகம் செய்யத் துணிந்து உணர்ச்சிப்பெருக்கில்தவித்த கட்டங்களில் பத்மினியின் நடிப்பு நன்றாயிருக்கிறது. முகபாவங்களிலேயே உயிர்த் துடிப்பையும், உணர்ச்சி வெள்ளத்தையும் பொங்க வைக்கும் அவர் வரும் கட்டங்களில் தியேட்டரில் படம் பார்ப்பவர்கள் கண்ணீர் விட்டுக் கலங்கி விடுகின்றனர்.

துருவன் நாடகத்தில் பார்வதியின் மகன் நடிக்கிறான். அந்த நாடகத்துக்குத் தலைமை தாங்கிய அவள் கணவன் தன் மகனென்று அறிந்து கொள்ளாமல், பாராட்டிப் பரிசு அளிக்கிறான். இதைக் கண்டு பார்வதி உணர்ச்சிப் பெருக்கில் கண்ணீர் வடித்துக் கரைந்துவிடுகிறாள். பத்மினி இந்த இடத்தில் மௌனமாகத் துயரம் தாங்காமல் விம்முவது அந்தச் சம்பவத்தை நேரில் பார்ப்பதுபோல் ஆகிவிடுகிறது.

* * *

பார்வதியின் கணவன் சங்கராக வரும் ஏ. நாகேசுவரராவின் நடிப்பு திருப்திகரமாக இல்லை. பார்வதியை வெளியேற்றி விட்டு ரயிலேறிச் சென்ற சங்கருக்கு, எதிர்பாராத விதமாகப் பத்மாவின் அன்பு கிடைக்கிறது. ரயிலில் பத்மாவைக் கொல்ல வந்த திருடனிடமிருந்து அவளைக் காப்பாற்றுகிறான் சங்கர். இந்தக் கட்டங்களெல்லாம் வெறும் செயற்கையாகத் தோன்றுகின்றன.

பத்மாவாக ராகினி தோன்றுகிறார். பார்வதியின் மகன் ஜுரத்தினால் நினைவிழந்து கிடந்த போது டாக்டர் வீட்டுக்குப் போன் பண்ணுவதையும், பார்வதியையும் சங்கரையும் ஒன்று சேர்த்து வைப்பதையும் தவிர அவருக்குப் படத்தில் அதிக வேலையில்லை.

பத்மாவின் தந்தையாக கே. சாரங்கபாணி வந்து ஹாஸ்யமாகப் பேசிப் பார்க்கிறார். ஆனால் அது, கொஞ்சம் பழைய பாணியில் சங்ககாலத்துக்குச் சென்றுவிடுகின்றபடியினால் அவ்வளவாக எடுபடவில்லை.

முதலில் இயற்கையாகத் தோன்றிய கதைப் போக்கு வர வர, செயற்கையாக மாறி விடுவதனால், படம் பார்க்கிறோம் என்ற நினைப்பு ஏற்பட்டு அலுத்துப் போகிறது.

பார்வதியின் அண்ணன் சேகரும் அவன் மனைவியும் நல்லதங்காள் கதையை நினைவூட்டும் அண்ணன், அண்ணியாக இருந்து பார்வதியின் துன்பங்களுக்குத் துணைபுரிகின்றனர். டி. ஆர். ராமச்சந்திரன் சேகராக நன்றாய் நடிக்கிறார்.

வி. ஆர். ராஜகோபால் எம். என். நம்பியாரின் தோழனாக வந்து ஈ. வி. சரோஜாவின் நடனத்தை அரங்கேற்றி அப்படியே தம்முடைய திறமையையும் அரங்கேற்றுகிறார். அவர் வரும் கட்டங்கள் பார்க்க மிகவும் உற்சாகமாயிருக்கின்றன.

அப்பா துரைசாமி, பார்வதியின் அப்பாவாக வந்து வழக்கம்போல் இயற்கை மரணம் எய்தாமல், வில்லன் கையினால் காவிரி வெள்ளத்தில் தள்ளப்பட்டு மடிகிறார்.

வில்லன் பாகம் நம்பியார் ஏற்றிருக்கிறார் என்றால் அந்தப் படத்தை யாரும் நம்பிப் பார்க்கலாம். இந்தப் படத்திலும் நம்பியார் தம்மை நம்பினவர்களைக் கைவிட்டுவிடவில்லை. வழக்கமான மிடுக்கையும்குறைத்துவிடவில்லை.

ஈ. வி. சரோஜாவின் கவர்ச்சிகரமான நடனங்கள் நிறைய இடம் பெற்றிருக்கின்றன.



ஆனால் அந்தப் பாத்திரம் திரைக் கதையுடன் பொருந்தாமல் தனித்து நின்று படத்தின் பல நூறு அடிகளை விழுங்கி விடுகிறது!

குழந்தைகள் நடிக்கும் துருவன் இசை நாடகம் சுருக்கமாகவும், உருக்கமாகவும் விறுவிறுப்பாகவும் இருக்கிறது.

மருதகாசியின் '' மணமலரே கனிரசமே '' என்ற பாட்டை பி. சுசீலா இனிமையாகப் பாடியிருக்கிறார், மற்றப் பாடல்களெல்லாம் தியேட்டரிலேயே எனக்கு மறந்து போய் விட்டன. கேட்டதாகவே நினைவில்லை.

அத்தியாயம் 17

# தெரியாது!

கண்ணபிரானுடைய டிரைவராக இருந்து வந்த சீனக்காரனுக்குத் தமிழ் நன்றாகத் தெரியும். சிறு வயதிலிருந்தே அவன் தமிழர்கள் வீட்டில்தான் வேலை பார்த்து வந்தான். அவனுடைய தாய் ஒரு சீனக்காரி. அதைத் தவிர அவனுக்கும் சீனாவுக்கும் எந்தவிதமான தொடர்பும் இருந்ததாகச் சொல்ல முடியாது. ஆனால் சப்பை மூக்கு, சின்னக் கண்கள், மஞ்சள் நிறம், தங்கப் பற்கள் ஆகியவையே அவனைச் சீனக்காரர்களோடு இணைத்தன. 'ஙங் ஞங் நங்' என்று பேச்செல்லாம் மூக்கால் பேசுவது போலத்தான் இருக்கும்.

அவனைப் பார்த்ததும் கண்ணபிரானுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. தயவுக்கு வண்டியை எடுத்துக் கொண்டு போகச் சொன்னால் எத்தனை நேரமாக்குவது? அதுவும் எப்படிப்பட்ட சமயத்தில்? சபாபதியா பிள்ளைக்கு உடம்பு சரியில்லை என்றால் கண்ணபிரானுடைய புது மாடல் 'ஸெடான்'தான் கேட்கிறதோ?

அவர்கள் மாளிகையான 'பீ-ஹைறவ் காஸில்' வில் வண்டிகளுக்கா பஞ்சம்? அவ்வளவையும் விட்டு விட்டு இதை வந்து கேட்பதற்கும் எடுத்துக்கொண்டு போவதற்கும் இந்தச் சப்பை மூக்குச் சீனனுக்கு என்ன துணிச்சல்?

ஏதோ ஒரு ஞாபகத்தில் தன்வண்டியை எடுத்துப்போக அனுமதி தந்துவிட்டான். இப்பொழுதுதான் அவனுக்குத் தன் தவறு தெரிந்தது; சீனக்காரனுடைய தவறும் தெரிந்தது. இந்த ஒரு விஷயத்தில் மட்டுமில்லை; பல சந்தர்ப்பங்களில் அவன் கவனிக்காததுபோல் கவனித்திருக்கிறான். அந்தச் சீனக்காரனுக்கும் சபாபதியா பிள்ளைக்கும் ஏதோ நெருக்கமான நட்பு உண்டென்று தோன்றியது. சபாபதியா பிள்ளையிடம் அவனுக்குப் பயமோ, மரியாதையோ சற்று அதிகமாகவே இருப்பதை அவன் கண்டிருக்கிறான். இதற்கு என்ன காரணம் என்று அவன் இதுவரையில் கவனித்துப் பார்த்ததில்லை. இன்றுதான் அதைக் கண்டறிய வேண்டும் என்ற வேகம் உண்டாயிற்று.

"சபாபதிக்கு வண்டி வேண்டுமானால் அதற்கு இந்த வண்டியைத்தான் வந்து கேட்பதோ? என்னைக் காக்க வைத்து விட்டு நீதான் போக வேண்டுமோ?" என்று எரிந்துவிழுந்தான் கண்ணபிரான்.

"நீங்களே போகச் சொன்னீங்களே!"

"நான் போகச் சொன்னேன்! முட்டாள்! நான் வேறு என்னடா சொல்ல முடியும்? உனக்கு எங்கே போயிற்று, அறிவு?" என்று எரிந்து விழுந்தான்.

சீனக்காரன் மந்திரக் குரங்கு விழிப்பதைப் போல் சின்னக் கண்களை இமைத்துப் பார்த்தான். சீனமொழி தெரிந்திருந்தால் ஒழிய, அந்தப் பார்வைக்கு என்ன பொருள் என்று புரிந்து கொள்வது கடினம். இப்போது இருக்கிற வேலையில் இந்த ஆராய்ச்சியில் இறங்கக் கண்ணபிரான் தயாராக இல்லை. அந்த நாகலிங்கம் தன் பெரியப்பாவின் அறையைவிட்டு வெளியில் வருவதற்குள் அந்த இடத்தை விட்டுப் போய்விட வேண்டுமே என்று அவசரப்பட்டான். என்னவோ அவனுக்குப் பெரிய படபடப்பாக இருந்தது. அவர் வெளியில் வந்து இடிவிழுந்ததுபோல் எதையாவது சொல்லி வைத்தால் என்ன சொல்வது? சிறு அதிர்ச்சியைக் கூட அவனால் அப்போது தாங்க முடியாது போலிருந்தது.

சுசிலா கிட்டத்தட்ட ஒரு மணி நேரமாக அவனை எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். அவள் எத்தனை



பொறுமை யில்லாத வள் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். பொறுமையுள்ளவளாக இருந்தால் சென்னையை விட்டு இவ்வளவு தூரம் தனியாக வந்திருப்பாளா? அவளுக்குப் பொறுமையுமில்லை; அது தனிமையு மில்லை. அவன் சிங்கப்பூரில் இருக்கும் போது அவள் சென்னையில் இருப்பதுதான் அவளுக்குத் தனிமை. அந்தத் தனிமையைத் தாங்கத்தான் அவளுக்குப் பொறுமையில்லை. இது கண்ணபிரானுக்கே நன்றாகத் தெரிந்தது. அவளுடைய துணிச்சலுக்கு வேறு எது காரணமாக இருக்க முடியும்?



ஒருகால் அவளுக்கு அவனிடம் சந்தேகம் ஏதாவது ஏற்படத் தொடங்கியிருக்குமோ? இருக்கலாம்; ஆனால் அப்படிச் சந்தேகம் உண்டாகும்படி என்ன நடந்திருக்கும்? எண்ணிப் பார்க்க முடிந்தவரையில் அப்படி ஒரு பிழையும் நேர்ந்திருக்கக் கூடும் என்று அவனுக்குப் படவில்லை. அவனுக்கு உள்ளூறத் திகிலாகத்தான் இருந்தது. சுசிலாவின் சந்தேகம் மிஞ்சினால் எத்தனை பயங்கரங்கள் விளையும் என்று அவனால் கற்பனையே செய்து பார்க்க முடியவில்லை. அசாதாரணமான துணிவைத் தரக் கூடியது அவளுடைய நேர்மை. ஒளி பாயும் வேகம் நிறைந்தது. தூய அன்பு ஒன்றைத் தவிர அளவற்ற செல்வத்துக்கோ, அதிகாரத்துக்கோ கட்டுப் பட்டதல்ல.

கண்ணபிரானுக்கு அந்த இரவுதான் கண முன வந்து நின்றது. சுசிலாவுக்கு வேகமும் துணிவும் தந்த அந்த இரவு! எத்தனை இன்பமான இரவு அது! எத்தனை துன்பம் தருவது அது!

அனற் பிழம்புதான் அந்தச் சௌந்தரியம்! ஆனால் நிலவின் தண்மையும் இனிமையும் நிறைந்தது! அதனால் தான் அந்த அனல் அவளைத் தீண்டிய அந்த விரல்களையும், உடலையும் சுட்டுப் பொசுக்கவில்லை. திஞ்சுவைக்

கனியைப் போல் தின்டிய இன்பம் இனித்தது. போதவிழ்ந்த புது மலர் தான் அந்த மலர்ச்சி! ஆனால் புதுமையும் பொலிவும் நிறைந்தது! வண்ணமும் மணமும் அவனை மயங்கித் தடுமாறச் செய்துவிட்டன. பொக்கிஷச் சாலைதான் அந்தப் பெண்மை. ஆனால் இளமைக்கும் செழுமைக்கும் இடையே எட்டித்தான் பார்த்துக் கொண்டிருந்தது அவளுடைய மென்மை. அதனால்தான் அவன் பிடியில் வசப்பட்டுக் கிடந்தது.

அந்தப் பூவையின் உறவு இன்று புதிராகத்தான் விளங்கியது. அவன் இவ்வளவு தூரத்துக்குப் போகும் என்று முதலில் எதிர்பார்க்கவில்லை. மேலாகப் பார்க்கும்போது மிக மிக எளிதாகத் தோன்றிய ஒன்று, இத்தனை வலுவுள்ள ஒரு பிணைப்பாக இருக்கும் என்று அவன் எண்ணவேயில்லை. நினைத்த நிமிஷத்தில் துண்டித் தெறியும் அற்பமான விஷயமாகத்தான் அவன் எண்ணியிருந்துவிட்டான். ஆனால் இது எவ்வளவு தூரம் அவனுடைய வாழ்வில் வேரோடிப் போயிருக்கிறது என்பது இப்போதுதான் அவனுக்குப் புரிந்தது.

சிங்கப்பூரில் இல்லாத சீமைச் சுந்தரிகளா? சீனத்துச் சிங்காரிகளா? கண்ணபிரான் அப்படித்தான் முதலில் இந்த விஷயத்தை அலட்சியமாக எண்ணிவிட்டான். ஆனால் இன்று? ஷீலா என்று செல்லப் பெயரிட்டு அழைத்த சுசீலா விடை கூறத் தெரியாத புதிராக இருந்தாள். அவனைப்போல் அவளுக்கு இது வெறும் விளையாட்டு - வேடிக்கையாக இல்லை. அர்த்தமும் அழுத்தமும் கொண்ட தீவிரமான விஷயமாகப் பட்டது. அந்தத் தீவிரத்தில் விளையாட்டும் உண்டு; வேடிக்கையும் உண்டு. ஆனால் அத்தனையும் புனிதமானவை; அழிக்கவோ மாற்றவோ முடியாதவை...



கண்ணபிரானுக்கு நினைத்தாலே கலக்கமாக இருந்தது. ஆயினும் விரும்பினால் எல்லாவற்றையும் களைத்துவிடக் கூடிய ஆற்றல் தனக்கு உண்டு என்று அவன் எண்ணினான். சுசிலா புத்திசாலியாக இருந்தால் அந்த ஆற்றலைக் காட்டுவதற்கான அவசியம் நேராது என்ற அசட்டுத் துணிச்சலும் நம்பிக்கையும் இடையிலே இருந்தன.

அதைப்பற்றி யெல்லாம் யோசித்துக் கொண்டிருக்க இது நேரமும் இல்லை; அவசியமும் இல்லை. ஆனால் இப்பொழுது என்ன செய்வது? அவளைப் போய்ப் பார்ப்பதா, வேறு எங்கேயாவது வேலை இருப்பதுபோல் போவதா? இதுதான் இப்போது கேள்வி. இரண்டுமே அவனுக்குப் பிடிக்கவில்லை. எங்கே போனாலும் மனத்தில் அமைதி உண்டாகாது என்று அவனுக்குத் தோன்றியது. ஆகவே ஒன்றும் புரியாமல் அவன் வண்டியில் ஏறிக் கொண்டான்.

பின்னாலேயே வந்த சிணுக்காரன் வண்டியின் கதவைச் சாத்திவிட்டு முன் பக்கமாகவந்து, "பிள்ளைக்கு நல்ல சாய்ச்சல்!" என்று கூறினான்.

கண்ணபிரானுக்கு வெறுப்பும் ஆத்திரமுமாக வந்தன.

"எல்லாம் தெரியும். எடு வண்டியை!" என்று உத்தரவிட்டான்.

சபாபதியாப் பிள்ளையைப்பற்றி இவன் என்ன சிபாரிசுக்கு வருவது? இவனுக்கும் அவனுக்கும் என்ன? பிறகுதான் அவன் என்ன சொல்ல வருகிறான் என்று கண்ணபிரானுக்குப் புரிந்தது. சபாபதியா பிள்ளையைப் போய்ப் பார்க்க வேண்டுமோ! அழகாகத்தான் இருக்கிறது!

"சரி; நீ இங்கேயே இரு; நானே வண்டியை எடுத்துக் கொண்டு போகிறேன்!"

வண்டி ஒரு குறிப்பான இடம் என்று கொள்ளாமல், பற்பல சாலைகளையும் கடந்து போய்க்கொண்டே யிருந்தது. கடைசியில் அவனுக்கே அலுத்துப் போயிற்று. என்னதான் சுற்றிக் கொண்டே யிருந்தாலும் கடைசியில் சுசிலாவைப் போய்ப் பார்க்காமல் இருப்பது என்னவோ முடியாது என்று அவனுக்குப் பட்டது. நேரம் செல்லச் செல்ல, வினான பொய்களெல்லாம் சொல்லும் படி நேரப் போவதைத் தவிர, வேறு எவ்வித நன்மையும் உண்டாகப் போவதில்லை என்று நாகலிங்கத்தின் ஜாகையை நோக்கிச் செலுத்தினான் வண்டியை.

நீல வானிலே முழு நிலவு தெரிவது போல், மேல் தளத்திலே சுசிலாவின் அழகிய முகம் தெரிந்தது. அவன் நினைவில் இருந்த முகத்தைவிட எழில் பூத்து விளங்கினாள் சுசிலா. வண்டியை ஓரமாக விட்டு விட்டு, நெஞ்சப் படபடப்பு நீங்காமல் அவன் அவள் இருந்த இடத்துக்குப் படியேறி வந்தான்.

சுசிலா அசையாத பதுமைபோல் சிந்தும் புன்சிரிப்புடன் உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றாள். அவளுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. இதய ஓட்டமே ஸ்தம்பித்துப் போனமாதிரி, திகைத்து நின்றாள். ஒளிந்திருந்த நாணமெல்லாம் ஓடி வந்து அவளைப் பிணித்துக் கொண்டுவிட்டது. ஆசை மீறிய வெட்கமும் அவனைக் கண்ட இன்பமும் அவளைத் தலை குனிந்து நிற்கச் செய்தன. அவர்கள் இருவரையும் தவிர, அந்த இடத்திலே வேறு யாரும் இல்லைதான்; ஆயினும் அந்தக் கூச்சத்தையும் அச்சத்தையும் போக்க யாராவது துணை செய்ய வரமாட்டார்களா என்று தோன்றியது அவளுக்கு. கடற்காற்று அவளுக்குப் புழுங்கியது. முகமெல்லாம் குபீரென்று சிவந்து வேர்த்தது. மூச்சுத் திணறியது. கண்கள் பனித்தன; இமைகள் துடித்தன. பிரிவுத் துன்பமோ, இன்பமோ அவள் தலையைச் சுற்ற வைத்தது. கட்டைப் பிடிச் சுவரைக் கையால் பிடித்துக் கொண்டு கால் தடுமாற நின்றாள்.

"ஷீலா!"

அவளுக்குப் பேச்சு எழும்பினால்தானே? தன் உள்ளத்தைக் கவர்ந்து, உடலையே ஆட்கொண்ட கண்ணபிரானுடைய கண்களை எட்டிப் பிடிக்க முயன்றன அவளது கருவிழிகள்!

அவனுடைய சொர்க்கம் முன்னால் நடந்து வந்து அவளை நெருங்கியது. அந்த நெருக்கத்தை உணரும்போதே அவள் நெஞ்சு பொங்கும் அலையென விம்மி இறங்கியது....

"ஷீலா!"

விலையுயர்ந்த உடுப்புக்களையா அவள் கவனித்தாள்? விலைமதிப்பற்ற பொருளோடு அவள் அவனது அகன்ற மார்பிலே சாய்ந்து விட்டாள். பேச்சு இல்லை; மூச்சு இல்லை. நினைவு இல்லை; உணர்வு இல்லை. பார்வை இல்லை; ஒளியும் இல்லை!

சற்று முன்பு புதிராகவும் வேறாகவும் தோன்றிய சுசிலா அன்பே வடிவெடுத்த இன்னமுதாகவும் இளங்கொடியாகவும் அவனுடைய அரவணைப்பிலே துவண்டு நின்றாள். நுதல் அரும்ப, நொடி தளர, கண்கள் கசிய, பூவிதழ் துடிக்க, பூமணக்க அவன் உடலோடு ஒட்டிக் கொண்டு நின்றாள். இயற்றிய தவமெல்லாம் பலித்து விட்டது.

"ஷீலா!" மூச்சுத்தான் அழைத்தது.

"ம்....ம்...." மூச்சுத்தான் முனகியது.

"கோபமா, ஷீலா? இதோ, கண்ணைத் திறந்து பாரேன்? என் மேலே....என்ன... உனக்குக் கோபம்தானே?"

# டன்லபில்லோ மீது

## சிரம பரிகாரம் செய்து கொள்ளும்படி உங்களுக்கு பிரியம் ஏற்படும்.

மெத்தைகள் தலையணைகள் திண்டுகள்



-103-TM-

நாள் முழுவதும்

# புத்துணர்ச்சியுடன்

இருக்க

வசீகரமான மணம், மிகவும் மென்மையான டால்க், சருமங்களில் கறைகளையும், வியர்வை நாற்றத்தையும் உண்டாக்கும் கிருமிகளை நாசம் செய்யும், மற்ற டாய்லெட பவுடர்களிலில்லாத உலகப் பிரசித்தி பெற்ற ஜீ-11★ உள்ளது . . . இருந்த போதிலும் கோத்ரெஜ் டாய்லெட் பவுடர் விலை அதிகமில்லை.

வேர்க்கூரு போன்ற சரும உபாதைகளுக்கு துரிதமாக நிரந்தர நிவாரணமளிக்கிறது — குழந்தைகளுக்கு ஓர் வரப்பிரசாதம்

**கோத்ரெஜ்**

டாய்லெட் பவுடர்

துர்நாற்றத்தைப் போக்க வல்லது . பாதுகாப்பு அளிப்பது . நறுமணமுளளது . மென்மையானது.

பூரண பாதுகாப்புக்கு கிருநாசினியால் ஸ்நானம் செய்த பிறகு உபயோகியுங்கள்.

( ★ பேடன்ட ஹெக்ஸா-க்லோரோபீன் )



கோத்ரெஜ் மிகச் சிறந்த சோப்புகளை தயாரிக்கிறார்கள்

## ஆனந்தம் தரும் சாக்கலேட் நாவல்டீகள்



பலவிதமான தித்திப்புத் தின்பண்டங்களில் ஒன்று

தயாரிப்பாளர்கள்

## மார்ட்டன்ஸ்

ஸி. & ஈ. மார்ட்டன் (இந்தியா) லிட்.



சகிக்க முடியாத உபாதை: தூக்கமும் கிடையாது: சுகமான நித்திரைக்கும் உபாதை நிவர்த்திக்கும்

# எப்ரிலைம்

# EPHRILIME




நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

## யூனியன் டிரக் கம்பேனி லிட்

மதராஸ் டிப்போ :

2. ஜோன்ஸ் லேன் மதராஸ் - 1

"சற்று முன்பு வரையில்!" மூச்சு இரைத்தது.

"இப்பொழுது?"

"அதுதான் தெரியவில்லை!" பேச்சுத் திணறியது.

"தலையைத் தூக்கேன்! இதென்ன, கண்களை மூடிக்கொண்டு!"

"நான் விழுந்து விடுவேன்.....என் நெஞ்சு வெடித்துவிடும்! மூச்சு நின்று விடும். என்னமோ செய்கிறது என்னை!"

அவளைத் தாங்கியவாறு அவன் சோபாவில் போய் உட்கார்ந்து கொண்டான். அந்த ஒரு கணத்தில் அவன் தன் சிறுமைகளை யெல்லாம் மறந்து உயரத்தில் பறந்து செல்வதுபோல் உணர்ந்தான்.

"பேச மாட்டாயா?"

அவள் பேச்சுப் பிடிக்காமல் அவன் வாயைப் பொத்தினாள். மௌனம் இழைக்கும் அந்த இன்பத்தைப் பேசிக் குலைத்துவிட அவள் விரும்பவில்லை.

"வேண்டாமே, வேண்டாமே!" என்றாள் அவள்.

அவன் எதுவும் விளங்காமல் விழித்தான். மெல்ல மெல்லத்தான் அவள் பேசுகிற நிலையை அடைவாள் என்று அப்போது அவனுக்குப் புரியவில்லை. அப்புறம் புரிந்துவிட்டது; வெகுநேரம் கழித்து.

"மாமாவிடம் சொல்லி விட்டாயா? அவருக்குத் தெரியுமா?"

"சொல்லவில்லை."

"சொல்லாமலே தெரிந்து கொண்டிருப்பாரோ?"

"தெரியாது."

"யாருக்கு?"

"எனக்கு!"

கண்ணபிரான் கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டான். பிறகு நேரமாகிவிட்ட அடையாளமாகக் கையை உதறிக் கொண்டு எழுந்தான். "ஷீலா! இங்கே சென்னையைப்போல் இல்லை. நான் போகாவிட்டால் ஒன்றும் நடக்காது!" என்றான்.

அவளுக்கு வருத்தமாகத்தான் இருந்தது. ஆனால் பெருமையாகவும் இருந்தது.

"என்னை எப்போது அழைத்துப் போவீர்கள்.?"

"எங்கே?"

"அங்கேதான்! உங்களோடுதான்! 'எங்கே?' அடேயப்பா! அவ்வளவு பயமா அந்தக் கேள்விக்கு?"

"பொறு ஷீலா, பொறு! எனக்குச் சமயம் தெரியும். எல்லாம் தெரியும்."

சுசீலாவின் முகம் சுண்டியது. அவனுடைய பதில் தெளிவாக இல்லை. பொறுப்பது என்றால் மணிக்கணக்கிலா, நாள் கணக்கிலா, மாத வருஷங்கள் கணக்கிலா?

"அதென்னமோ எனக்குத் தெரியாது. இங்கே ஒருவேளை வரத் தவறினால் நான் அங்கே வந்து விடுவேன்!"

"சீச்சீ! ஒருநாளும் நீ வரமாட்டாய்! எனக்குத் தெரியும். அங்கெல்லாம் வரக் கூடாது என்பது உனக்குத் தெரியாதா?" என்று கூறிவிட்டு, கண்ணபிரான் சிரிக்க முயன்றான்.

வெகு நாட்களுக்குப் பிறகு இன்று தானே சந்திக்கிறார்கள்? அதனால் அவளும் அத்துடன் அவனை விட்டுவிட்டாள்.

## அத்தியாயம் 18

# அதிர்ஷ்டக்காரன்!

**சு**சீலா அந்த மயக்கத்திலிருந்து இன்னும் தெளியவில்லை. கண்ணபிரானைக் கண்டது முதல் காற்றும் ஒளியும் கடலும் நிலமும் இன்ப மயமாக மாறிவிட்டது போல் அவளுக்குப் பிரமை உண்டாயிற்று. அவன் வந்து சென்றதையும் பேசியதையும் திருப்பித் திருப்பி எண்ணி அசை போட்டுக் கொண்டிருந்தது நெஞ்சம்.

கண்ணபிரான் முன்பு பார்த்தபோது இருந்ததைவிட அவள் கண்களுக்கு இன்னும் அழகாகத்தான் தோன்றினான். இருந்தாலும் உடல் சிறிது வெளுத்து மெலிந்திருப்பதாக அவளுக்குப் பட்டது. பாவம், எத்தனை வேலையோ? எல்லாப் பொறுப்புக்களையும் அவனே சுமக்க வேண்டியிருந்தது. அது எவ்வளவு தொந்தரவு என்பது அவளுக்குத் தெரியும். கண்ணபிரானும் சொல்லியிருக்கிறான்; அவளுடைய மாமாவும் சொல்லி யிருக்கிறார். அவள் கற்பனை செய்ததைவிட அவனுக்குப் பன்மடங்கு வேலை அதிகமாக இருந்தது.

சுசீலாவுக்குப் பரிதாபமாகவும் மற்றொரு புறம் பெருமையாகவும் இருந்தது. கண்ணபிரான் கடிதம் எழுதாமல் இருந்ததைக் கூட அவள் மன்னித்துவிடத் துடியாக இருந்தாள். அந்தச் சுமையைப் பகிர்ந்து கொள்ளவும் அவள் தயாராக இருந்தாள். அவன் முகத்தைக் கண்டதுமே அவளுடைய உள்ளத்துக் கவலைகளும் அவநம்பிக்கைகளும் பறந்து விட்டன. அவனிடம் குறை எதுவும் இருப்பதாகவே அவளுக்குப் படவில்லை.

அன்பு ஒன்றுதான் தெரிந்தது. அந்த அன்பிலேயே அவள் உள்ளம் திளைத்தது.

"சுசீலா!"

அவளுடைய மாமா நாகலிங்கத்தின் குரல் கேட்டுத்தான் அவள் அந்த மயக்கத்திலிருந்து புரண்டு எழுந்தாள். அவருடைய குரலிலேயே அன்பும் மகிழ்ச்சியும் பொங்கி நின்றன. எதையோ அவளிடம் சொல்வதற்கு ஆவலுடன் வந்திருப்பவர் போலத் தோன்றியது. அப்படி என்ன, ஒரு பெரிய விஷயத்தைச் சொல்லி அவளைத் திக்குமுக்காடச் செய்துவிடப்போகிறார்? கண்ணபிரானே வந்து விட்டுப் போயிருக்கும்போது வேறு எது அவளுக்கு அதைவிட மகிழ்ச்சியைத் தந்துவிடப் போகிறது?

நாகலிங்கத்துக்கு அவளும் கண்ணபிரானும் எத்தனை அன்போடு பழகி வந்தார்கள் என்பது தெரியும். ஆனால் அவர்களுடைய அன்பும் நட்பும் முதிர்ந்து ஒரு புதிய கட்டத்துக்கு வந்துவிட்டது மட்டும் தெரியாது. அது தெரியாமலேயா போய்விடப் போகிறது? அதை அவளாக வாய்விட்டு எப்படிச் சொல்வது? எப்போது சொல்வது? அந்தச் சமயத்துக்குக் காத்திருந்தாள் சுசீலா.

நாகலிங்கம் உடைகளை மாற்றிக் கொள்ளச் சென்றிருந்தார். அவள் கண்களிலே இன்பம் கொழிக்க அவர் வந்து என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்க உட்கார்ந்திருந்தாள்.

"கண்ணபிரானைப் பார்க்க வேண்டாமா, சுசீலா?"

அப்போது சுசீலாவின் கண்கள் சுழித்து, கன்னங்கள் இரண்டும் குப்பெனச் சிவந்ததை அவர் எதிரே இருந்தால் கவனித்திருப்பார். அவர் வெளியில் வரட்டும் என்று பேசாமல் அமர்ந்து இருந்தாள் சுசீலா.

"நீ அவனுக்குப் போன்செய்தாயோ?"

"ம்...செய்தேன்!"

"இருந்தானா? ஏதாவது சொன்னானா?"

அவன் சொன்னதையெல்லாம் மாமாவிடம் எப்படிச் சொல்ல முடியும்? கோபித்துக் கொள்பவளைப்போல் அவள், "இப்பொழுது சிகரெட் பிடிக்கும் பழக்கம் ஏற்பட்டிருக்கிறது போலிருக்கிறது, மாமா!" என்று முறையிட்டாள்.

நாகலிங்கம் இதைக் கேட்டுச் சிரித்தார். "இது எப்படித் தெரிந்தது உனக்கு?" என்று சிரிப்புக்கிடையே கேட்டார்.

"இருங்கள்; முதலில் உங்களுக்கு டிபன் கொண்டு வருகிறேன்! சோமுவுக்குச் சாயங்காலம் ஆறுமணி வரையில் லீவு கொடுத்திருக்கிறேன்!" என்று எழுந்து சென்றாள் சுசீலா. அப்போது தான் அவளுக்குத் தன்னுடைய முட்டாள்தனம் புரிந்தது. கண்ணபிரான் வந்திருந்தபோது அவளுக்கு வேறு நினைப்பு வந்திருந்தால்தானே? அவனுக்கு ஒரு கப் காப்பியோ, தேநீரோ கூடக் கொடுக்க வேண்டும் என்று அவளுக்கு எட்டவேயில்லை! அதை நினைத்த போது அவளுக்கு வருத்தமாக இருந்தது.

"கண்ணபிரான் எத்தனை பெரிய அதிருஷ்டக்காரன், தெரியுமோ!" என்று பேச்சைத் தொடங்கினார் நாகலிங்கம்.

"இது என்ன புதிய விஷயம்? இது யாருக்குத்தான் தெரியாது?" என்று எண்ணிக் கொண்டாள் அவள்.

"இன்றைக்கு அந்தப் பெரியவரிடமிருந்து போன் வந்தது. போயிருந்தேன்!" என்றார் நாகலிங்கம் மீண்டும்.

சுசீலா அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது.

"உன்னைப் பற்றிக்கூடத் தெரியும் போலிருக்கிறது. விசாரித்தார்...."

"விசாரித்தாரா? எப்படி.....என்னவென்று....?" சுசீலா நிற்க முடியாமல்

அவருக்கு எதிரே உட்கார்ந்து கொண்டாள்.

"அது எப்படித் தெரியுமோ? முதலில் அதைத்தான் கேட்டார். நீ வந்திருப்பதைக் கூடச் சொன்னேன்!"

சுசீலா நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டாள். கண்ணபிரான் தன்னைப் பற்றி அவரிடம் சொல்லியிருப்பான் என்று அவள் எண்ணினாள். வேறு யார் சொல்லி, அவர் தன்னைப் பற்றி விசாரிக்கப்போகிறார் என்று அவளுக்குப்பட்டது. கண்ணபிரான்தான் சொல்லி யிருக்க வேண்டும். நன்றிப் பெருக்கினால் அவள் நெஞ்சு விம்மியது. அதே சமயத்தில் இனம் புரியாத பயம் ஒன்றும் அவள் மனத்தைக் கவிந்து கொண்டது. இருந்ததைப் பார்த்தால் அதைரியப்பட ஒன்றும் இருக்காது என்றே தோன்றியது. கண்ணபிரான் அதிருஷ்டக்காரனா, அவள் அதிருஷ்டக்காரியா? மாமா என்ன சொல்ல வருகிறார்?

"பெரியவர் எல்லாவற்றையும் அவன் பெயருக்கே மாற்றிவிடப் போகிறார். பாங்குக் கணக்கை இன்று மாற்றி விடும்படி எழுதிக் கொடுத்து விட்டார்! அதற்குத்தான் என்னை வரவழைத்திருந்தார்!" என்றார் நாகலிங்கம்.

பூமி ஆயிரம் மைல் வேகத்துக்கு அதிகமாகவே சுற்றிக்கொண் டிருப்பதாகச் சுசீலா படித்திருந்தாள். இப்போது தன் தலை அதைவிட வேகமாகச் சுற்றுவதுபோல் உணர்ந்தாள் அவள். அவளுக்குக் கால் தரையில் நிற்பதாகவே படவில்லை. எல்லாம் கனவில் நடப்பது போல் தோன்றியது. ஆனால் இங்கு வந்திருந்தபோது கண்ணபிரான் இதைப் பற்றி யெல்லாம் ஏன் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை? எல்லாம் தன்னால் தெரியட்டும் என்றா? 'அடேயப்பா! அவர் பெரிய ஆள்தான்! சும்மாவா சொல்கிறார்கள், இந்த ஆண்பிள்ளைகளையே நம்பக்கூடாது என்று?' என்று நினைத்துக் கொண்டாள் அவள்.

கடைசியாகத்தான் சுசீலா துணிந்து அவன் தன்னைப் பார்க்க வந்திருந்ததைக் கூறினாள். அதைச் சொல்லும்போது வெட்கம் அவளைப் பிடுங்கித் தின்றது.

"இங்கேதான் வந்திருந்தானா அவன்? பெரியவரிடம் பேசிவிட்டு வருவதற்குள் ஆளைக் காணுமே என்று பார்த்தேன்! இதற்குத்தான் இவ்வளவு அவசரப் பட்டானா? இதற்குத்தான் அப்படி ஒரு பொய்யும் சொன்னானா? நான் அங்கே போயிருக்கிற சமயம் பார்த்து இங்கே வந்திருக்கிறான் போலிருக்கிறது!" என்றார் நாகலிங்கம்.

அவருடைய நகிடிப் பேச்சு அவளுக்கு இன்னும் அதிகமான வெட்கத்தையும் கூச்சத்தையும் கொடுத்தது. கண்ணபிரான் நடந்துகொண்ட விதத்தில் ஒரு மாற்று திருட்டுத்தனம் கலந்திருந்ததாகத்தான் அவளுக்குப்பட்டது. ஆனால் அது என்ன இனிமையான திருட்டு! அதுவும் தன்னை முன்னிட்டு!

இருந்தாலும் அந்தத் திருட்டுத்தனத்தில் குற்றம் கண்டுபிடிப்பதற்கு இடமில்லை என்று சொல்வதுபோல், "அவர் இங்கே வந்தாரே தவிர, இதைப்பற்றியெல்லாம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை, மாமா!" என்று பரிந்து பேசினாள்.

"எப்படிச் சொல்வான்? இது அவனுக்கே தெரிந்திருந்தால்தானே சொல்வதற்கு? பெரியவர் முடிவு எனக்குத்தான் முதலில் தெரியும். என்னைக்கூட அவசரப்பட்டு இதை அவனிடம் சொல்ல வேண்டாம் என்றுதான் எச்சரித்திருக்கிறார்! ஆனாலும் இதை எப்படிச் சொல்லாமல் இருக்க முடியும்? அவனிடம் கையெழுத்தெல்லாம் வாங்க வேண்டியிருக்கிறதே! கையெழுத்துப் போடும்போது தெரியாமலா போய் விடும்? ஆனால் பெரியவரிடம் பேசிவிட்டு வெளியில் வந்து பார்க்கிறேன்; அவனைக் காணவில்லை. அவனுடைய டிரைவர்தான் நின்று கொண்டிருந்தான். யாருக்கோ உடம்பு சரியாக இல்லை என்று பார்க்கப் போவதாகச் சொல்லிவிட்டு, அவன் உன்னைப் பார்க்க இங்கே வந்திருக்கிறான் போலிருக்கிறது!" என்றார் நாகலிங்கம்.

சுசீலாவுக்கு இது பெரிய ஆறுதலாக இருந்தது. பெரியவரின் முடிவு தன் சம்பந்தப்பட்ட வரையில் எப்படி யிருக்கும் என்று தெரிந்து விட்டதாகவே அவள் கருதினாள். அதை எண்ணிப் பார்க்கும்போதே அவள் இதயம் நம்பிக்கையாலும் நன்றியாலும் நிறைந்து போயிற்று. மாமாவிடம் உண்மையை உடைத்துச் சொல்லிவிட இது ஏற்ற சமயமாகவே அவளுக்குத் தோன்றியது. இனிமேல் எத்தனை நாட்களுக்குத்தான் இதை ஒளித்து வைத்துக் கொண்டு இருக்க முடியும்?

"மாமா!" என்று அழைத்தாள் அவள்.

"என்ன?"

சுசீலாவுக்கு அதை எப்படித் தொடங்குவது என்று தெரியவில்லை. நாசூக்காக, நயமாக அதைச் சொல்லாமல் சுட்டுவது எப்படி என்று தயங்கினாள்.

ஆனால் அதற்குள் 'புஸ்ஸர்' ஒலித்தது.

"மன்னிக்க வேண்டும். வரலாம் அல்லவா?" என்று கேட்டுக் கொண்டே எதிரில் தோன்றினான் கண்ணபிரான்.

சுசீலா அங்கே நிற்கவேயில்லை! நாட்டுப்புறத்துப் பெண்ணைப்போல் அவள் ஓடி மறைந்து விட்டாள்! **(தொடரும்)**

# காணிக்கை

## எஸ். ரங்கநாயகி

"அம்மா!"

இடும்பி திரும்பி நோக்கினாள். அவளது அருமை மகன் கடோத்கசன் அருகில் நின்றிருந்தான். நல்ல கட்டுக்கோப்பான உடல். இரும்பைப் போன்ற உடல். அசுர ஸ்திரீக்குப் பிறந்தவனாதலால் பிறந்ததுமே பேசும் சக்தியை அடைந்தவன். ஒரு புலிக்குட்டியை இழுத்து வந்திருந்தான்.

"அம்மா! அப்பா வரவேயில்லையேம்மா!" சிணுங்கினான் அவன்.

"வருவார், அப்பா!"

"அம்மா, அப்பாவுக்கும் அவர் சகோதரர்களுக்கும் இன்று விவாகம் என்று கூறினாயே! நாம் போகவில்லையே!"

இடும்பி மௌனம் சாதித்தாள். அவளுக்கும் மனத்தில் குறைதான். இடும்பாசுரனின் சகோதரி என்பதன் காரணமாக இந்த அலட்சியமோ! அவளும் வழிப்போக்கர்கள் மூலம் தான் இவ் விஷயத்தைக் கேட்டிருந்தாள். பாஞ்சால நாட்டு இளவரசி திரௌபதிக்குச் சுயம்வரம் நடந்ததாம்; அதில் வைத்த நிபந்தனையில் அர்ஜுனன் தேர்வு பெற்று விட்டானாம்; குந்தி தன்னையறியாமல் கூறிய ஒரு வார்த்தையால் பஞ்ச பாண்டவர்கள் ஐவருக்கும் திரௌபதியுடன் விவாகம் நடந்தேறப் போகிறதாம்...

பாஞ்சால நாட்டு இளவரசி பாஞ்சாலியைப் பற்றி இடும்பியும் கேள்வியுற்றிருக்கிறாள். அழகில் ரம்பையைத் தோற்கடிக்கக்கூடியவள்; குணத்திலோ பூமிதேவிக்குச் சமானம். அப் பெண் இரத்தினத்தைப் பார்க்க இடும்பி விரும்பியிருக்கிறாள். இப்பொழுது அவளுக்கு நெருங்கின உறவினளாகவே வந்து விட்டாள். ஆனால் அவளிடம் நெருங்க விடமாட்டார்களோ இப் பாண்டவ வம்சத்தினர்!

"அம்மா, அப்பா கல்யாணத்துக்கு நாம் போக வேண்டாமா?" தனயன் விடவில்லை.

"கடோத்கசா! செல்லலாம். நீ இப்பொழுது புலியைப் பிடித்து வந்து விட்டு அதோடு விளையாடாமல் இருக்கிறாயே! போ, விளையாடி விட்டு வா." மகனின் மனத்தை வேறு வழியில் திருப்ப முயன்றாள் தாய்.

"போம்மா! அந்தப் புலியைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை. நான் விளையாட மாட்டேன்!"

"ஏனடா அப்படிக் கூறிவிட்டாய்?"

"அந்தப் புலி என்னைப் பார்த்தால் பயந்து ஓடுகிறதும்மா. காலை மெதுவாகத் தொட்டால்கூட வலி பொறுக்காமல் கர்ஜிக்கிறது!"

தாய் மனத்தில் பெருமை கொண்டாள். தந்தையைப் போல் மகனும் சரீரத்தில் மட்டுமல்ல, பலத்திலும் நிகரற்று விளங்குகிறான். அவளுக்கு நினைவு இருக்கிறது. அவள் கணவன் பீமன் இடும்ப வனத்தில் இருந்த போது புலியோ, சிங்கமோ யாவும் அஞ்சிக் குகையை விட்டு வெளி வராதே. எவ்வளவோ பலசாலியான சகோதரன் இடும்பனே பீமன் கையில் இறந்து விட்டானே.

அருந்தவப் புதல்வனாகக் கடோத்கசன் பிறந்தான். மகனிடம் கூடவா அன்பு இல்லை தந்தைக்கு? மானிடர் எனக் கூறிக் கொள்ளும் அவர்கள் அசுரர்களுடைய மனத்தைக் கூடக் கொள்ள வில்லை. 'ஹூம்! பெரிய ராஜ கன்னிகை கிடைத்து விட்டாள்...'

இடும்பி யோசனையில் ஆழ்ந்திருந்தபோது கடோத்கசன் புலியைத் தன் வழிக்குக் கொண்டு வருவதில் முனைந்திருந்தான். அந் நேரத்தில்...

"கடோத்கசா!"

பீமபுத்திரன் திரும்பி நோக்கினான்.

"ஓ, சித்தப்பா!" ஆனந்தத்துடன் துள்ளிக் குதித்து ஓடினான் கடோத்கசன். மணக் கோலத்தில் அங்கு அர்ஜுனன் நின்று கொண்டிருந்தான். ஓடி வந்த கடோத்கசனைத் தூக்கி இறுக அணைத்து அவன் கன்னத்தில் முத்தமிட்டான்.

இதற்குள் இடும்பியும் அவனை நோக்கி விட்டாள். "வா, அர்ஜுனா! மணக் கோலத்தில் இங்கு எங்கு வந்தாய்?"

"அண்ணி! என் கோலமும் நான் வந்திருப்பதையும் பார்த்தாலே உங்களுக்குப் புரியவில்லையா?" என்று கூறிய அர்ஜுனன் அவள் பாதங்களில் பணிந்து எழுந்தான்.

"எல்லாம் கேள்விப்பட்டேன், அர்ஜுனா! புதுமனையாளுடன் நீங்கள் அனைவரும் இனிதே வாழ என் வாழ்த்துக்கள்!"

"அண்ணி! உங்கள் வாழ்த்துக்கள் இங்கிருந்து மணவறை வரையில் எட்டிவிடாது என்பது நினைவிருக்கட்டும். குழந்தை கடோத்கசனையும் அழைத்துக்கொண்டு நீங்கள் நேரில் வந்து மணமகளை ஆசீர்வதிக்க வேண்டுமென்பது என் விருப்பம்..." அர்ஜுனன் தாழ்மையுடன் தன் விருப்பத்தைத் தெரிவித்தான்.

இடும்பிக்கோ கணவன் வந்து அழைக்கவில்லை என்ற குறை. போகத் தயங்கினாள்.

"அண்ணி! நீங்கள் வராவிடில் நான் நகரப் போவதில்லை..." அர்ஜுனன் குழந்தைபோல் பிடிவாதம் பிடித்து இருந்த இடத்தில் உட்கார்ந்து விட்டான்.

இடும்பியின் மனம் நெகிழ்ந்து விட்டது. அர்ஜுனனுடன் புறப்படுவதைத் தவிர வேறு வழியில்லை. கடோத்கசனுக்கு அடங்கா ஆனந்தம். 'விவாகத்துக்குப் போனால் அப்பாவையும் பார்க்கலாம்; அப்பாவின் விவாகத்தையும்



கண்டு ஆனந்திக்கலாம். கல்யாணமென்றால் அப்பா மாலையெல்லாம் போட்டுக் கொள்வார். பார்க்க நன்றாக இருக்கும்.' ஏதேதோ தனக்குள் பேசிக்கொண்டே மிகுந்த உற்சாகத்துடன் பட்டாடை உடுத்திக் கடோத்கசன் கிளம்பி விட்டான்.

மண மண்டபத்தை அடைந்து விட்டனர் மூவரும். இவ்வளவு நேரமாக மாப்பிள்ளை அர்ஜுனனைத் தேடிக் கொண்டிருந்த அனைவரும் இடும்பி, கடோத்கசன் சகிதம் அவன் உள்ளே நுழைந்தபோது அதிசயித்து நின்று விட்டனர். அர்ஜுனன் எப்போது போனான்? எப்படி வந்தான்?

பஞ்ச பாண்டவர்களில் நால்வரும், குந்தியும் இவ்வளவு நேரமாக இல்லத்தின் மருமகளை விவாகத்துக்கு அழைக்காமல் இருந்து விட்டோமே என்று மிகவும் வெட்கினர்.

''வா, இடும்பி!'' என்ற ஒரே வார்த்தை கூறினான் பீமன். அழையாமல் மறந்துவிட்ட குற்றத்தை இடும்பி எடுத்துக் காட்டுவாளோ என்ற பயம் அவனுக்கு. ஆயினும் அந்த ஒரு சொல்லே இடும்பிக்கு உல்லாசமாக உள்ளே நுழையக் கூடிய துணிவைக் கொடுத்தது. விவாக மகோத்சவத்தில் ஆனந்தமாகப் பங்கு கொள்ள அவள் ஆரம்பித்துவிட்டாள். பீமன் கடோத்கசனை அணைத்துக் கொண்டான்.

பாங்குடனே அனைவரும் வியக்கத்தக்க முறையில் விவாகம் இனிது நடந்தேறியது. முனிவர்களும், ரிஷிகளும், பெரியோர்களும் நிரம்பிய உள்ளத்துடன் ஆசிச் செய்திகள் வழங்கினர். சிற்றரசர்களும், சிறியோர்களும் தங்கள் காணிக்கையாகப் பலப் பல பொருள்கள் வழங்கினர்.

இவை எல்லாவற்றையும் அதிசயத்துடன் பார்த்துக் கொண்டிருந்த கடோத்கசனுக்கு மனத்தில் சிறிது சிறிதாக ஓர் ஏக்கம் பிறந்தது. பாண்டவர் ஐவருள் அவனுக்குச் சித்தப்பா அர்ஜுனனைத்தான் நிரம்பவும் பிடித்திருந்தது. இந்தச் சித்தப்பாதானே நினைவுடன் தன்னை விவாகத்துக்கு அழைத்து வந்தார்? அது மட்டுமா, விவாக காலத்திலும் தனக்கு அருகிலேயே அன்புடன் அமர வைத்துக் கொண்டு இனிய தின்பண்டங்களும், பழங்களும் எவ்வளவு அளித்து விட்டார்! அருமைச் சித்தப்பாவுக்குத் தன் காணிக்கையாக எதைத்தான் அளிக்க முடியும்? அவனோ இடும்பவனத்தில் இருப்பவன். அசுரஸ்திரீக்குப் பிறந்தவன். காட்டில் இருக்கும் வன மிருகங்களைக் கொடுப்பதா? அல்லது காய், கிழங்கு, கனிகளை அளிப்பதா? தாயிடம் போய்க் கேட்டான். அவளும் அதற்குச் சரியாகப் பதில் கூறவில்லை.

அர்ஜுனன் அண்ணன் மகனைக் கவனித்தான். இவனுக்குத் திடீரென்று என்ன ஏக்கம் வந்து விட்டது?

''கடோத்கசா! உன் முகம் திடீரென்று ஏன் வாட்டம் அடைந்து விட்டது? தின்பண்டம் ஏதேனும் வேண்டுமா?'' என்று கேட்டான் கௌந்தேயன்.

"என்ன சித்தப்பா! என்னைப் பார்த்தால் எப்பொழுதும் சாப்பிட்டுக் கொண்டே இருப்பவன் போல் தோன்றுகிறதா?"

"கோபிக்காதேப்பா, உன் முகம் களத்தில்லாமல் இருப்பது என் மனத்துக்கு மிகுந்த வேதனை தருகிறது..."

"சித்தப்பா! விவாகத்துக்கு இவ்வளவு பேர்கள் வந்திருந்தார்களே, அனைவரும் ஆசிகளும், காணிக்கைகளும் அளித்து விட்டுச் சென்றனர். நான்மட்டும் உங்களுக்கு ஒன்றும் கொடுக்க முடியாமல் அசக்தனாக இருப்பதை நினைத்தால் மனம் வேதனை அடையாமல் என்ன செய்யுமாம்?"

அர்ஜுனன் கடகடவெனச் சிரித்தான். "நன்றாக இருக்கிறது உன் ஏக்கம்! நீதான் மகத்தானதொரு பரிசை எனக்கு அளித்து விட்டாயே!"

"நான் அளித்தேனா? என்ன சித்தப்பா, என்ன கூறுகிறீர்கள்?" கடோத்கசன் உற்சாகத்துடன் கேட்டான்.

"நீ அளித்திருக்கும் 'அன்பு'க் காணிக்கையை விட மகத்தான காணிக்கை என்ன இருக்க முடியும்? பண்டமும் பொருளும் என்னை விட்டு அகலக் கூடியவை. ஆயினும் உன் அன்போ என்னை விட்டு எங்கும் எப்போதும் அகலாது. என் மனத்தில் ஆழப் பதிந்து என்னுடனேயே இருக்கும்" என்றான் அர்ஜுனன்.

கடோத்கசனின் மனம் உற்சாகத்தை இழந்துவிட்டது. "இதென்ன பிரமாதக் காணிக்கை!" எனக் கூறி விட்டான்.

அந் நேரத்தில் கண்ணன் அங்கு வந்தார். அவரைப் பார்த்து அர்ஜுனன், "கண்ணா! அண்ணன் மகன் விருப்பத்தைக் கேட்டாயா? இவன் ஏதாவது எனக்குத் தர வேண்டுமாமே!" என்று கூறினான்.

கண்ணன் எதிர்காலத்தைச் சற்றே தம் மனக் கண்முன் நிறுத்திக்கொண்டார். பிறகு புன்முறுவலுடன் பீமன் மகனை நோக்கி, "கடோத்கசா! அதற்குள் அவசரப்பட்டுச் சிற்றப்பனுக்கு வெகுமதி ஏதாவது அளித்து விடாதே. அவசரத்தில் கொடுப்பது உபயோகமற்றதாகி விடும். சிற்றப்பனுக்கு என்ன கொடுக்கலாம் என்று நன்கு யோசித்துக் கொடு. விவாக சமயத்தில்தான் கொடுக்க வேண்டுமென்பது முக்கியமில்லை. பிறகு நீ எப்பொழுது கொடுத்தாலும் அர்ஜுனனுக்கு அது உயர்வாகத்தான் இருக்கும்" என்றார். கடோத்கசனுக்கும் பரந்தாமன் கூறியது ஒப்புதலாகவே இருந்தது.

சில நாட்களுக்குப் பிறகு, பாண்டவர்கள் உயிருடன் இருப்பது அறிந்து ஹஸ்தினாபுரத்தில் பல வாதப் பிரதிவாதங்கள் கழிந்த பிறகு, விதுரர் பாண்டவர்களை ஹஸ்தினாபுரத்துக்கு அழைத்துச் செல்ல வந்தார். பாண்டவர்களுட



## பருக்கள் மறைந்து விடுகின்றன

சருமம் மிருதுவாகவும் மழமழப்பாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடர்ம் (NIXODERM) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடர்ம் (NIXODERM) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழப்பாகவும் மாசு மருவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம் (NIXODERM) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள்; மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (NIXODERM) வாங்குங்கள். முகப் பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடர்ம் (NIXODERM) வாங்குங்கள்.

## நீங்கள் உறங்கும்போதே ஆஸ்தமா சளிகரைகிறது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல்' சுவாசம் தடைப்படுதல் ஆஸ்த்மா, ப்ராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து, இரத்தத்தின் மூலமாக சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மற்றும் மூக்குக்குச் சென்று அங்குக் கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளகிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சுவிடுதல், இல்லாமல் சுகமாக சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அது நிச்சயமாக அளிக்கும்.

# சுலேகா

## பவுண்டன் பேனா மை

### இப்பொழுது உலகின் தலை சிறந்தது




இதில் "S-100" ஸால்வெண்ட் அடங்கி இருக்கிறது. உஷ்ண தேசங்களில் விலை உயர்ந்த பேனாக்களுக்கு உபயோகிக்கும் வகையில் விசேஷமாக தயாரிக்கப்படுகிறது.

**சுலேகா ஒர்க்ஸ் லிமிடட்,**

கல்கத்தா, டில்லி, பம்பாய், மதராஸ்.

சென்னை ஆபீஸ் 2/153, பிராட்வே, சென்னை-1

னும், திரௌபதி குந்தியுடனும் இடும்பி ஹஸ்தினபுரம் செல்ல விரும்பவில்லை. ஆயினும் அர்ஜுனன்தான் கட்டாயப்படுத்தி அழைத்துச் சென்றான்.

ஹஸ்தினபுரத்தில் பாண்டவர்கள் கோலாகலமாக நுழைந்தனர். விருந்தும் முடிந்துவிட்டது.

அரண்மனையின் ஓர் இடத்தில் இடும்பி தன் மகன் கடோத்கசனுடன் அமர்ந்திருந்த வேளையில் துரியோதனனும், கர்ணனும் அந்தப் பக்கம் வர நேரிட்டது.

கர்ணன் கடோத்கசனைப் பார்த்து ஒரு ஏளனச் சிரிப்பு சிரித்தான். "துரியோதனா! விருந்துக்கு இவ்வளவு சாதம் ஏன் வடிக்க நேரிட்டது என இப்போதுதான் புரிந்தது..." என்றான். துரியோதனன் வயிறு வெடிக்கச் சிரித்தான்.

இடும்பியின் தாய் உள்ளம் துடித்தது. ரத்தத்தில் சூடு ஏறியது.

"பீமன் பிள்ளை போலும். முகமும், வயிறுமே இரு சட்டிப் பானைகள்..." கர்ணன் கூறினான்.

இடும்பியின் உடல் படபடத்தது.

"யானைக்குக் கூட வயிறு சிறியது."

கர்ணன் மேற்கொண்டு கூறுவதற்குள் இடும்பி தன் முஷ்டியை மடக்கிக்கொண்டு எழுந்து விட்டாள். தன் அசுரத் தன்மையை முழுதும் வெளிக்காட்ட அவள் நிச்சயித்து விட்டாள்.

அந் நேரத்தில், தூரத்தே நின்று கவனித்துக் கொண்டிருந்த தருமர் முன் வந்தார். "இடும்பி! இச்சமயம் உன்னுடைய கோபத்தை என் பொருட்டு அடக்கிவை" என்றார்.

"தங்கள் கட்டளைக்கு அடிபணிகிறேன். ஆயினும் இத் துஷ்டன் பஞ்ச பாண்டவர்கள் கையினால் அழிய வேண்டும். அந்த உறுதிமொழியை எனக்கு அளியுங்கள்..."

தருமர் திணறினார்.

அதே நிமிடம் இடும்பி தன் மகனுடன் இடும்ப வனத்துக்குக் கிளம்பி விட்டாள். எவ்வளவு தடுத்தும் அவள் கேட்கவில்லை.

காலப் போர்வையினுள் பலப்பல நிகழ்ச்சிகளைக் காட்டிவிட்டு வருடங்கள் மறைந்தன. உரிய பொருளைத் திருப்பித் தராததின் காரணமாகக் குருக்ஷேத்திரத்தில் மாபெரும் யுத்தம் துவங்கி விட்டது.

இடும்ப வனத்தில் இடும்பியின் மனம் அன்று ஏனோ நிலை கொள்ளாமல் தவித்தது. ஏதோ ஒரு சூசகம் தோன்றித் தோன்றி மறைந்தது.

இச்சமயம் கண்ணன் அங்கு தோன்றினார். அவரைப் பார்த்ததும் தாய்க்கும், மகனுக்கும் ஒரே ஆச்சரியம்.

"இடும்பி! குருக்ஷேத்திரத்தில் மாபெரும் யுத்தம் தொடங்கி விட்டதை நீ அறிவாயோ?" என்று கேட்டார் கண்ணன்.

"தெரியும், சுவாமி! பராபரியாக விஷயங்களை அறியக் கூடிய பாக்கியம்தான் எனக்கு இருக்கிறது. பாண்டவர்கள் இங்கு வந்து விவரங்கள் கூற மறந்து விடுவார்கள்..." ஏக்கத்துடன் கூறினாள் அவள்.

"இடும்பி! பாஞ்சாலியுடன் ஹஸ்தினபுரம் சென்றபோது கர்ணன் செய்த அவமானம் நினைவிருக்குமே..."



முத்துசாமி தீக்ஷிதர் திருநாளைச் சிந்திரி கர்நாடக கலாமண்டலியினர் விமரிசையாகக் கொண்டாடினர். திருவாரூர் பாலுசாமி தீக்ஷிதர் வீணைக் கச்சேரி செய்து சபையோரை மகிழ்வித்தார்.

"இல்லாமலென்ன? நிறைந்த சபையில் பாஞ்சாலிக்கு நேர்ந்த அவமானத்தையே சகித்துக் கோழைகளாகிவிட்ட பாண்டு புத்திரர்கள், என் அவமானத்தையா நினைவு வைத்துக் கர்ணனை மாய்க்கப் போகிறார்கள்!"

"இடும்பி! கர்ணன் மாண்டுபோகக் கூடிய சமயம் வந்துவிட்டது. ஆனால் கர்ணனை நீ அறிய மாட்டாய். அவனை மாய்க்க வேண்டுமானால் அவனுக்குள்ள சக்திகளைப் பிடுங்கி விடவேண்டும். அர்ஜுனன் அவனைத் தீர்த்து விடச் சபதம் எடுத்திருக்கிறான். கர்ணன் அவன்கையினால் மரணமெய்திடப் போகிறான். ஆனால்..." மேற்கொண்டு கூற முடியாமல் நிறுத்தினார் கிருஷ்ணர். புத்திர சோகம் ஓர் அசுரப் பெண்ணுக்கும் உண்டு என்பதை அவர் அறிவார். அதை எப்படி முன்கூட்டியே அவளிடம் கூறிச் சோகத்தைக் கொடுப்பது?

கிருஷ்ணர் தத்தளித்த நிலையிலிருந்தபோது கடோத்கசன் அவர் அருகில் வந்தான்.

"மாமா!"

"என்ன, கடோத்கசா?"

"பேசுவதற்குரிய காலமில்லை இது. எழுந்திருங்கள். போர்முனைக்கு அழைத்துச் செல்லுங்கள் என்னை" என்று கூறிய அவன், பிறகு தாயின் பக்கம் திரும்பினான். "அப்பாவும் சுற்றத்தாரும் அங்கு போர் முனையில் இருக்கும்போது நான் இங்கு இடும்ப வனத்தில் இருப்பது வீர மகனுக்கு அழகல்ல" என்றான்.

பிறகு அன்னையை வணங்கிவிட்டுப் போர்க் கவசங்களை அணிந்து கொண்டான். கிருஷ்ணருடன் அவனும் புறப்பட்டு விட்டான்.

தாய் பிரியா விடை கொடுத்தாள்.

போகும்போது கிருஷ்ணர் விளையாட்டாகக் கேட்டார்: "கடோத்கசா! சிற்றப்பனுக்கு வெகுமதி அளிக்கப் போவதாகக் கூறினாயே, அதை நிறைவேற்றிவிட்டாயோ!"

கடோத்கசன் சில காலமாக அதை மறந்திருந்தான். கண்ணன் இப்பொழுது நினைவு படுத்தவே தன் மறதிக்குச் சற்றுக் கூச்சம் அடைந்தான். "இன்னமும் இல்லை, மாமா!

வெகுமதி அளிக்க எப்பொழுது சந்தர்ப்பம் ஏற்படுமோ தெரியவில்லை...''

கண்ணன் பதில் ஒன்றும் கூறவில்லை.

**ப**தினான்காம் நாள் பகலில் போர் முடிந்து ஜயத்ரதனைக் கொன்று பழிதீர்த்த ஆனந்தத்தில் அனைவரும் மூழ்கியிருந்த போது கண்ணன் கூறினார். ''இனி கர்ணனை மாய்க்க வேண்டிய பெரிய காரியம் பாக்கி நிற்கிறது. அதற்கு வழி காண வேண்டும்...''

''மாமா! கவச குண்டலங்களை அபகரித்து விட வழி செய்த பிறகு இன்னும் என்ன பயம் இருக்கிறது?'' பீமன் கேட்டான்.

''கர்ணன் இந்திரனிடம் பெற்றுள்ள சக்தி ஆயுதத்தை மறந்து விட்டாயோ! அர்ஜுனனுக்காகவே அவன் அதைக் காப்பாற்றி வருகிறான். அர்ஜுனனே தன் கையினால்தான் கர்ணனுக்கு முடிவு எனப் பிரதிக்ஞை செய்திருக்கிறான்....''

அனைவர் முகத்திலும் வியாகூலம் பரவியது. இதற்கு நிவாரணம் எங்கு, எப்படிக் காண முடியும்? அருகிலிருந்த கடோத்கசன் சற்று நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''மாமா, இதற்கு வழி ஏதும் இல்லையோ!''

''ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. கர்ணனோடு எவன் ஒருவன் தன் உயிரையும் மதியாமல் தீவிரமாக யுத்தம் செய்து அந்தச் சக்தி ஆயுதத்தைத் தன்மீது பிரயோகிக்கும்படி செய்துவிடுகிறானோ, அவன் அர்ஜுனன் கையினால் கர்ணனுக்கு மரணத்தை வரவழைத்துத் தருபவனாவான். சக்தியாயுதம் அழிந்து விட்டால் கர்ணன் அர்ஜுனனை அழிக்கச் சக்தியற்றவனாகிவிடுவான். ஆயினும், நம்மிடையே கர்ணன் சக்தியாயுதத்தைப் பிரயோகிக்கும் அளவு போர் புரிபவர்கள் மிகக் குறைவு; அப்படியிருப்பினும் தன் உயிரை இழக்க எவன் சம்மதிப்பான்? ஏனெனில் சக்தியாயுதத்தைப் பிரயோகித்து விட்டால் அதற்குப் பலி உயிரே....'' கண்ணன் கூறினார்.

கடோத்கசனின் மனத்தில் மின்னலென ஏதோ ஒன்று பாய்ந்தது. கூடாரத்திலிருந்து எழுந்தான். அன்னையை நோக்கி விரைந்தான். நினைத்தால் ஓர் இடத்துக்குச் சென்று, உடனே திரும்பக் கூடிய திறமை பெற்றவர்கள் அவனும், அவன் தாயும்.

மகனைக் கண்டதும் இடும்பி ஆவலோடு அவனை அணைத்துக் கொண்டாள். என்றும் இல்லாத வழக்கமாக அன்னையிடம், சாதத்தைக் கையில் பிசைந்து போடச் சொன்னான் கடோத்கசன். அவள் மடியில் சற்றுப் படுத்து எழுந்தான். பிறகு தன் கையினால் அவளுக்கு அன்னமிட்டான். சற்றைக்கெல்லாம் அவன் புறப்பட்டு விட்டான்.

''அம்மா! உன் கை உணவும், உன் அன்பு மடியும் நான் எடுத்த காரியத்தை நிறைவேற்ற உதவட்டும். ஆசீர்வதியுங்கள்...அம்மா, ஒரே ஒரு பிரார்த்தனை. வீர மகனைப் பெற்றெடுத்த நீங்கள், அவன் வீர மரணம் எய்தினால் சற்றும் கலங்கக் கூடாது....''

இடும்பி சட்டென்று அவன் வாயைப் பொத்தினாள். ''போதுமடா குழந்தாய்! வீரமகன் எங்கேயாவது அபஜயமடைவானோ!''

கடோத்கசன் விடைபெற்றுப் புறப்பட்ட போது தாயுள்ளம் ஏனோ என்றும் காணாத நிலையில் துடிதுடித்தது; கண்ணீர் பொழியச் செயலற்று நின்றாள்; நெஞ்சு குமுறியது; மனம்வெதும்பித் தவித்தது. மகனை அணைத்துச் செயலற்று நின்றாள்; பிறகு பிரியாவிடை கொடுத்தாள்.

கடோத்கசனும் திரும்பித் திரும்பி நோக்கியபடி சென்றான். தாயின் தவிப்பில் மனம் நெகிழ்ந்தது. ஆயினும் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு கிளம்பி விட்டான். சிற்றப்பாவுக்குப் பரிசளிக்க இதைவிடச் சிறந்த சந்தர்ப்பம் எப்பொழுது கிடைக்கும்......

அன்று இரவும் போர் நிகழ வேண்டும் எனக் கடோத்கசன் கூறியதும், கிருஷ்ணன் உடனே சம்மதம் தெரிவித்து விட்டார். கடோத்கசன் அசுரத் தன்மை உடையவன் ஆதலால் இரவில் பல மாயைகளைச் செலுத்தி யுத்தம் செய்யத் திட்டமிட்டான்.

எதிர்பார்த்தது போலவே, கர்ணனும் கடோத்கசனும் கடும் போர் புரிந்தனர். கடோத்கசனின் மாயா யுத்தத்தால் மிக்க கோபம் கொண்ட கர்ணன் கடைசியில் தன் நினைவை மறந்து அர்ஜுனனுக்காகக் காப்பாற்றி வைத்திருந்த சக்தியாயுதத்தைப் பிரயோகித்து விட்டான். அவ்வாயுதம் கடோத்கசன் உயிருக்கு யமனாக நின்றுவிட்டது.

''அம்மா!'' என்ற பேரொலியுடன் தரையில் மலைபோல் சாய்ந்தான் கடோத்கசன். அர்ஜுனன் உயிர் பிழைத்தான் எனக் கண்ணன் கூறினார்.

கடோத்கசனைச் சுற்றிப் பஞ்ச பாண்டவர்கள் அழுது துடித்து நின்றனர். கடோத்கசன் அர்ஜுனனை மெதுவாக அருகில் அழைத்தான். ''சித்தப்பா! ஏன் அழுகிறீர்கள்? நான் உங்கள் விவாகத்திலேயே உங்களுக்கு ஏதாவதொரு பரிசு அளிக்க விரும்பினேன். உங்கள் உயிருக்காக என் உயிரைப் பரிசுக் காணிக்கையாக அளிக்கத் திட்டமிட்டேன். இன்று இரவு போரைத் துவக்கினேன். என் திட்டம் வெற்றி பெற்று விட்டதில் எனக்கு மகிழ்ச்சியே....சித்தப்பா! என் உயிரை உங்களுக்கு அன்புக் காணிக்கையாக அளித்துள்ளேன். நீங்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றால்தான் என் அன்பு நிறைவுபெறும்....'' என்றான் கடோத்கசன் நிறைவுபெற்ற உள்ளத்துடன்.

''ஐயோ, கடோத்கசா! உன் அன்பை இப்படியா காட்டத் துணிய வேண்டும்....?'' அர்ஜுனன் புலம்பினான்.

இதற்குள் இடும்பி வந்து விட்டாள், உதிரத் தொடர்பின் காரணமாக. மகன் விடைபெற்றுச் சென்றது முதல், இடும்ப வனத்தில் அவளால் இருக்க முடியவில்லை. யுத்த பூமிக்கு வந்து விட்டாள். அங்கு அவள் கண்டது....

''ஐயோ, மகனே!'' இதயம் துடிக்க வீரிட்டவாறு மகனை மடியில் இருத்தி அவள் கதறினாள்.

''அ...ம்மா!'' செவிக்கினிய ஒரே ஒரு வார்த்தை என்றும் மறவா வண்ணம் அன்னையிடம் கூறிவிட்டுத் தனயன் விடைபெற்றுச் சென்று விட்டான்.

கதறித் துடித்த அந்த அசுர நங்கையைத் தேற்ற வழிதெரியாமல் நின்றனர் அனைவரும்.

நான் எப்பொழுதும் ஹமாம்

சோப்பையே வாங்குகிறேன்



புதுமுறையான மிருதுத்துவம் அளிக்கும்
இதன் தன்மையினால் மிருதுவான நுரை அளிக்கிறது.

இதை உபயோகித்து குளிக்கும்போது சுத்திகரித்து புத்துணர்ச்சி அளிக்கிறது
ஹமாம் சோப் மிகவும் நேர்த்தியானது நறுமணமுள்ளது.

நீண்ட நாட்கள் நீடித்து நிற்கிறது.
மிகவும் சிக்கனமானது.

ஹமாம்




ஓர் டாடா தயாரிப்பு

எங்கள் குடும்பத்தில் யாவரும்
ஹமாம் சோப்பையே விரும்புகிறார்கள்

# போரூர் முருகப் பெருமான்

தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

**ஒருமையுடன் நினது திரு**
**மலரடி நினைக்கின்ற**
**உத்தமர்தம் உறவு வேண்டும்;**
**உள்ஒன்று வைத்துப்**
**புறம்பு ஒன்று பேசுவார்**
**உறவு கலவாமை வேண்டும்;**
**பெருமை பெறு நினது புகழ்**
**பேசவேண்டும்; பொய்ம்மை**
**பேசாது இருக்க வேண்டும்;**
**பெருநெறி பிடித்து ஒழுக**
**வேண்டும்; மதமானபேய்**
**பிடியாதிருக்க வேண்டும்.**

என்றெல்லாம் விண்ணப்பித்துக் கொள்கிறார் **ராமலிங்க அடிகள்.** யாரிடம் இப்படி விண்ணப்பித்துக்கொள்கிறார் என்றால், அந்தக் கந்த கோட்டத்துக்குள் இருக்கும் கந்தவேளிடம் தான். கந்தகோட்டம் என்றால் பலருக்குத் தெரியாமல் இருக்கலாம். சென்னை பூக்கடை **கந்தசாமி கோயில்** என்றால் எல்லோருக்கும் தெரியும். எவ்வளவோ 'கச்சவடம்' நடக்கும் இடத்திலே கோயில் அமைந்திருந்தாலும், ராமலிங்கர் அந்தச் சென்னையை, அச்சென்னையில் உள்ள கோயிலை 'தருமமிகு சென்னை' என்றும், 'கந்தகோட்டத்துள் வளர் தலம் ஓங்கும் கந்தவேள்' என்றுமே குறிப்பிடுவார். இந்தக் கந்தவேளிடம் அவர் விண்ணப்பித்து வேண்டிக் கொள்ளும் வேண்டுகோள்களோ அனந்தம். அத்தனை வேண்டுதல்களையும் இக் கோயிலுக்குச் செல்லும் அன்பர்கள் (டிரவுசர் கோட்டோடு, குல்லாவும் அணிந்தே செல்லும் அன்பர்கள்தான்) இன்றும் வேண்டிக் கொண்டே செல்கிறார்கள். கோயில் புராதனமான கோயில் இல்லை என்றாலும் பிரபலமான கோயில். அங்குள்ள மூர்த்திகள் எல்லாம் சின்னஞ்சிறு வடிவங்கள்தான். கோயிலின் ஒரு மாடத்தில் ராமலிங்கரையுமே பிரதிஷ்டை பண்ணியிருக்கிறார்கள்.

இக் கோயிலைவிடச் சென்னையில் இன்று பிரபலமாயிருப்பது **வடபழனி ஆண்டவர்** கோயில்தான். பூக்கடை கந்தசாமி கோயில் ஏதோ இருநூறு வருஷங்களுக்குள் உருவான கோயில்தான் என்றால், சமீபத்தில் இருபத்தைந்து வருஷ காலத்துக்குள்ளேயே உருவான கோயில் கோடம்பாக்கம் வடபழனி ஆண்டவர் கோயில். 'பால் மணக்குது பழம் மணக்குது பழனி மலையிலே' என்று பாடி, காவடி தூக்கி ஆடியவனே, 'தேன் மணக்குது, தினை மணக்குது தென் பழனியிலே' என்று பாடி இருக்கிறான். உடனே அந்தப் பழைய பழனியில் உள்ளவனைத் தென்பழனி ஆண்டவன் ஆக்கி, புதிதாக உருவாக்கிய முருகனை இந்தப் பட்டினத்துக்காரர்கள் வடபழனி ஆண்டவனாக ஆக்கி இருக்கிறார்கள். **அண்ணாசாமி நாயக்கர்** என்ற ஒரு பக்தர். திருத்தணிகை முருகனிடத்தும் பழனி ஆண்டவனிடத்தும் ஆராத காதல் உடையவர். அவர் பழனி சென்றிருந்தபோது, பழனி ஆண்டவர் படம் ஒன்று வாங்கி வந்து அதைப் பூஜை செய்து வந்திருக்கிறார். பூஜை முடிந்ததும் அவருக்கு ஆவேசம் வருவதுண்டாம். அப்போது அவர் என்ன சொன்னாலும் அது அப்படியே நடக்க ஆரம்பித்திருக்கிறது. இந்த நிலையில் பிரபல வியாபாரியான **இரத்தினவேல் செட்டியார்** இவருடைய சிஷ்யர் ஆகி இருக்கிறார். அவரும் துறவு பூண்டு அண்ணாசாமி நாயக்கருடன் சேர்ந்து வழிபட்டிருக்கிறார். அவர் மிகக் குறைந்த முப்பத்தைந்து ரூபாய் செலவிலே ஒரு சிற்பியைக் கொண்டு பழனி ஆண்டவர் திருஉரு ஒன்றைச் செய்து வைத்திருக்கிறார். இந்த ஆண்டவருக்குக் கோயில் கட்ட இன்னொரு அன்பர் வர வேண்டி யிருந்திருக்கிறது. **பாக்கியலிங்கத் தம்பிரான்** என்பவரே, கோயில் திருப்பணியை ஆரம்பித்துச் செய்து முடித்திருக்கிறார். இப்படி மூவரால் உருவாக்கப்பட்ட கோயிலே இன்று பிரபலமாக இருக்கும் வடபழனி ஆண்டவர் கோயில். அந்தக் கோயிலில் மூலமூர்த்தியாக இருப்பவர் அந்தத் தென்பழனியில் உள்ளவரைப்போல், மெலிந்து தேய்ந்தவர் அல்ல. நல்ல திடசரீரி. அதோடு நிற்கும் 'ஸ்டைலும்' மிக்க அழகு. இவரையே,

**கண்டார்தம் மனம் கவரும் முண்டிதமாய்**
**சிரத்து அழகும், காணக் காணக்**
**கொண்டாடத்தக்க திரு நீற்று அழகும்,**
**கண்டிகையின் கோலச் சீரும்**
**பண்டாய நான்மறைக் கோவணச் சீரும்**
**கொண்டு வடபழனி மேவும்**
**தண்டாயுதப் பெருமான்**

என்று தணிகை மணி செங்கல்வராய பிள்ளை அவர்கள் பாடி யிருக்கிறார்கள். சென்னையில் உள்ளவர்களும் சென்னைக்குச் செல்பவர்களும் அவகாசம் கிடைக்கும்போதெல்லாம் பூக்கடை கந்தசாமி கோயிலுக்கும், கோடம்பாக்கம் வடபழனி ஆண்டவர் கோயிலுக்கும் சென்று முருகனை வணங்கலாம். வந்தித்து வாழ்வு பெறலாம்.

இன்று நான் உங்களை அழைத்துச் செல்ல விரும்புவது சென்னைக்கு அணித்தேயுள்ள மற்றொரு பிரபலமான முருகன் கோயிலுக்கே. அந்தக் கோயில்தான் திருப்போரூர் கோயில். சென்னையிலிருந்து மகாபலிபுரம் என்று வழங்கும் மாமல்லபுரம் செல்லும் வழியில் முப்பத்து ஆறுமைல் தூரத்தில் உள்ள சிறிய ஊர் அது. இன்று அங்குள்ள கோயிலும் குளமும் முந்நூறு வருஷங்களுக்குள் உருவானவைதான். என்றாலும் அந்த இடத்தில் ஒரு பழைய முருகன் கோயில் இருந்திருக்க வேணும். பல்லவ மன்னர்கள் காலத்திலேயே இந்தக் கோயில் எழுந்ததாக வரலாறு. பதின்மூன்றாவது நூற்

ருண்டில் பதிவு செய்யப்பட்ட கல்வெட்டில், இவ்வூர், தொண்டை நாட்டில் ஆமூர் கோட்டத்தில் உள்ள ஜெயங்கொண்ட சோழ மண்டலம் என்று குறித்திருக்கிறது. விக்ரம சோழன் ஏற்படுத்திய நிபந்தங்களையும், விஜயகண்ட தேவர் நந்தா விளக்குக்காகப் பொன் கொடுத்ததையும் அறிவிக்கும் கல்வெட்டுக்கள் எல்லாம் இங்குள்ள தெய்வயானையார் கோயில் சுவர்களில் சிதைந்து காணப்படுகின்றன. இவைகளே இக்கோயில் புராதனமானது என்பதற்குச் சான்றுகள். இந்த ஊருக்கு அந்த நாளிலே **சமரபுரி** என்ற பெயரும் இருந்திருக்கிறது. இந்தக் கோயிலைவிட இங்குள்ள முருகனைப் பற்றிச் **சிதம்பர சுவாமிகள்** பாடிய '**திருப்போரூர் சந்நிதி முறை**' என்ற பிரபந்தம் சிறந்த இலக்கியப் பிரசித்தி உடையது. இந்தக்கோயில் திருப்பணி பண்ணியவரும் அவரே.

மதுரையில் சங்கப்புலவர் மரபிலே தோன்றியவர் சிதம்பர சுவாமிகள். இளமையிலேயே சிவானுபூதிச் செல்வராக வளர்ந்திருக்கிறார். விருத்தாசலத்திலே இருந்த குமரதேவரை அடுத்து அவரைக் குருவாக ஏற்றிருக்கிறார். குமரதேவரோ, பேரூர் சாந்தலிங்க சுவாமிகளின் சிஷ்யர். இப்படி சாந்தலிங்கரது அருளும், குமர தேவரது ஆசியும் பெற்று விருத்தாசலத்திலே சமாதி நிலையில் இருந்தபோது வேலனுடைய மயில் ஆடும் காட்சியைக் கண்டிருக்கிறார். குருநாதரது கட்டளைப்படியே சமரபுரிக்கு வந்து ஒரு பனை மரத்தடியிலே புதைந்து கிடந்த முருகனையும் தேவியரையும் வெளிக்கொணர்ந்து வணங்கியிருக்கிறார். நோய்

**தந்தைக்கு உபதேசிக்கும் தனயன்**



தவிர்த்தல் முதலிய அற்புதங்களை இந்தச் சிதம்பர சுவாமிகள் செய்ய, அதனால் பக்த கோஷ்டிகள் பெருகியிருக்கிறார்கள். இன்டி வனத்தை அடுத்த இளையனூரிலிருந்து ஒரு அம்மையார், தான் அரும்பாடுபட்டுத் தேடிய பொன் ஒன்றைச் சமர்ப்பிக்க அதோடு சென்னை பாளையத்தா செட்டியார் என்பவர் கொண்டுவந்து கொடுத்த இரண்டு பை வராகன்களையும் வைத்துக்கொண்டு திருப்பணி ஆரம்பித்துக் கோயிலைச் சிறப்பாகக் கட்டி முடித்திருக்கிறார். திருக்குளம் வெட்டியிருக்கிறார். உற்சவாதிகள் நடத்த வேண்டிய ஏற்பாடுகளையும் செய்திருக்கிறார். அன்று, பரம்பரை பரம்பரையாக நாட்டை ஆண்ட அரசப் பெருமக்கள் செய்த சீரிய பணியையே, முருகன் அருள்கொண்டு ஓர் ஏழைத்துறவி சிறப்பாகச் செய்திருக்கிறார் என்றால் அது வியப்புக்கு உரியதுதானே.

இந்தக் கோயிலுக்குள் செல்லுமுன் பக்கத்திலே மலைமேல் உள்ள **கைலாசநாதரையும்** அவர் துணைவி **பாலாம்பிகையையும்** தரிசிக்கலாம். அம் மலை ஏறுமுன் **வேம்படி விநாயகர்** வேறே வழியை மறிப்பார். இவர்களை யெல்லாம் வணங்கிய பின்பே முருகனைத் தரிசிக்கப் போக வேணும். மூர்த்தி கிழக்கு நோக்கி யிருந்தாலும் பிரதானவாயில் தெற்கு நோக்கியே இருக்கிறது. இந்த வாயிலைக் கடந்து, வெளிப்பிராகாரத்தில் உள்ள கோபுர வாயிலையும் கடந்தே முருகன் சந்நிதிக்குச் செல்ல வேணும். மூலமூர்த்தி பனையடியில் புதைந்திருக்கிறார். ஆதலால் புற்றிடங் கொண்ட அந்தப் பெருமானுக்கும் அவன் துணைவியருக்கும் புனுகுச் சட்டமே சாத்தி அலங்கரிக்கின்றனர். அபிஷேகம் கிடையாது. உருவங்களும் மொழுமொழு வென்றே இருக்கும். இந்த மூல மூர்த்திகளுக்கு முன்னும் மிகச் சிறிய உருவிலே வள்ளி தெய்வயானை சமேதனாகக் கந்தனை உருவாக்கி நிறுத்தியிருக்கிறார்கள். இந்தக் கந்தன் கரங்களில் உடம்பிடி, குலிசை முதலிய ஆயுதங்கள் இல்லை. தூக்கிய திருக்கரங்களிலே ஜபமாலையும் கமண்டலமுமே காணப்படுகின்றன. இங்குள்ள முருகன், பிரணவப் பொருள் அறியாத பிரமனைச் சிறையில் அடைத்தபின், தானே சிருஷ்டித் தொழிலை மேற்கொண்டிருக்கிறான். அந்த நிலையே உருவாகி இருக்கிறது இங்கே. வள்ளியையும், தெய்வயானையையும் உடன் வைத்துக் கொண்ட பெருமான் இவர் என்றாலும் அவர்களுக்குத் தனித்தனி சந்நிதி வேறே அமைத்துக் கொடுத்திருக்கிறார். இக்கோயிலில் இருபத்துநாலு தூண்களோடு கூடிய ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. ஒவ்வொரு தூணிலும் ஒரு கையில் கேடயமும் ஒரு கையில் வாளும் உடைய நவ வீரர் முதலியோரது உருவங்கள் உண்டு. இது போரூர் அல்லவா? சூரபதுமனின் துணைவர்களான அசுரர்கள் போருக்கு எழுந்தபோது அவர்களை இங்குதான் சமர் புரிந்து வென்றார் என்பது தானே வரலாறு. ஆகையால் சமரபுரி முருகன் சந்நிதியில் இவ்வீரர்களை யெல்லாம் உருவாக்கி நிறுத்தியிருப்பது பொருத்தம்தானே.

இப்படியெல்லாம் சிதம்பரசுவாமிகள்கட்டிய கோயிலைவிட அவர் எழுநூற்று இருபத்தாறு பாடல்களால் பாடிப் பரவி முருகனை வணங்கி

யிருக்கும் திருப்போரூர் சந்நிதி முறை சிறப்பானது. பிள்ளைத் தமிழ், அலங்காரம், தாலாட்டு, திருப்பள்ளி எழுச்சி, கட்டியம் என்றெல்லாம் அந்தப் பாடல்கள் விரிந்திருக்கின்றன. 'ஏதுபிழை செய்தாலும் ஏழையேனுக்கு இரங்கித் தீது புரியாத தெய்வமே!' என்று போரூர் முருகனைக் கூவி அழைப்பார் ஒருதரம், பின்னர்.

நோயுற்றுத் தளராமல்
நொந்து மனம் வாடாமல்
பாயில் கிடவாமல்
பாவியேன்—காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கி எனை
ஒண்போரூர் ஐயா! நின்
சீரடிக் கீழ் வைப்பாய் தெரிந்து.

என்று அவரிடமே வேண்டுவார். அவர் பாடிய பாடல்களைப் படிப்பவர்கள் பக்தி பரவசம் அடைவது கண்கூடு. 'குஞ்சர முகற்கு இளைய கோவே! கொஞ்சி உமை முத்தமிடு பூவே!' என்று அவர் கொஞ்சும் தமிழில் முருகனை வர்ணிப்பதில்தான் எத்தனை அழகு. அவகாசமும் ஆர்வமும் உடையவர்கள் சந்நிதி முறைப் பாடல்களை யெல்லாம் பாடிப் பாடி மகிழலாம்; பாராயணமே பண்ணலாம்.

நீண்ட புராண வரலாறோ அல்லது பழைய சரித்திரப் பிரசித்தியோ இல்லாத இந்தத் தலத்தை இந்த வரிசையில் சேர்ப்பதற்கு முக்கிய காரணம் ஒன்று. இன்று அங்குள்ள கோயில் அவ்வளவு பழைய கோயில் அல்லதான் என்றாலும், அக் கோயிலுக்குள் இரண்டு பழைய செப்புச் சிலை உருவங்கள் இருக்கின்றன. ஒன்று போர்க்கோலத்தில் வில்லேந்தி நிற்கும் வேலன். மற்றொன்று குருவாய் அவனுக்கு உபதேசம் செய்த குகன். இரண்டுமே கலை அன்பர்கள் சென்று காண வேண்டிய சிலாவடிவங்கள். தேவசேனாபதியான கார்த்திகேயன் வில்லேந்திப் போருக்குப் புறப்பட்ட நிலையைக் கல்லுருவிலே திருவையாற்றிலும், திருவண்ணாமலை கம்பத்து இளையனார் கோயிலிலும் பார்க்கிறோம். அதோடு செப்புச் சிலை வடிவில், திருவெண்காட்டை அடுத்த சாய்க்காடு என்னும் சாயாவனேசுவரர் கோயிலிலும் காண்கிறோம். அவைகளில் எல்லாம் இல்லாத கம்பீரம் இப்போரூரில் உள்ள சிலை வடிவில் இருக்கிறது. ஒரு காலைத் தரையிலும் மற்றொரு காலை மயிலின் முதுகிலும் ஊன்றி உடல் வளைத்து நிற்பதில், சேனாபதியின் மிடுக்குத் தெரிகிறது. சக்திவேல் தாங்கிய ஒரு கரம் போக மற்றொரு வலக் கரம் மயிலின் கழுத்தையே வளைத்துநிற்கிறது. இடக் கையை வில்லேந்தும் பாணியிலே தலைக்கு மேலேயே உயர்த்தி யிருப்பது மிக்க அழகாக இருக்கிறது, வில்லென்று ஒன்று இல்லாமலேயே. முகத்திலே ஓர் உக்கிரம், நெஞ்சிலே ஒரு பதக்கம், அரையிலே ஒரு சல்லடம் எல்லாம் உடைய அவன் 'வானோர் வணங்கும் வில்தானைத் தலைவன்' என்பதை நன்கு எடுத்துக் காட்டுகிறது. வில்லேந்திய வேலனது திருவுருவங்களில் எல்லாம் சிறந்த திரு உரு இதுவே. அது சமரபுரியில் இருப்பதும் விசேஷமே.

அடுத்த சிலாவடிவமும் அழகானது. சின்னஞ்சிறு பாலன், ஆனாலும் பிரணவத்தின்



வில்லேந்திய சமரபுரி முருகன்

பொருள் தெரியாது விழித்த பிரமனைக் குட்டிச் சிறை இருத்திவிட்டுத் தன் தந்தையாம் இறைவனுக்கே பிரணவப்பொருளை விளக்கும் நிலையில் குரு மூர்த்தமாக எழுந்தருளும் கோலம் அல்லவா அது! இந்த நிலையைச் சுதை உருவிலே சுவாமி மலையிலே செய்து வைத்திருக்கிறார்கள். அங்கு மைந்தனாய குமரன் முகத்திலே பால் வடிகிறதே தவிர குருவாயிருப்பதிலே உள்ள மிடுக்கு இல்லை. ஆனால் இங்குள்ள சிலையிலோ தாமரைத் தவிசில் இருந்தாலும் மடக்கிய கால் மேலே கையை நீட்டி, உபதேச முறையில் ஒரு கையை உயர்த்தி அபயம் அருளும் நிலையில் இருக்கிறது. இதைவிடச் சிறப்பாகச் சீடனாக இருக்கும் சிவபிரான், கை கட்டி வாய் பொத்தி மகனை செய்யும் உபதேசம் என்றாலும் அதைப் பவ்வியமாகக் கேட்கும் நிலையையும் நன்றாக உருவாக்கியிருக்கிறான் சிற்பி. 'இரு என இருந்து, சொல் எனச் சொல்லி, பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி, சித்திரப்பாவையின் அத்தக அடங்கி, செவி வாயாக, நெஞ்சுகளனாகக் கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைக்கும்' சீடனின் நிலையை, நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர் சொல்கிறார். அவர் சொல்லும் இலக்கணத்துக்கு இலக்கியமாய் அமைந்த சீடனாக இறைவன் இருப்பது பார்த்துப் பார்த்து அனுபவிக்கத் தக்கது. இந்த இரண்டு சிற்ப வடிவங்களையுமே பார்க்கிறீர்கள் பக்கத்திலே. இவை எக்காலத்தன என்று சொல்ல இயலவில்லை. சோழர் காலத்துச் செப்புச் சிலையாக இருக்கலாம். இத் தலத்தில் முருகனைக் கண்டு வணங்கித் திரும்பும் போது, இத்தகைய அரிய சிற்ப வடிவங்களை உருவாக்கிய தமிழகத்துச் சிற்பிகளுக்குமே வணக்கம் செய்து திரும்பலாம் தானே.

# கண்கள் உறங்காவோ?

### அத்தியாயம் 4

## எங்கே உங்கள் திட்டம்?

வீணாவின் வெளியேற்றம் அங்கு நின்ற அனைவரையுமே ஒரு தாக்குத் தாக்கிவிட்டது. இது அவள் திடீரென்று செய்த முடிவில்லை. தன் அத்தையும் மாலாவும் வீட்டைவிட்டுச் செல்வதைத் தடுப்பதற்காகச் சட்டென்று அவள் இந்த முடிவுக்கு வந்து விடவில்லை. அவள் ஏற்கெனவே வீட்டைவிட்டு வெளியேறி விடும் நோக்கத்தோடுதான் அங்கே வந்தாள். அதை அவளே வெளியிட வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தாமல் தைலம்மாள் அவளுக்கு எளிதான வழி வகுத்துக் கொடுத்து விட்டாள்.

சுந்தரம் எப்பொழுது வீட்டைத் துறந்து தனது ஆஸ்பத்திரிக்குக் குடிவந்தானே, அந்த நிமிஷமே தானும் இனி அவ்வாறு செய்தாலன்றி மேற்கொண்டு முயற்சிகளில் ஈடுபட முடியாது என்பது அவளுக்குத் தோன்றிவிட்டது. தந்தை ஓரளவு தனக்குச் சாதகமாக இருப்பார் என்பதை அவருடைய மனப் போக்கிலிருந்து அவள் உணர்ந்து கொண்டிருந்தாள். ஆனால் அத்தை ஒரு போதும் தன் போக்குக்கு விட்டுக் கொடுத்துவிட மாட்டாள். இனி வீட்டில் தினசரி தகராறு ஏதாவது ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். அதனால் ஒருகால் தந்தை தனக்குச் சாதகமாக இருப்பது கூடப் பாதிக்கப் பட்டாலும் படலாம். தவிர, புஷ்பவன மாமாவும், மரகத அத்தையும் சும்மா இருந்துவிடுவார்களா? அவர்கள் தன்னையும், தன் தந்தையையும் நேரடியாகவே தூற்றுவார்கள். தான் வேண்டுமானால், அவர்களுடைய தூற்றலைச் சட்டை செய்யாது இருந்து விடலாம். ஆனால் தன் தந்தையின் மனம் அப்போது எப்படி மாறுமோ, யார் கண்டார்கள்? யார் வருந்தினாலும், யார் முரண்டினாலும், யார் கதறினாலும், தன் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டுவிட முடியும்; ஆயினும் அப்பாவின் முகம் வாடக் கண்டால் அதைத் தன்னால் சகிக்க முடியாது என்று அவளுக்குத் தோன்றியது. இதற்கெல்லாம் ஒரே வழி, சுந்தரத்தைப்போல் தானும் வீட்டைத் துறந்து விடுவதுதான்.

அப்பொழுது தன் தந்தை, "நான் என்ன செய்வது? எங்கே நான் அவள் போக்கில் குறுக்கிட்டு விடுவேனோ என்று இங்கே யாரும் எதுவும் சொல்லுமுன், அவளாகவே வீட்டை விட்டுப் போய்விட்டாள். அவ்வளவு தூரத்துக்குத் துணிந்துவிட்டவளிடம் இனி நான் என்ன பேசி என்ன பயன்?" என்று மிக எளிதாகத்தப்பித்துக்கொண்டுவிடலாம். இப்படியெல்லாம் திர ஆலோசனை செய்த பிறகு, உடனடியாக, எதிர்பார்க்கும் இந்த அசந்தர்ப்பங்கள் எதுவும் தலை காட்டுவதற்கு முன், தானாகவே அப்பாவிடம் போய், "அப்பா! சுந்தர அத்தான் வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு என் ஆஸ்பத்திரியில் தஞ்சம் புகுந்துவிட்டார். தஞ்சம் புகுந்திருப்பவரை விரட்டி அடிக்க என்னால் முடியாது. இதனால் ஏற்படும் அபவாதங்களையோ, இன்னல்களையோ நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆனால் இதன் காரணமாக ஊரிலே உங்களுக்கு அவப்பெயர் ஏற்படக் கூடாது. ஆதலால் நானும் உங்கள் ஆதரவிலிருந்து விலகி, ஆஸ்பத்திரியிலேயே தங்கி விடுவது என்று நிச்சயித்து விட்டேன்" என்று சொல்லிவிடலாமென்றுதான் வீணா அப்பொழுது



வீட்டுக்கு வந்தாள். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக அவள் வருமுன்பே எதிர்பார்த்த அபவாதங்கள் அனைத்தும் அவள் வீடு தேடி வந்து விட்டன.

ஆயினும் 'எதிர்பார்த்த அபவாதங்கள்தாம் வந்துவிட்டனவே; இனி நாம் வீட்டை விட்டுப் போவானேன்?' என்று அவள் அந்த எண்ணத்தைக் கைவிட்டு விடாமல் செய்துவிட்டன, புஷ்பவனத்தின் பயங்கரமான பயமுறுத்தலும், தைலம்மாளின் வெளியேற்ற முடிவும். புஷ்பவன மாமா கூறியது வெறும் பயமுறுத்தல் சொற்கள்தாம்; அவ்வளவு பயங்கரமாகத் தங்களிடம் பழி தீர்த்துக் கொள்ள மனமும் வராது; துணிவும் ஏற்படாது என்பது வீணாவுக்குத் தெரியும். ஆனால் அவள் வீட்டில் தங்கி விட்டால் மட்டும் இந்த நிலையில் மாறுதல் ஏற்பட்டுவிடப் போகிறதா? அப்பொழுது சிக்கல்கள் இன்னும் அதிகமாகி, தன் தந்தைகூடத் தனக்குச் சாதகமாக இருப்பதாகத்தானே பிறரை நினைக்கச் செய்யும்?

தவிர, தன் அத்தையின் முடிவை, வெறும் பயமுறுத்தலாக எடுத்துக் கொள்ள வீணாவால் முடியவில்லை. 'அவள் பழைமையில் ஊறிப் போனவள். இந்தப் புரட்சிகளை அவளால் எளிதில் ஏற்றுக் கொள்ள முடியாது. தன் மருமகளாக இருந்த ஒருத்தி இம்மாதிரிக் காரியத்தில் ஈடுபடுவதை அவள் ஒருபோதும் சகிக்க மாட்டாள். ஆதலால், தான் வீட்டைத் துறந்தாலுங்கூட அத்தை மானத்துக்கு அஞ்சி வேறு எங்கேயாவது போய்விடக் கூடும்; அப்படிப் போனால், போய்க் கொள்ளட்டும். தன்னால் அதைத் தவிர்க்க முடியாது. தான் இனியுங்கூட அரைக் கிணறு தாண்டும் முயற்சியிலேயே இருந்துகொண்டிருக்கக் கூடாது!' என்று வீணா ஏற்கெனவே முடிவுறுத்தி வைத்திருந்தாள். ஆதலால், இப்பொழுது தைலம்மாள், வீணா அவ்வீட்டில் வாழ்ந்தால், தானும் தன் மகளும் அங்கே வாழ முடியாது என்று மட்டும் கூறியது அவளுக்கு ஒருவிதத்தில் ஆறுதலாகத்தான் இருந்தது. எனவே சட்டென்று அதைப் பிடித்துக் கொண்டு அதற்காகத் தான் வீட்டைத் துறப்பது போல் துறந்து விட்டாள்.

வீணா இப்படி வீட்டைத் துறந்ததால் மற்றவர்களிடம் எத்தகைய எதிரொலி எழுந்தது என்பதை இப்பொழுது பார்க்கலாம். சச்சிதானந்தத்தைப் பொருத்த வரையில் அவர் உள்ளூற மகிழ்ச்சியே அடைந்தார். எங்கே வீணா, தனக்காகப் பின்வாங்கிச் சுந்தரத்தை வீட்டுக்கு அனுப்பிவிட்டு, நமக்கு இந்தத் தனிமை வாழ்வுதான் கொடுத்து வைத்தது என்று இருந்துவிடுவாளோ என அஞ்சிக்கொண்டேதான் அவர் அவளிடம் தமது கோரிக்கையை வெளியிட்டார். அதைக் கூட அவர் வற்புறுத்திக் கூறவில்லை. ஏதோ சாதாரணமாகப் புத்திமதி சொல்வதுபோலவே சொன்னார். ஆதலால் அதை வீணா ஏற்றுக் கொள்ளாததில் அவருக்கு மகிழ்ச்சியே. அவர் வரையில் மகள் எங்கே வாழ்ந்தாலும் சரி, சமூகத்தால் வஞ்சிக்கப்பட்ட வாழ்வைத் திரும்பப்பெற்று வாழ வேண்டும் என்பதுதா



நோக்கம். புஷ்பவனத்தின் தீவிரமான முடிவைக் கண்டு அவர் சிறிது மனம் கலங்கியதுண்டு. ஆனால் வீணா அதை எடுத்தெறிந்து பேசி, அவர் ஏறுமாறான நடவடிக்கை ஏதேனும் எடுத்தால் போலீசின் உதவியை நாடுவதாக எதிர்ப் பயமுறுத்தல் விட்டதும், அந்தக் கலக்கம் அவரை விட்டுப் பறந்தோடி விட்டது. ஏன், வீணாவும் சுந்தரமும் தன் கண் முன்னே இவ்வூரில்தான் வாழ வேண்டும் என்பதுகூட அவர் விருப்பமன்று; எங்கே வாழ்ந்தாலும் அவர்கள் இன்னலின்றி, சமூகத்தின் ஏசலின்றி வாழ வேண்டும் என்பதுதான் அவர் பிரார்த்தனை.

புஷ்பவனமோ வீணாவின் தீவிரத்தைக் கண்டதும் அயர்ந்து போய் விட்டார்.

'சே! ஒரு பெண் பிள்ளையின் பேச்சையும் ஓர் அரைப் பைத்தியத்தின் பேச்சையும் கேட்டுக் கொண்டு நமது வீம்பையெல்லாம் மறந்து இங்கே வந்து இத்தனை கூத்தடித்து விட்டோமே!' என்று அவர் மனம் வருந்தினார். அவருக்குச் சட்டமும் தெரியாது; போலீசும் தெரியாது. ஆனால் அந்த இரண்டுக்கும் உலகத்து மக்களெல்லாம் அடிமை என்பது மட்டும் தெரியும். அவை இவர்கள் பங்கில் இருந்தால் அவர் செய்யக் கூடியது ஒன்றுமே இல்லை. ஏன்? சொத்துக்களைக்கூட மகனுக்கு இல்லையென்று சொல்ல அவருக்கு உரிமை கிடையாது. அவை பூர்வீகமாக வந்தவையே யன்றி அவருடைய சுய சம்பாத்தியம் அல்லவே. அவர் அப்பொழுதே, அங்கேயே, தமது தோல்வியை ஒப்புக்கொள்ளத் தயாராக இருந்தார். ஆயினும் தன்மானம் குறுக்கிட்டது. ஏற்கெனவே ஒரு பெண் பிள்ளையின் முன் தமது வீம்பை அடகு வைத்து விட்டு இங்கே வந்து அவமானப்பட்டது போதும்; இன்னும் இந்தத் தைலம்மாள் முன்னும் தமது விருப்பு மண் கவ்வி விட்டதைக் காட்டிக் கொள்ள வேண்டாம் என்று அவர் நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு வீட்டை நோக்கிக் கிளம்பி விட்டார்.

ஆனால் சச்சிதானந்தம் அவரைப் பின் தொடர்ந்து வந்து, "என்னை மன்னிச்சுக்கிடுங்க, தம்பி! இப்படி ஏதானும் ஏற்படுமென்றுதான் நான் விணுகிட்டே இந்தப் பேச்சையே எடுக்க மாட்டேன்னேன். நீங்கள் கேட்கலே. சொன்னேன். அவள் என்னைப் பேசவே விடாமல் நம் எல்லார் வாயையும் ஒரு சொல்லிலே அடக்கிட்டுப் போயிட்டாள். என்னைத் தவறாக நினைச்சுக்கிடாதீங்க, தம்பி!" என்று சமாதான வார்த்தைகள் சொன்னார்.

புஷ்பவனத்துக்கு உள்ளூற வேறொரு விசாரம் உதைத்துக் கொண்டிருந்தது. இவர்கள் செயலால் ஊரில் தமக்கு ஏற்படப் போகும் அவமானம் ஒருபுறம் இருக்க, தமது பயமுறுத்தலை விணு ஒரு கால் உண்மையென நம்பி, தம் வீட்டு வாசலில் ஒரு போலீஸ் ஜவானைக் காவல் போட்டு, அதன் மூலம் வேறு ஊரார் தம்மைப் பார்த்து நகைக்கச் செய்து விடுவானோ என அவர் அஞ்சினார்.

ஆதலால் அவர் திண்ணைக்கு வந்ததும், நின்று, "ம்...... இனிமேல் நீங்க என்ன செய்ய இருக்கு; நான் என்ன செய்ய இருக்கு. காலம் போற போக்குக்கு நாம் ஒத்துப்போய்த்தான் ஆகணும். நான் கோபமாப் பேசிட்டேன், அத்தான்! அது ஒன்னையும் நீங்க மனசிலே வைச்சுக்கிடாதீங்க. அசட்டுத்தனமா, கொலை இல்லேன்னு கோபத்திலே உளறிட்டேன். விணு, அதை நிசமின்னு நினைச்சுக்கிட்டிருந்தால், அவ்வளவு தூரத்துக்குப் போக எனக்குப் பைத்தியம் புடிச்சடலே; சும்மா ஒரு சொல்லுக்குச் சொன்னேன்னு சொல்லுங்க. அதுக்காக அவன் போலீஸ்காரனை வேறே என் வீட்டிலே நிக்க வைச்சு மானத்தை வாங்கிப் போடப் போறான்" என்று கூறி விட்டு விடைபெற்றுக் கொண்டார்.

'சமூகமாவது! நியதியாவது! சட்டம், போலீஸ் என்ற இரு சொற்களின் முன் அவை சிட்டாகப் பறந்து விடாவா? பயந்து சாகிறவர்களிடம் வேண்டுமானால் இந்தச் சமூகமும், அதன் பிரதிநிதிகள் என்று மார்தட்டிக் கொள்ளுபவர்களும் சண்டப் பிரசண்டம் பண்ணலாம். மறைமுகமாக வேண்டுமானால் இடையூறுகள் விளைவிக்கலாம். ஆனால் அவை எவையேனும் வெளிப்பட்டுச் சம்பந்தப்பட்டவர்கள் அதற்கான சட்ட நடவடிக்கைகளை மேற்கொண்டால் அந்தச் சமூகம் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து கொள்ள வேண்டியதுதான். ஏனோ, இதை நமது வாழ்விழந்த சகோதரிகள் உணரவில்லை! அல்லது உணர்ந்துதான் பயந்தாங்கொள்ளிகளாக இன்னல்களை அநுபவித்து வருகிறார்களா? அப்படி இருந்தால், அவர்கள் சமூகத்தால் நசுக்கப்பட்டுச் சாக வேண்டியவர்கள் தாம்!' இத்தகைய நினைவுகள்தாம் புலியாக வந்த புஷ்பவனம் பசுவாகத் திரும்பியதைக் கண்டபோது சச்சிதானந்தத்துக்கு ஏற்பட்டது.

இவர்கள் விஷயம் இப்படி ஆயிற்று? இனி தைலம்மாளைப் பார்ப்போம். அவளுக்கும் விணு இப்படிப் பிய்த்துக் கொண்டதில் உள்ளூற மகிழ்ச்சியே! அவளுக்குப் பிறந்தது முதலே தன்னலம் ஒன்றுதான் குறிக்கோள். மகள் சுந்தரத்தைக் கணவனாக அடைய ஆசைப்படுகிறாள். அந்தப் பையன் கிடைத்தால் நல்லதுதான் என்பதற்காகவே அவள் அவனையும் விணுவையும் பிரிக்கப் பாடுபட்டாள். அது எப்பொழுது கைக்கு மீறிய காரியமாகி விட்டதோ, அப்பொழுதே அவள் சுந்தரத்தை ஒதுக்கி விட்டாள். தான் ஒரு திட்டம் போட்டுக் கொடுத்துத் தானு வதியை அதை நிறைவேற்ற அனுப்பி, அது தனக்குப் பாதகமாக நிறைவேறி விட்ட உடனே அவள் அந்தத் திட்டத்தைக் கைவிட்டு விட்டாள். இப்பொழுது அவள் கவலையெல்லாம் விணுவின் துணிகரச் செயல் காரணமாகத் தன் மகளுக்கு மணமகன் கிட்டாமல் போய்விடக் கூடாதே என்பதுதான். அதற்காகவே அவள் தனக்கு ஓரே புகலிடமாக விளங்

கிய இந்த வீட்டை 'விட்டுப் போய்விட முன் வந்தாள். நிச்சயமாகப் போயும் இருப்பாள். ஏனென்றால் அப்படி வெளி யேறி விட்டால், அவளுக்கும், இந்தச் சம்பவத்துக்கும் சம்பந்தம் இல்லையென்று ஆகிவிடுமல்லவா ? ஆனால் அப்படி வெளி யேறினாலும் தன் தம்பியை நம்பித்தான் அவள் வாழ்க்கை நடத்த நிச்சயித்திருந் தாள். சில நாட்கள் கோபம் கொண் டவள்போல் பக்கத்தில் ஏதாவது ஓர் ஊரில் வாசம் செய்து விட்டுப் பிறகு, காலம் தன் கோபத்தைச் சமனம் செய்து விட்டதுபோல் தம்பியிடம் திரும்பி வந்து விடவோ, அல்லது ரகசியமாக அவனிடமிருந்து பண உதவி பெறவோ வேண்டும் என்பதுதான் அவள் எண்ணம். ஆனால் இப்பொழுது வீணாவே வெளி யேறி விட்டாள். 'இனிக் கவலையில்லை. இப்பொழுது ஊரில் யாராவது ஏதாவது பேசினால், "நாங்கள் என்ன செய்வது ? தடுத்துப் பார்த்தோம்; பயனில்லை. சரி, வீட்டை விட்டுப் போய் என்ன அநி யாயம் வேண்டுமானாலும் பண்ணிக் கொண்டிரு என்று விரட்டி விட்டோம்" என்று மிக எளிதாகக் கூறி விடலாம் இல்லையா ? தவிர, தம்பி வேறு, இதன் காரணமாக மாலாவின் கலியாணம் நின்று போகாது ; அவள் திருமணத்தை நிறைவேற்றி வைப்பது என் பொறுப்பு என்று வாக்களித்திருக்கிறான். இனிமேல் மகளின் திருமண விஷயத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டிருக்கக் கூடாது. தம்பிக்குத் தூண்டுகோல் போட்டு, சுந்தரமும் வீணாவும் திருமணப் பந்தத் தில் ஈடுபடுமுன்பே அவள் திருமணத்தை நிகழ்த்திவிட வேண்டும்' என்று இவ் வாறு ஓடின அவள் சிந்தனைகள்.







ஆதலால் இதுவரை கூறிய மூன்று பேர்களும் வெளியே இந்தச் சம்பவத் தால் பாதிக்கப்பட்டவர்கள்போல் காட் டிக் கொண்டாலும், உள்ளூற அதிகமாக வேதனைப்பட்டு விடவில்லை. உண்மையில் வேதனைப்பட்டவர்கள் வேறு மூவர் இருந்தனர். அவர்களில் ஒருத்தி மாலா.

மாலாவை நாம் நெடுங் காலமாக மறந்து விட்டோம். சுந்தரத்தையன்றிப் பிறிதெவரையும் தான் மனத்தால்கூட நினைக்க முடியாது என்று தைலம்மாளி டம் கூறிவிட்ட பிறகு அவளுடைய மன நிலையில் எவ்வித மாறுதலும் ஏற்பட்டு விடவில்லை. தனது இளம் உள்ளத்திலே அவ்வளவு உறுதியாகச் சுந்தரத்தைப் பிரதிஷ்டை செய்திருந்தாள் அவள். அவ ளுக்கு அவன் ஒருவன்தான் தெய்வம். அந்தத் தெய்வச் சிலையை அவளுடைய மனத்திலிருந்து அகற்றவும் முடியாது ; வேறொரு சிலையைப் பிரதிஷ்டை செய்ய வும் முடியாது. அவள் உறுதியாக இருந் தாள். மணந்து கொண்டால் சுந்த ரத்தை மணந்து கொள்ளுவது; இல்லா விட்டால் கன்னியாகவே இருந்து உயிரை விடுவது. அதற்காக அநியாய வழிகளில் அவனை வீணாவிடமிருந்து பிரித்து, கட்டா யமாகத் தன்னோடு இணைப்பதையும் அவள் விரும்பவில்லை. ஆயினும், தொடர்ந்து நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சிகள் தன்னிடமிருந்து சுந்தரத்தை இன்னும் அதிகமாகப் பிரித்து வீணா வுடன் நெருக்கி வந்து கொண்டிருந்த தைக் காணும்போது அவள் உள்ளம் சொல்லொண்ணா ஏமாற்றமும் வேதனை யும் கொள்ளத்தான் செய்தது.

உண்மையில் நமது அநுதாபத்துக்குரி யவள் மாலா. வெகுளித்தனமாக, தன் அக்காளின் சார்பில், தன்னை எந்நிலையி லும் விட்டுப் பிரியாத காதலரிடம் பேசு

கிறேன் என்று அவள் கூறிய சில சொற்கள், பாவம்! இப்பொழுது அவளுடைய வாழ்வையே அல்லவா அடியோடு பறித்துவிட இருக்கின்றன! சுந்தரத்துக்காக வீணை வீட்டைக்கூடத் துறக்கும் அளவுக்கு வந்துவிட்டாள் என்பதை அறிந்த அன்று அந்தச் சூதுவாது அறியாத பச்சிளங் குழந்தை என்ன எண்ணிக் கொண்டாள், தெரியுமா? "அதுதான் விதியென்றால் அதை மாற்ற யாரால் முடியும்? ஆனால் செந்திவேல் முருகா! அக்காளே அவருக்கு மனைவியாக இருக்கட்டும்; எனக்கு அவரை நாள்தோறும் கண்டு கொண்டிருக்க, அவர்களுக்கு ஒரு வேலைக்காரியாக இருக்கும் பாக்கியத்தை யாவது அருள்புரி!" அந்தப் பச்சை உள்ளத்தில் ஆழப் பதிந்திருந்த காதலின் மேன்மைதான் என்னே!

அடுத்ததாக வேதனையால் வெந்தவள் மரகதத்தம்மாள். பெண் என்ற முறையில் அவளும் நம் அநுதாபத்துக்கு உரியவள்தான். ஒரு குடும்பப் பெண்ணின் வாழ்க்கை தனது மக்களின் சுபிட்சமான நல்வாழ்வைக் காணும்போதுதான் நிறைவெய்துகிறது என்றபோதில், ஒரே ஒரு மகனைப் பெற்று அவனை இப்படி அவல வாழ்வு வாழ விட நேர்ந்தால் எந்தத் தாயுள்ளந்தான் வெந்து போகாது? அவள் கிராமாந்திரத்தில் பிறந்தவள்; அங்கேயே வளர்ந்தவள்; அங்கேயே வாழ்க்கைப்பட்டுத் தனது வாழ்நாளில் பெரும் பகுதியைச் செலவிட்டிருப்பவள். ஆதலால் கிராமாந்திரத்துப் பழக்கவழக்கங்களும், அங்குள்ள நடைமுறைகளும் அவளை அடிமைப்படுத்தி யிருந்ததில் வியப்பில்லை. எனவே, "உன் மகன் யாரையாவது மணந்துகொண்டு நல் வாழ்வுதானே வாழ வேண்டும்? அப்படி வாழத்தானே போகிறான்" என்ற சமாதானத்துக்கு அவள் மசியக்கூடிய நிலையில் இல்லை. எப்பொழுது அவன் ஊர் வழக்கத்துக்கு மாறான முறையில் வாழ்வை அமைத்துக் கொள்ளுகிறானோ, அப்பொழுது முதல் அவள் அவனை இழந்துவிட்டதாகத்தான் கருத முடியும். அவ்வாழ்வில் அவன் எவ்வளவு மேம்பாடு பெற்று விளங்கினாலும், அது ஒன்றும் கிராமப் பண்பில் ஊறி வளர்ந்த அந்தத் தாயுள்ளத்தின் வேதனையைக் குறைத்துவிட முடியாது. எனவே அவள் வரையில் இது ஒரு மகத்தான வாழ்க்கைக் குறைதான். யாராலும், எதாலும் ஈடு செய்ய முடியாத படுநஷ்டந்தான்.

அடுத்ததாக வேதனையால் வருந்தியவன் நமது திருவாளர் தாணுவதிப் பிள்ளை. வீணையை அவனால் எந்த நிலையிலும், எக்காலத்திலும் மறக்க முடியாது. அவளை எந்தவிதத்திலும் அவன் அடைந்தே ஆக வேண்டும். அதற்காக அவன் போட்ட திட்டங்கள்தாம் பயனளிக்கவில்லையென்றால், அநுபவம் நிறைந்தவள் என்று அவன் கருதியிருந்த தைலம்மாள் போட்டுக் கொடுத்த திட்டமும் அல்லவா படு தோல்வியுற்று விட்டது! இப்படி ஒரு விபரீதம் நிகழும் என்று அவன் கனவில் கூடக் கருதியிருக்கவில்லை. அவன் ஒவ்வொரு முயற்சியாகச் செய்துகொண்டே வர, அவை அனைத்தும் மேலும் மேலும் விபரீதத்தையேயல்லவா ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன? புஷ்பவனத்தைத் தூண்டி விட்டுச் சச்சிதானந்தத்திடம் போய்ச் சத்தமிடச் செய்தால், நிச்சயமாகச் சச்சிதானந்தம் அதனால் ரோசம் அடைவார். அந்த ரோசம் அவரை மகளிடம் கடுமையாக நடந்து கொள்ளச் செய்யும். தனக்கு ஆதரவாக இருந்து வரும் ஒரே நபரான தந்தையும் தன் செயலை ஆமோதிக்கவில்லையென்றால், வீணை அதைக் கைவிட்டு விடுவாள். சுந்தரத்தை வீட்டுக்குத் திருப்பி அனுப்பி விட்டு அவனை அடியோடு மறந்தும் விடுவாள். பிறகு தைலம்மாளின் உதவியுடன் நாம் அவளைக் கைப்பிடித்து விடலாம் என்று அவன் எண்ணியிருக்க, இப்பொழுது என்னடா வென்றால், வீணையே வீட்டைத் துறந்துவிட்டுச் சுந்தரத்தோடு ஆஸ்பத்திரியில் வசிக்க வந்து விட்டாளே! அப்படியானால் இனி அவர்களைப் பிரிக்கவே முடியாதா?

இப்படியெல்லாம் வேதனைப்பட்டான் தாணுவதி. ஆனால் மற்றவர்களின் வேதனைக்கும் தாணுவதியின் வேதனைக்கும் ஒரு மாறுபாடு இருந்தது. மாலாவும் மரகதத்தம்மாளும் இனித் தெய்வந்தான் தங்கள் வேதனை தீர வகை செய்ய வேண்டும் என்று நினைத்தார்கள். ஆனால் தாணுவதி தெய்வத்தை நம்பவில்லை; அவன் தனது செல்வாக்கையே நம்பினான்; தனது திறமையையே நம்பினான். மேலே என்ன செய்து அவர்களைப் பிரிக்கலாம் என்பதைத் தீவிரமாக ஆலோசித்தான். அந்த ஆலோசனை சட்டென்று வழி காட்டக் கூடியதாக இல்லை. அது ஒரு முடிவையும் காட்டாமல் பல நாட்கள் அவனை இழுத்தடித்தது. கிட்டத்தட்ட ஒரு மாத காலம் ஓடி விட்டது.

அந்த ஒரு மாத காலத்தில், வீணையும் சுந்தரமும் ஈடுபட்டிருந்த புரட்சிச்செயல் ஊரிலேயும், அவர்களைச் சார்ந்தவர்களிடையேயும் எத்தகைய கிளர்ச்சியை உண்டுபண்ணுகிறது என்பதை அவன் கூர்மையாகக் கவனித்து வந்தான். ஆனால், அந்த விஷயத்திலும் அவனுக்குப் பெருத்த ஏமாற்றமே ஏற்பட்டது. சச்சி



ஸ்ரீ மருதைப் பிள்ளை டாக்டர் யூ. கிருஷ்ணராவிடமிருந்து மில் தொழிலாளர் சங்கத்தின் பரிசுப் பொருளைப் பெறுகிறார்

# நிர்வாகிகள் - தொழிலாளர்கள் உறவிலே ஓர் அபூர்வ நிகழ்ச்சி

தென்னிந்தியாவின் சிறந்த மாவு மில்லான செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்டின் டைரக்டர் ஸ்ரீ பி. மருதைப் பிள்ளை இங்கிலாந்திலும், ஐரோப்பாவிலும் வியாபார சம்பந்தமாக வெற்றிகரமாகச் சுற்றுப் பிரயாணம் செய்து திரும்பியதைப் பாராட்டுவதற்காக அக்டோபர் 29-ந் தேதி செஞ்சுரி பிளவர் மில்ஸ் ஊழியர்கள், தொழிலாளர் நலச் சங்கம் சார்பில், பெரம்பூர் மில்லில் ஒரு விருந்து நடந்தது. மதராஸ் சட்டசபை சபாநாயகர் டாக்டர் யூ. கிருஷ்ண ராவ் தலைமை வகித்து, மகிழ்ச்சிகரமான இச்சந்தர்ப்பத்தின் அடையாளமாகத் தொழிலாளர் சங்க சார்பில் வழங்கப்பட்ட பரிசை ஸ்ரீ மருதைப் பிள்ளையிடம் அளித்தார்.

அப் பரிசுப் பொருள் செஞ்சுரி பிளவர் மில்ஸ் தயாரிப்புகளின் வர்த்தகச் சின்னமான சூரியனை முகப்பாகவும், மில் கட்டிடத்தைப் பின்னணியாகவும் கொண்டு வெள்ளியில் அழகான வேலைப்பாடுடன் அமைக்கப்பட்டிருந்தது.

ஸ்ரீ மருதைப் பிள்ளை தமது பிரயாண அனுபவங்களையும், மேல்நாட்டுத் தொழிலாளர் கடமையுணர்வு, நிர்வாகிகள் தொழிலாளரிடையே நிலவும் நல்லுணர்வுபற்றி யெல்லாம் மிகவும் விரிவாகப் பேசினார்.

டாக்டர் கிருஷ்ண ராவ் தமது தலைமையுரையில் செஞ்சுரி பிளவர் மில்லின் சிறந்த நிர்வாகம், தயாரிப்புகளின் உயர்ந்த தன்மை, அவை அடைந்துள்ள புகழ்பற்றி யெல்லாம் குறிப்பிட்டதுடன் தொழிலாளருக்கும், நிர்வாகத்தினருக்குமிடையே நிலவும் மனப்பூர்வமான நல்லுறவைக் கண்டு தாம் மகிழ்ச்சி அடைவதாகவும் கூறினார். மில் தொழிலாளர் தங்கள் நலனுக்காக ஒரு சங்கம் அமைத்து, தங்களில் ஒருவரையே அதற்குத் தலைவராக அமைத்திருப்பதற்காகப் பாராட்டினார்.

தானந்தமும் புஷ்பவனமும் கிணற்றில் எறிந்த கல்லாக இருந்தார்கள். அவர்கள் மனப்போக்கை அளவிடுவதற்காக அவன் இரண்டொரு தடவைகள் தெற்குத் தெருவுக்கும் நடுத் தெருவுக்கும் போயிருந்தான். "தம்பி! நீங்க சொன்னபடி நான் வஞ்சகமில்லாமல் நடந்துட்டேன். அதன் பலன் இன்னும் மோசமாகப் போயிடிச்சு. சட்டம் பேசிட்டா, தம்பி, அந்தப் பொண்ணு. இனிமே அந்தச் செந்திவேல் முருகனைப் பார்த்து ஒரு வழி விட்டாத்தான் உண்டு" என்று கூறிவிட்டார் புஷ்பவனம்.

சச்சிதானந்தமும் ஏறக்குறைய இப்படியேதான் பேசினர் - "மேஜரான வங்க; சட்டம் அவங்க பங்கிலேதான் இருக்கு. நாம் இனிமேல் ஒண்ணும் செய்யறத்துக்கு இல்லே!"

"சட்டம் கிடக்குதுங்க, கழுதை! உங்க முகத்துக்காக நான் பொறுத்துக்கிடுவேன்; ஆனா ஊர்ச்சனங்க பொறுப்பாங்களா? அவங்களும் இவங்களை மாதிரி துணிஞ்சுட்டாங்கன்னா என்ன செய்வாங்கன்னு சொல்ல முடியாதில்லேயா? ஏங்க, சொல்லுங்களேன்; நான் சொல்லுறது நிசந்தானே?" என்று அவரை மடக்கி அச்சமூட்டப் பார்த்தான் தாணுவதி.

ஆனால் சச்சிதானந்தம், "அது என்னவோ தம்பி! ஊருக்குத் தலைவர் நீங்கதான். அதனாலே ஊர்க்காரங்களை நீங்கதான் சமாதானப்படுத்தணும்" என்று பொறுப்பை அவன் தலைமீதே சுமத்தி விட்டார்.

தாணுவதி ஊர்க்காரர்களின் நாடியையும் சிறிது பிடித்துப் பார்த்தான். அவர்கள் ஒருவரும் இச்செயலை விரும்பவில்லைதான். ஆயினும் சட்டமும் போலீசும் அவர்கள் வாயையும் மூடி வைத்திருந்தன. வெளியே ஒவ்வொருவரும் குமுறிக் குமுறிப் பேசினர். "யாராவது நாலு பேர்கள் இந்த அநியாயத்துக்குப் பதில் செய்யணும்" என்று எல்லாரும் கூறினர். ஆனால் அந்த நாலுபேர்களில் ஒருவராக இருக்க ஒருவரும் தயாராக இல்லை. ஏன், அந்த அநியாயத்தைச் செய்து விட்ட வீணுவின் ஆஸ்பத்திரியை யாவது யாராவது புறக்கணித்தார்களா என்றால் அதுகூட இல்லை. அங்கே வழக்கப்படி நோயாளிகள் வந்து சிகிச்சை பெற்றுக் கொண்டுதான் இருந்தனர்.

தனது தெருவிலே, தனது வீட்டுக்குச் சில வீடுகளுக்கு அப்பால், தான் ஆள வேண்டிய அழகி வேறொருவனுடன் கும்மாளமிட்டுக் கொண்டிருந்ததைக் காணக் காணத் தாணுவதியின் நெஞ்சு கொதித்தது. இல்லை, அவனால் இனி இதைப் பொறுக்க முடியாது. அவன் அவளை எப்படியேனும் அடைந்தே ஆக வேண்டும். வீணுவை மனைவியாக்கிக் கொள்ளாத இந்தக் கட்டை இருந்தும் ஒன்றுதான்; செத்தும் ஒன்றுதான்.

ஒரு மாதத்துக்குப் பிறகு தாணுவதி ஒரு தீவிரமான முடிவுக்கு வந்து விட்டான். சுந்தரத்தை ஒரேயடியாக ஒழித்துக் கட்டிவிட வேண்டும்! அதற்கு இதுதான் சரியான சந்தர்ப்பம். ஊர் குமுறிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது சுந்தரத்துக்கோ, வீணுவுக்கோ எது நேர்ந்தாலும், அந்தப் பழி ஊர்க்காரர்கள் மீதுதான் விழுமேயன்றித் தன் ஒருவனை மட்டும் யாரும் சந்தேகிக்க மாட்டார்கள். ஆனால் அதற்கு அவன் தொடைநடுங்கிகளான இந்த ஊர்க்காரர்களை நம்பிப் பயனில்லை. சிறைவாசத்துக்கு அஞ்சாத அவனுடைய கையாட்களான செந்திவேலு கோஷ்டியினர்தான் இதற்குச் சரியான ஆட்கள். திட்டம் உருவானதும் தாணுவதி உடனே செயல்பட்டான். வண்டிகட்டிக்கொண்டு புங்கனூற்றுக் காலனிக்குச் சென்றான்.

ஆஸ்பத்திரிவீட்டில் வீணுவும், சுந்தரமும் சகஜமான வாழ்வு வாழ்ந்து வந்தனர். ஒரு புரட்சியை ஏற்படுத்திவிட்ட பெருமையோ, பெற்றோரைப் பிரிந்த துயரமோ, எதுவும் அவர்கள் வதனத்தில் தென்படவில்லை. இன்ப-துன்பங்களை அறியாது கடமையை ஆற்றும் கர்ம வீரர்களைப்போல் அவர்கள் துலங்கினர். மேல் நடவடிக்கைகளைப் பற்றி அவர்கள் ஏற்கெனவே முடிவுறுத்தி வைத்திருந்தனர். தங்கள் பிரிவால் அதிர்ச்சி அடைந்திருக்கும் பெற்றோர்களுக்கு உடனே இன்னோர் அதிர்ச்சியும் அளிக்கக் கூடாது. ஓரிரு மாதங்கள் இந்நிலையில் சகோதர-சகோதரியாக இருந்து விட்டுப் பிறகு பதிவுத் திருமணம் செய்து கொள்ளுவது. பின்னர் ஊர் ஊராகச் சென்று பிரசாரப் பணியில் ஈடுபடுவது என்பது அவர்கள் செய்திருந்த முடிவு.

சுந்தரத்துக்கு ஆஸ்பத்திரியில் ஒரு வேலையும் இல்லை. அவன் விருப்பப்படி அவனைத் தனது கம்பவுண்டராக வைத்துக் கொண்டு வேலை வாங்க வீணுவின் மனம் இடம் கொடுக்கவில்லை. தவிர, கம்பவுண்டர் தொழில் ஒன்றும் ஓர் இன்ஜினீயர் தொழில் அல்லவே. காலையில் வேலைக்காரன் இருவருக்கும் காப்பி தயாரித்துக் கொடுத்து விடுவான். வீணுவின் ஆஸ்பத்திரி வேலைகள் பதினொரு மணிக்கு முடியும். அதற்குள் வேலைக்காரன் ரயில்வே ஸ்டேஷன் ஹோட்டலிலிருந்து எடுப்புச் சாப்பாடு கொண்டு வந்து விடுவான். இருவரும்

சாப்பிட்டுவிட்டு மாலை வரையில் ஏதாவது படித்துக் கொண்டிருப்பார்கள்; அல்லது பேசிக் கொண்டிருப்பார்கள். பிற்பகல் டிபனும் ஹோட்டலிலிருந்தே வந்துவிடும். பிறகு மாலை ஆஸ்பத்திரி வேலையில் வீணா ஈடுபடுவாள். சுந்தரம் திட்டங்கள் ஏதாவது போட்டுக் கொண்டிருப்பான். இரவு எட்டு மணி அளவில் ஆஸ்பத்திரி வேலைகளை முடித்துக் கொண்ட பிறகு, வீணாவும், அவனும் காலார ஸ்டேஷன் வரையில் நடந்து சென்று, அப்படியே ஹோட்டலில் இரவு உணவை முடித்துக் கொண்டு திரும்புவார்கள். இதுதான் அவர்கள் தினசரி நடைமுறை.

இந்த நடைமுறையில் ஒருநாள் ஒரு சிறிது கோளாறு ஏற்பட்டது. அன்று வீணாவுக்கு உடல்நிலை சரியாக இல்லை. வேலைக்காரனும் மட்டம் போட்டு விட்டான். ஆதலால் பகலில் சுந்தரமே ஹோட்டலுக்குப் போய், தான் சாப்பிட்டுவிட்டு, வீணாவுக்குச் சிறிது பத்திய உணவு தயாரிக்கச் செய்து வாங்கி வந்தான். இரவும் அவ்வாறே அவன் எட்டரை மணி சுமாருக்குக் கையில் 'செட்'டுடன் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஊருக்கு வரும் பாதையில் நடந்து வந்து கொண்டிருந்தான்.

அப்பொழுது முன்னிருட்டுக் காலம். அதுவோ மரங்களடர்ந்தசாலை. வழியெல்லாம் ஒரே கும்மிருட்டு. இருட்டி விட்டால் அந்த ரஸ்தாவில் போக்குவரத்து அடங்கிவிடும். சுந்தரத்துக்குத் தனி வழி நடந்தோ, இம்மாதிரிச் சோற்று மூட்டை தூக்கியோ பழக்கமில்லை. ஆதலால் உள்ளூற ஒருவிதப் பயமும் சலிப்பும் ஏற்பட்டன. கை வேறு 'செட்'டின் பளுவால் கனத்தது. ஸ்டேஷனுக்கு வெளியே சில வாடகை வண்டிகள் நின்றன. அவற்றில் ஒன்றை ஏற்பாடு செய்து கொண்டு ஏறி வராமல் போனோமே என்று அவன் வருந்திகொண் டிருக்கையிலேயே பின்னால் வண்டி ஒன்று வேகமாக வந்து கொண்டிருப்பதன் அறிகுறியாக மாடுகளின் குளம்போசையும், சக்கரங்களின் கட-கடவென்ற சத்தமும் கேட்டன. இருட்டில் வண்டி எவ்வளவு தூரத்தில் வந்து கொண்டிருந்தது என்பதைக் காண முடியாவிட்டாலும், சத்தத்திலிருந்து அது மிக அருகில் வந்து விட்டதாக உணர்ந்த சுந்தரம் நின்று விட்டான். அது காலிவண்டியானால் நிறுத்தி, அதிலே ஊருக்குச் சென்று விடலாம் என்று அவன் நினைத்தான்.

அதற்குள் அவன் எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. சாலை ஓரத்து மரத்தின் மறைவிலிருந்து நாலைந்து பேர்கள் கையில் தடிகளுடன் அவனை நோக்கி வந்தனர். சுந்தரம் என்ன-ஏது என்று கேட்பதற்குள்ளாகவே அவன் மண்டையிலும் உடலிலும் சட-சடவென்று அடிகள் விழுந்தன. சுந்தரத்தின் தற்காப்பு முயற்சிகள் எதுவும் பயன் அளிக்கவில்லை. அவனுடைய அலறல்கள் கண்டத்துக்குள்ளே அமுங்கிப் போயின. உதிரம் கொட்ட அவன் கீழே சாய்ந்து விட்டான். அதே சமயம் பின்னால் வந்து கொண்டிருந்த வண்டி அருகில் வந்து நின்றது. ''ஏய்! யாரடா அது? பாவிகளா, யாரையடா அடிக்கிறீர்கள்?'' என்று வண்டியிலிருந்து ஒருவர் இறங்கி ஓடிவந்தார். குரலிலிருந்து அவர் சச்சிதானந்தமாக இருக்க வேண்டுமென்று தோன்றியது அவனுக்கு. இப்பொழுது தன்னை அடித்துக் கொண்டிருந்தவர்கள், தங்கள் தடிகளை அவர்மீதும், வண்டிக்காரன்மீதும் பிரயோகித்துக் கொண்டிருந்ததை அவன் கண்டான். பிறகு அவனுக்கு நினைவு போய்விட்டது. மனிதன் திட்டங்கள் வகுக்கலாம். ஆனால் அவற்றை நிறைவேற்றுவது இறைவன் கையில் அல்லவா இருக்கிறது! (தொடரும்)

# சோதனைத் திருமணம்

திருமணம் ஆகாத பெண்கள் குமாரிகள். திருமணம் ஆகாத ஆண்கள்......? குமாரர்கள்! இந்த இலக்கணப்படி பார்த்தால் மிஸ்டர் பட்நாகர் குமாரர். அதாவது திருமணம் ஆகாதவர். உலகத்தில் எத்தனையோ பேர் தாங்கள் திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை என்று மேலுக்குச் சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால் உள்ளூறத் திருமணம் செய்துகொள்ள ஆசைப்படுகிறார்கள். ஆனால் மிஸ்டர் பட்நாகரை அந்தக் கோஷ்டியில் சேர்க்க முடியாது. உண்மையாகவே அவர் திருமணம் செய்துகொள்ள விரும்பவில்லை. இதற்குக் காரணம் அவர் 'ஸெண்டிமெண்டல்'—உணர்ச்சி வசப்பட்டவர் என்பது மட்டும் அல்ல; திட்டவட்டமான 'ஸோஷியோ எகானமிக்' அதாவது பரஸ்பரப் பொருளாதாரக் கொள்கை படைத்தவர் என்பதும் ஆகும். திருமணம் செய்துகொள்ள அவர் மறுப்பதற்கு ஆணித்தரமான தர்க்கங்கள் வேறு பெருதவி புரிந்தன.

ஆனால் இதனால் மட்டும் என்ன பயன்? தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் யாருமே மிஸ்டர் பட்நாகருடைய வார்த்தைகளில் பெருத்த நம்பிக்கை வைப்பதில்லை. அவர் மனத்துக்குப் பிடித்த பெண்ணாகக் கிடைக்கவில்லை என்பார் ஒருவர். 'கோர்ட்ஷிப்'புக்கு ஏற்ற தருணம் கிடைக்கவில்லை என்பார் இன்னொருவர். 'நல்ல பறவையாக வலையில் வந்து விழவில்லை' என்பார் மற்றொருவர். இல்லை, இல்லை! இதைக் காட்டிலும் பெரிய காரணமாக ஏதோ இருக்கிறது. ஆழத்தில் அழுந்திக் கிடக்கும் அந்தச் சிதம்பர ரகசியம் என்னவோ என்று சொல்வோரும் குறைவின்றி யிருந்தனர்.

நாளடைவில் சிறுகச் சிறுகத் திருமணப் பேச்சு வலுக்கவே தொடங்கி விட்டது. வழியில், டிராமில், பஸ்ஸில், பூங்காவில், அதாவது கண்ட கண்ட இடங்களில் சந்திக்க நேரும் போது, 'ஏன் நீங்கள் திருமணம் செய்து கொள்ளவில்லை? எனக்குத் தெரிந்து ஒரு நல்ல பெண் இருக்கிறாள். உங்களுக்கு மிகவும் பொருத்தமானவள்!' என்றெல்லாம் பலர் பலவிதமாய்ப் பேசித் திருமணத்தில் கொண்டு வந்து பேச்சை முடிக்கலாயினர். இம்மாதிரி பேச்சுக்களையெல்லாம் கேட்டுக்கேட்டு மிஸ்டர் பட்நாகர் மிகவும் திக்குமுக்காடிப் போய் விட்டார்.

இவற்றிலிருந்து விடுபட மிஸ்டர் பட்நாகர் ஓர் உபாயம் செய்தார். இனி வருபவர்களிடம் எதிர்ப் பேச்சு பேசக் கூடாது. பெண்களைப் பற்றிய புகழ் மொழியைக் கேட்டபின், ஏதாவது ஒரு குற்றம் கண்டுபிடித்துக் குறை கூறித் தட்டிக் கழித்துவிட வேண்டும் என்பதே ஆகும் அது. அதனால் யாராவது திருமணப் பேச்சை எடுத்தால், ''சரி! இப்பொழுது அவசர காரியமாயிருக்கிறேன். அடுத்த மாதம் முதல் ஞாயிற்றுக்கிழமையன்று காலையில் தாங்கள் வாருங்கள். சாவகாசமாகப் பேசுவோம்'' என்பார். எல்லோருக்கும் இதே பதிலைச் சொல்லி வந்ததனால், ஒவ்வொரு மாதமும் முதல் ஞாயிற்றுக்கிழமையில் காலைப்பொழுது திருமணப் பேச்சிலேயே தீர்ந்து வந்தது. ஒருவன் ஒரு பெண்ணை எத்தனைதான் வானளாவ வர்ணிக்கட்டுமே, மிஸ்டர் பட்நாகர் எப்படியோ ஏதாவது ஒரு குறை கண்டுபிடித்து அவனை மடக்கிவிடுவார். பலன், வாய் திறக்க வழியில்லாமல் அவன் தலை குனிந்து விடுவான். அதன் பலனாகத் திருமணப் பேச்சு பேச்சாகவே இருந்ததேயொழிய செயலாகப் பரிணமிக்கவில்லை. மாதத்தில் ஒருநாள் பொழுது வீணாகி வந்தது என்னவோ உண்மைதான். ஆனால் மற்ற முப்பது நாட்கள் ஆனந்தமாகப் பொழுது போய் வந்ததே, போதாதா? அதோடு, திருமணம் செய்து கொள்ளும் ஆசையில்லாமற் போன பொழுதிலும், மாதத்தில் மூன்று நான்கு மணி நேரமாவது திருமணப் பேச்சாகவே கழிந்ததும், ஒருவிதத்தில் இன்பம் தந்ததேயொழியத் துன்பம் தரவில்லை.



இதேபோன்று ஒருநாள் ஞாயிறன்று மிஸ்டர் பட்நாகரின் அலுவலக அறையில் சில தேர்ச்சி பெற்ற தரகர்களும் சில தேர்ச்சிபெறாத தரகர்களும் கூடியிருந்தார்கள். மிஸ்டர் பட்நாகர் பணியாளைக் கூப்பிட்டு எல்லோருக்கும் தேநீர் கொண்டு வருமாறு உத்தரவிட்டார். பாக்கெட்டிலிருந்து சிகரெட்டுகளை எடுத்து எல்லோருக்கும் எதிரே நீட்டினார். தருணம் அறிந்து ஒருவர் துணிந்து மிஸ்டர் பட்நாகருடன் பேசத் தொடங்கினார்.

''இதோ பாருங்கள், மிஸ்டர் பட்நாகர்! அன்று நான் ஒரு பெண்ணைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேனே, அவளுடைய புகைப் படம்தான் இது!''

''மூக்கு சப்பட்டையாயிருக்கிறதே! இம்மாதிரி மங்கோலிய 'டைப்' பெண்ணை எனக்குப் பிடிப்பதில்லை! எனவே, இவள் வேண்டாம்!'' என்றார் மிஸ்டர் பட்நாகர்.

''புகைப்படத்தில் சரியாக உருவம் வரவில்லை. நீங்கள் நேரிலேயே ஒருநாள் பெண்ணைப் பார்க்க வாருங்கள், மிஸ்டர் பட்நாகர்!''

''இதற்குத் தேவை என்ன? புகைப்படத்தைப் பார்த்ததுமேதான் ஒருவாறு புரிந்து விட்டதே!''

''அப்படியானால்......?''

''இனி இதைப் பற்றி அதிகம் வளர்த்த வேண்டாம். மற்றவர்கள் காத்திருக்கிறார்கள். அவர்களோடு பேசவேண்டும்!''

''இன்னொரு பெண்ணும் இருக்கிறாள். அவள் புகைப்படம் தற்பொழுது என் கைவசம் இல்லை. அவள் பாட்னாவில் இருக்கிறாள்!''

''ரொம்ப சரி! அவளைப் பற்றி அடுத்த மாதம் பேசிக் கொள்வோம்!''

இன்னொருவர் புகைப்படம் ஒன்றை எடுத்துக் காட்டி, ''இந்தப் பெண்ணை உங்களுக்குப் பிடிக்கலாம். கொஞ்சம் கவனித்துப் பாருங்கள், முகத்தில் எவ்வளவு சௌஜன்ய பாவமும், குறுகுறுப்பும் தாண்டவமாடுகின்றன!'' என்று கூறினார்.

''ஆனால் உதடுகள் தேவைக்கு மீறிப் பெரிதாகவும் தடிமனாகவும் இருக்கின்றனவே!''

''இல்லை, புகைப்படத்தில் பார்க்க அப்படி இருக்கிறது. நானே நேரில் பெண்ணைப் பார்த்திருக்கிறேன். மிகவும் அழகான உதடுகள், ஆரஞ்சுச் சுளை போல!''

''ஆரஞ்சுச் சுளையோ, பலாச்சுளையோ, எது எப்படியிருந்தாலும் எனக்குப் பிடிக்கவில்லை!''

''அப்போ...''

''உங்கள் கேஸை வருத்தத்துடன் நிராகரிக்க வேண்டியிருக்கிறது!''

''சரி, அப்படியானால் இதைப் பாருங்கள். இன்னொரு புகைப்படம் இது!''

''இன்று பார்ப்பதற்கில்லை. அடுத்த மாதம் வாருங்கள், பார்க்கலாம். மற்றவர்களும் காத்திருக்கிறார்கள், பாருங்கள்! அவர்களைக் கவனிக்க வேண்டாமா நான்?''

''அப்போ சரி, நமஸ்காரம்! அடுத்த மாதமே பார்க்கிறேன்!''

''இந்தப் படத்தைப் பாருங்கள். அழகாயில்லை? உங்களுக்குப் பிடிக்கவில்லை?'' என்றார் மூன்றாமவர்.

மிஸ்டர் பட்நாகர் புகைப் படத்தைப் பார்த்துவிட்டு, ''நன்றாக இருப்பதாகத்தான் தோன்றுகிறது. ஆனால் வயது......!'' என்று கேட்டார்.

''இருபத்தொன்றுதான். இவளது பெற்றோர் இன்னும் குறைவாகவேதான் கூறுகிறார்கள். ஆனால் நான் எதற்காக உங்க

கமல்ஜோஷி



னிடம் பொய் சொல்ல வேண்டும்? இந்தப் பிப்ரவரிக்கு இருபது நிரம்பி இருபத்தோரா வது வயது ஆரம்பமாகிறது!''

''என்ன? இருபத்தோரு வயதுதானா? உங்கள் மூளை எங்கேயாவது புல் மேயப் போயிருக்கிறதா, என்ன?''

''ஏன், என்ன ஆயிற்று?''

''நான் இருபத்தோரு வயதுப் பெண்ணை மணப்பேன் என்று எண்ணுகிறீர்களா? எனக்கு வயது என்ன, தெரியுமா? இருபத்தெட்டு!''

''இருபத்தோரு வயதுப் பெண் இருபத் தெட்டு வயதுப் பிள்ளையை மணந்து கொள் வதில் என்ன தவறு? உங்களைக் காட்டிலும் ஏழு வயதுதானே சின்னவள்!''

''வயது வித்தியாசம் இவ்வளவு அதிகமிருந் தால் மனம் ஒன்று சேராது!''

''இந்தப் புதிய விஷயத்தை இன்று தான் முதன் முதலாக உங்களிடம் கேட்கிறேன். என் மனைவி என்னைக் காட்டிலும் பதினைந்து வயது சிறியவள். இருபது வருஷங்களாக நாங்கள் ஒன்றாகத்தான் இருக்கிறோம். தலைகூட நரைத்து விட்டது!''

''ஒன்றாக இருப்பது மட்டும் மனம் ஒன்று சேர்ந்ததற்கு அத்தாட்சி ஆகாது. மனம் ஒத்து விட்டால், ஒருவர் கிரீன்லாந்திலும், இன்னொருவர் ஆஸ்திரேலியாவிலும் இருந் தால்கூட ஒன்றும் தவறாக ஆகாது!'' என்றார் மிஸ்டர் பட்நாகர்.

''என்ன தெரியும் எனக்கு? உங்களைப்போல் அறிவு எனக்கு இல்லை. நான் பழைய காலத்து மனுஷ்யன் ஆயிற்றே! அப்போ......''

''ரொம்ப சரி, வணக்கம்!''

''இன்னொரு பெண் இருக்கிறாள். அவள் வயது ஒருவேளை உங்களுக்குச் சமமாக இருக்கலாம்!''

''அடுத்த மாதம் வாருங்கள், வேறு ஏதா வது சொல்ல வேண்டும் என்றால்!''

''சரி, நமஸ்காரம்!''

''இதோ பாருங்கள். இந்தப்பெண்ணை உங்க ளுக்குப் பிடிக்காமல் இராது. வயது இருபத் தெட்டு ஆகிறது!'' என்றார் வேறு ஒருவர்.

''எடை?''

''ஒரு மணங்கு பதின்மூன்று சேர்!''

''அப்போ சரிப்பட்டு வராது. என் எடை ஒரு மணங்கு இருபத்தைந்து சேர்!''

''அது சரி! எடையினால் என்ன ஏற்படப் போகிறது?''

''எடை குறைவாயிருக்குமானால், அவ ளுடைய மனத்தில் தன் உடல் வலுவையும் எடையையும் பற்றி 'இன்பீரியாரிடி காம்ப்-ளெக்ஸ்'—அதாவது குறைவு மனப்பான்மை ஏற்பட்டுவிடும். தன்னைச் சிறியவளாகவோ, மதிப்பு அற்றவளாகவோ எண்ணும்படியான நிலை ஏற்பட்டு விட்டால், அன்போ காதலோ உண்டாக முடியாது. அப்படி ஏதாவது உண்டானால் அது பயமாயிருக்கலாம். அல்லது பக்தியாக இருக்கலாம். காதலாக ஒருநாளும் இருக்க முடியாது. அதனால்......''

''அது சரி, பெண்கள் பருமனா யிருப்பது நல்லதா? ஒல்லியா யிருப்பது நல்லதா? எல்லோரும் ஒற்றைநாடியான மெல்லிய உடல்படைத்த பெண்களைத்தானே விரும்பு கிறார்கள்? இந்தக் காலத்து நாகரிகமே மெல்லியவளாக இருப்பது ஆயிற்றே!''

''நான் இதை ஒப்புக்கொள்ள முடியாது!''

''சரி, அப்படியானால் தில்லியில் ஒரு பெண் இருக்கிறாள். நல்ல பருமன், தடிமன்; பார்க் கிறீர்களா?''

''இந்த மாதம் இல்லை, அடுத்த மாதம் வாருங்கள்!''

''சரி, வருகிறேன். வணக்கம்!''

''இதோ பாருங்கள், இந்தப் பெண்ணை உங்களுக்குக் கட்டாயம் பிடிக்கும். எம். ஏ. பாஸ் செய்திருக்கிறாள். நல்ல பருமனாகவும் இருக்கிறாள்!'' என்றார் ஐந்தாமவர்.

''அப்போ பிரயோஜனம் இல்லை!''

''ஏன்?''

''ஏனா? நானே பி.ஏ. தான் பாஸ் செய் திருக்கிறேன். என் மனைவி எம்.ஏ. யாக இருக்கக் கூடாது!''

''இதில் என்ன கெடுதல்? பெண் ரொம்ப நல்லவள். விநய சுபாவம் வாய்ந்தவள். நாம் எம்.ஏ. பாஸ் செய்திருக்கிறோம் என்ற கர்வமே அவளுக்குச் சிறிதும் கிடையாது. பேசிப் பார்த்தீர்களானால் தெரியும்!''

''பெண் எப்படி யிருந்தாலும் இந்தக் கல்யாணம் நடைபெறுவதற்கில்லை.''

''காரணம்?''

''கணவன்-மனைவி இருவரும் ஒரேயளவு கல்வி பெற்றவர்களாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால், அவர்களிடம் அன்பு அரும்ப முடியாது!''

''நீங்கள் பேசுவதெல்லாம் வேடிக்கையாகத் தான் இருக்கிறது. இந்தமாதிரி வேறு யாரும் பேசி நான் கேட்டதில்லை!''

''எங்கிருந்து கேட்பீர்களாம்? மனத்துள் இந்த உண்மையை உணர்ந்தபொழுதிலும், யாராவது இதை ஒப்புக் கொள்கிறார்களா? தன் பிழையை நிலை நிறுத்துவதற்காக ஜனங்கள் ஒன்றுக்கொன்று தலைகால் தெரி யாமல் பேசிக்கொண்டிருக்கிறார்கள்!''

''என்ன, எல்லாருமே அப்படித் தவறு செய்கிறார்களா?''

''ஆமாம்! பெரும்பாலும் எல்லோருமே இந்தத் தவறைச் செய்கிறார்கள்!''

''நீங்கள் எல்லாம் தெரிந்தவரைப் போல் அடித்துப் பேசுவது......''

''......நன்றாயில்லை; அவ்வளவுதானே? நீங்களும் வீண் தர்க்கம் புரிவதனால் பயன் ஒன்றும் இல்லை.''

''நான் தர்க்கம்புரியவில்லை. ஆனால் தாங்கள் மறு பரிசீலனை செய்து பார்க்க வேண்டும் என்றுதான் சொல்லுகிறேன். ஏனெனில் பெண் மிகவும் நல்லவள். தாங்களோ ஆக்ஸ் போர்டு கலாசாலையில் தேறிய பி.ஏ. அவ் விடத்து பி. ஏ. இவ்விடத்து எம். ஏ.யைக் காட்டிலும் குறைவானதல்ல. அதனால்......!''

''மன்னிக்கவும். நான் பேச்சை வளர்த்த விரும்பவில்லை. எனக்குப் பிடிக்கவில்லை என்றால் விட்டுவிடுங்கள்!''

''சரி,அந்தப் பெண் பிடிக்கவில்லையென்றால், விட்டுத் தள்ளுங்கள். இன்னொரு பெண் எனக்குத் தெரிந்து இருக்கிறாள் அவள் வெறும் பி. ஏ. தான்!''

''இன்று இவ்வளவுதான். புதுப் பெண்ணைப் பற்றி அடுத்த மாதம் பேசுங்கள்!''

# சிறந்த திருமணப் பரிசு



ஒரு திருமணப் பரிசுக்கு மன உணர்ச்சியை பாதிக்கக்கூடிய மதிப்புள்ளதால் நீங்கள் உண்மையாகவே உபகாரமுள்ள, நீடியகாலம் முழுதும் தொந்தரவு கொடுக்காமல் சேவை புரியும் ஒரு சாதனத்தைத்தான் கொடுக்க விரும்புவீர்கள். இன்று உஷா, எந்த திருமணப பெண்ணும் கிடைக்கவும் வைத்துக் கொள்ளவும் விரும்பக் கூடிய சிறந்த பரிசு. உங்களுக்கு தேர்ந்தெடுக்க பல ரக மாடல்களும் டேபிள் ஸ்டான்டுகளும் உண்டு.



உஷாவின் தேசமெங்குமுள்ள விற்பனையும் சேவைஞரும் ஒரு அதிகப்படியான அனுகூலம். திருமணப் பெண் எங்கு போனாலும் அங்கு கைதேர்ந்த பணி கிடைக்குமென நம்பலாம்.

# உஷா

தையல் மெஷின்



COUNTRY-WIDE SALES & SERVICE

JE-25-TAM

ஜே எஞ்சினியரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா

ஏஜண்டுகள்:

மெஸர்ஸ் ஏஜண்ட்ஸ் & டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் (பிரைவேட) லிமிடெட்
120 அரமனைக்காரத் தெரு. சென்னை 1

மெஸர்ஸ் பி. எல் மல்ஹோத்ரா 3/127, மவுண்ட் ரோடு, சென்னை-6

# பி.ஓ.ஏ.ஸி. காமெட் 4 மூலம்



**மேற்கு**

கராச்சி, டெஹரான், பேஹரன், பீரட், ரோம், ஜூரிக், ப்ராங்பர்ட், லண்டன், மாண்ட்ரீயல், நியூயார்க், பிறகு *ஸான் ப்ரான்ஸிஸ்கோ விற்கும் செல்லுங்கள்.

**கிழக்கு**

கொழும்பு, ரங்கூன், பாங்காக், சிங்கப்பூர், *ஹாங்காங், மற்றும் *டோக்கியோவிற்கும் செல்லுங்கள்.

பிறகு பஸபிக் சமுத்திரத்தைக் கடந்து *தூரப்பிரயாண ஜெட்-ப்ராப் **பிரிட்டானியா** விமானங்கள் மூலம் செல்லவேண்டும்.

பி. ஓ. ஏ. ஸி யாரால் நியமிக்கப்பட்டுள்ள உங்கள் உள்ளூர் ஏஜெண்டையோ அல்லது பி. ஓ. ஏ. ஸி, பம்பாய், டில்லி, கல்கத்தா, மதராஸ், இவர்களையோ விசாரித்து விபரமறிந்துகொள்ளுங்கள்.

பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேய்ஸ் கார்பரேஷன், குவாண்டாஸ், இ. ஏ. ஏ., எம். இ. ஏ., மற்றும் டி. இ. ஏ. எல். இவர்களின் கூட்டுறவால் நடத்தப்படுகிறது.

---




# எந்நாளும் எந்நேரமும் நரஸூ காப்பி அருந்தும் நேரமே

அருமையான காப்பி ஒரு கோப்பை பருக விரும்புவீரானால் நரஸூ காப்பி அருந்துவதே உத்தமம். அதன் பரிசுத்தத் தன்மையினால் முற்றிலும் தனிப்பட்ட சிறப்புடையதாக, மற்ற காப்பிகளினின்றும் வேறுபட்டு நல்ல மணமுடையதாக விளங்குகிறது. கல்யாண விருந்துகளுக்கும், ஹோட்டல்கள் மற்றும் சிற்றுண்டிச் சாலைகள் முதலியவற்றிற்கும் உகந்தவாறு பொருத்த அளவுகளிலும் இப்பொழுது கிடைக்கின்றது.

பரிசுத்தமான நரஸூ காப்பி தனிச் சிறப்புடைய காப்பியாகும்

**நரஸூ'ஸ்**
மான்யுபாக்சரிங் கோ. பிரைவேட் லிட்.
சேலம் & சென்னை

''நானும் ஒரு பெண்ணைப் பற்றித்தான் தங்களுக்குச் சிரமம் தர வந்திருக்கிறேன். ஒருவேளை தங்களுக்குப் பிடித்தாலும் பிடிக்கலாம். பெண் பார்க்க எப்பொழுது வருகிறீர்கள்?'' என்று ஆரம்பித்தார் ஆறுமவர்.

''பெண்ணின் வருமானம் என்ன?'' என்று கேட்டார் மிஸ்டர் பட்நாகர்.

''பெண்ணின் வருமானமா?''

''ஆமாம், அவளுக்கு மாதம் என்ன வரும்படி?''

''அவளுக்கு வரும்படி ஏதும் இல்லையே! ஆம், அவள் அப்பா சம்பாதிக்கிறார்...!''

''மன்னிக்க வேண்டும். நான் அவள் தந்தையின் வருமானத்தை அறிந்துகொள்ள விரும்பவில்லை. நான் அவள் அப்பாவையா கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்?''

''மெய்தான். பெண் உத்தியோகமோ, தொழிலோ எதுவும் செய்யவில்லை. ஆனால் அவள் தந்தை நல்ல வரதட்சிணை தருவார். உங்களுக்கு எத்தனை ரூபாய் வேண்டும், சொல்லுங்கள்!''

''வாட் நான்ஸென்ஸ் யூ டாக்? எனக்கு எதற்கு வரதட்சிணைப் பணம்? நான் என்ன பிச்சைக்காரனா?''

''அதற்குச் சொல்லவில்லை. என்னைத் தப்பர்த்தம் செய்துகொண்டு விட்டீர்களே! நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள். உங்கள் கேள்வியின் பொருளை நான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. நான் கொஞ்சம் அறிவுக் கட்டையானவன்!''

''கணவன் மனைவி இருவரும் தனித்தனியாகச் சம்பாதிக்க வேண்டும், சமமாகச் சம்பாதிக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம்; அப்படியில்லை என்றால் உண்மையான அன்பு ஏற்பட முடியாது.''

''அப்போ நான் இன்னொரு பெண்ணை அறிவேன். ஏழு எட்டு வருஷங்களாக ஆஸ்பத்திரியில் வேலை செய்து வருகிறாள். தாங்கள் விரும்பினால் அவளுக்கு என்ன சம்பளம் என்று கேட்டு வருகிறேன்!''

''இன்றைக்கு இவ்வளவுதான். இன்னொரு பெண் என்றால் அடுத்த மாதம் வரை காத்திருங்கள்!''

இதுபோல் எத்தனையோ பேருக்குப் பதில் அளித்துவிட்டு மிஸ்டர் பட்நாகர் அலுவலக அறையிலிருந்து எழுந்து உள்ளே போய் விட்டார். ஒரு மாதத்துக்குத் திருமணப் பேச்சு ஒத்திப் போடப்பட்டது.

அடுத்த மாதத்தில் முதல் ஞாயிறு வந்தது. கல்யாணத் தரகர்கள் அலுவலக அறையில் குழுமியிருந்தார்கள். கம்பீர நடை நடந்து மிஸ்டர் பட்நாகர் அறைக்குள் பிரவேசித்தார். எல்லோருக்கும் வணக்கம் தெரிவித்துவிட்டுத் தம் ஆசனத்தில் அமர்ந்தார்.

முன்போலவே, ஒவ்வொருவராகத் தாங்கள் தங்கள் விஷயத்தை எடுத்துரைக்கலாயினர். மிஸ்டர் பட்நாகரும் அலுக்காமல் சலிக்காமல் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குறையை எடுத்துரைத்து நம்பிக்கையிழக்கச் செய்து விட்டார். எல்லோரும் போன பிறகு கடைசி ஆசாமி, ''அப்பப்பா! உங்களைத் திருப்திப் படுத்துவதென்றால் யாராலுமே முடியாது போலிருக்கிறதே!'' என்றார்.



மாது (டயர் வெடித்த சத்தம் கேட்டு): டிரைவர்! ஏதோ வெடித்த சப்தம் கேட்டதே, டயர் என்ன ஆச்சு?
டிரைவர்: ரீடையர் ஆயுடுச்சுங்க.

''நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். அவரவருக்கென்று அவசியம் ஓர் அபிப்பிராயம் இருக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம். அதுவும் கல்யாண விஷயம், பாருங்கள்!''

''மெய்தான்.''

''கணவன் – மனைவி தொடர்பு முதலாளி தொழிலாளி போன்றதல்ல, வாடிக்கைக்காரர் கடைக்காரர் போன்றதல்ல, டாக்டர் நோயாளி போன்றதுமல்ல.''

''ஆமாம்! இல்லவேஇல்லை. இவ்விஷயத்தில் நான் உங்களைப் பூரணமாக ஆதரிக்கிறேன்.

''ஏனெனில் எனக்கு வயதும் குறைவில்லை. இடையில் நானே மூன்று முறை கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேன். நாற்பது-ஐம்பது பெண்களுக்காவது கல்யாணம் முடித்தும் வைத்திருப்பேன்.''

''அதனால்தான் தாங்கள் என் கருத்தைப் புரிந்து கொள்ள முடிந்திருக்கிறது. நான் சொல்வதன் கருத்து என்னவென்றால், எதுவும் ஒரு சமன் எடையில் இல்லாவிட்டால் அன்பே உண்டாக முடியாது.''

''சரியாகச் சொன்னீர்கள். குழந்தைப் பருவத்தில் நானும் இரேகா கணிதம் பயின்றிருக்கிறேன். 'ஈக்வல் இன் ஆல் ரெஸ்பெக்ட்ஸ்' — 'எல்லா முறைகளிலும் சமமாக இருக்க வேண்டும்' என்னும் கோட்பாடு இன்றும் நினைவிலிருக்கிறது. கணவன் மனைவி என்றாலும் இப்படித்தான் இருக்க வேண்டும்!''

''நீங்கள் ஒருவர்தான் சரியாகப் புரிந்து கொண்டீர்கள். நீங்கள் இப்பொழுது என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?''

''சார்! மிகவும் தேடிய பிறகு ஒரு பெண் கிடைத்திருக்கிறாள். எல்லா விஷயங்களிலும் தங்களுக்குச் சமதையானவள். இம்மிகூடக் குறைவும் இல்லை; அதிகமும் இல்லை!''

''அப்படியா? வயது என்ன?''

''இருபத்தெட்டு வருஷம் மூன்று மாதம் ஆறு நாள் ஆகிறது. இன்றைய வயது சரியாக இதுதான்!''

''எடை?''

''ஒரு மணங்கு இருபத்தைந்து சேர் ஒரு தோலா!''

''படிப்பு ?''

''பி. ஏ.''

''வருமானம் ?''

''மாதம் ஐந்நூறு ரூபாய் !''

''எப்படி ?''

''அவள் தன் தந்தைக்கு ஒரே அருமந்த மகள். அதனால் அவள் தந்தையின் வருமானம் அவளுடையதுதானே ?''

''சரி, பார்ப்பதற்கு எப்படி இருக்கிறாள் ?''

''புகைப்படமே இருக்கிறது பார்த்துக் கொள்ளுங்கள் !''

''பார்வைக்குத் தவறாகத் தோன்றவில்லை!''

''உங்களுக்குச் சம்மதம்தானே ?''

''ஆச்சரியம் !''

''எது ஆச்சரியம் ?''

''முற்றிலும் சமதையான வயது, சமதையான படிப்பு, எடைகூட ஒன்று. வருமானம் கூடச் சமமா யிருக்கிறது ! வேடிக்கையான பொருத்தமாயில்லை ? அதனால் ஓர் எண்ணம் தோன்றுகிறது. திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை எனக்கு முன்பும் இருந்ததில்லை; இப்பொழுதும் கிடையாது. இருந்தாலும் விஞ்ஞான ரீதியாக ஒரு சோதனை செய்து பார்க்கலாமா என்று தோன்றுகிறது. எல்லா முறைகளிலும் சமமாயிருக்க வேண்டும் என்ற முறைப்படி நடக்கும் திருமணம் எத்தகைய பலன் அளிக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம் அல்லவா ?''

''ஆமாம் ; ஆமாம் ! விஞ்ஞான ரீதியான சோதனையை உத்தேசித்து மக்கள் உயிரையே கூடத் தியாகம் செய்துள்ளார்கள். நீங்கள் ஒரு சாதாரணத் திருமணம்தானே செய்து கொள்ளப் போகிறீர்கள் !''

''சரி, எனக்கு அவகாசம் கொடுங்கள். யோசித்துச் சொல்கிறேன் !''

''தாராளமாக. அப்புறமே சந்திக்கிறேன். நான் வரட்டுமா ? நமஸ்காரம்.''

பெண் கேட்க வந்தவர் போய் விட்டார். மிஸ்டர் பட்நாகர் யோசனையில் ஆழ்ந்தார். கடைசியில் சோதனை செய்து பார்த்தே விடுவது என்ற முடிவுக்கு வந்தார். பெண் பார்க்கும் படலம் முடிந்தது. ஜாதகத்தைப் பார்த்து வயது ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டார். உலாவப் போய்வரும் சாக்கில், மார்க்கெட்டில் உள்ள தானாக இயங்கி எடை தெரிவிக்கும் யந்திரத்தில், எடையையும் சரி பார்த்துக் கொண்டார். அதாவது பெண் கேட்க வந்தவர் சொன்னதெல்லாம் எழுத்துக்கு எழுத்து, சொல்லுக்குச் சொல் உண்மையாகவே இருந்தது. அதனால் மிஸ்டர் பட்நாகரின் சோதனைப் பாதைக்கு எவ்விதத் தடையும் ஏற்படவில்லை.

நல்ல நாளில் நல்லோரையில் முகூர்த்தம் விமரிசையாக முடிந்தது.

பட்நாகர் தம்பதிகள் ஓராண்டு வரை, பம்பாய், பூனா, மசூரி, நைனிதால் என்று பல இடங்கள் சுற்றித் தேன் நிலவுப் பயணத்தை முடித்துக் கொண்டு திருமணமான இரண்டாவது ஆண்டு முதல் நாள்தான் தங்கள் சொந்த ஊருக்குத் திரும்பி வந்தனர்.

திருமணமான இரண்டாவது ஆண்டின் முதல் நாள். கணவன் - மனைவி இருவரும் மகிழ்ச்சிக் கடலில் மிதந்தனர். மாலை நேரம் இருவரும் ஏகாந்தமாக அமர்ந்து இனிமையாகப் பேசிக் கொண்டிருந்தனர். ஓர் ஆண்டு ஒரு நாளாக ஓடிவிட்டது, காதலர்களுக்கு. ஆதரிச அன்பிலே மூழ்கி ஆதரிச தம்பதிகளாக வாழ்ந்த அவர்கள் ஆனந்தத்திலும் அன்பிலும் எல்லாவற்றையும் மறந்திருந்தார்கள்.

''நாம் அன்பு செலுத்துவதுபோல் மற்றத் தம்பதிகளும் அன்பு செலுத்துவார்களா ?'' என்று கேட்டாள் மனைவி.

''அது எப்படி முடியும் ? நம்மைப்போல் மற்றக் கணவன் - மனைவிமார் எங்கே எல்லா விஷயத்திலும் ஒருமாதிரியா யிருக்கிறார்கள்?'' என்றார் மிஸ்டர் பட்நாகர்.

''ஆமாம். ஒரு சில கண நேரத்துக்கு, எனக்கு அம்மை போட்டு நான் அழகு இழந்து விடுவதாக வைத்துக் கொள்ளுங்கள்....''

''எதற்கு அம்மை போட வேண்டும், எதற்கு நீ அழகு இழக்க வேண்டும் ? அப்படியே ஆனாலும் அதனால் என்ன பெரிதாக ஆகிவிடப் போகிறது அல்லது கெட்டுவிடத்தான் போகிறது ? நம் அன்பு முற்றிலும் பூர்ணமானதல்லவா ?''

''சரி, நான் உங்களைப் பொய் சொல்லி ஏமாற்றி யிருக்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள்....''

''நீ எதற்காக என்னை ஏமாற்றப் போகிறாய்? அப்படியே ஏமாற்றி யிருந்தாலும்தான் என்ன குடிமுழுகிவிடப் போகிறது ? உன் கேலிப் பேச்சை மூட்டை கட்டி வை !''

''கேலியில்லை, வேடிக்கை இல்லை. எனக்கு இப்பொழுது வயது இருபத்தொன்றுதான் ஆகிறது. நம் அன்பு....''

''அதுதான் அன்பு முன்பே ஏற்பட்டு விட்டதே !''

''ஆனால்....''

''ஆனால் கினாலுக்கு இடம் இல்லை. நாம்தான் அன்பு கொண்டு விட்டோமே !''

''முற்றிலும் பரிபூர்ணமாகவா ?''

''ஆமாம், ஆமாம் !''

''இன்னொரு விஷயம் நான் பி. ஏ. பாஸ் செய்யவில்லை !''

''அதற்கென்ன ? பரவாயில்லை !''

''இன்னும் ஒரு விஷயம் என் எடை விஷயங்கூட ஏடாகூடந்தான்.''

''எனக்குக்கூட இது விஷயமாக எத்தனையோ தடவை சந்தேகம் எழுந்தது. ஆனால் மார்க்கெட்டிலிருந்த எடை இயந்திரம் சரியானதுதானே ?''

''சரியானதுதான். ஆனால் என் மடியில் பத்து சேர் மூன்று பலம் எடைக் கல்லை ஒளித்து வைத்திருந்தேன் !''

''என்ன மடியிலா ?''

''ஆமாம், கடைசியாக இன்னொரு விஷயம். எனக்குத் தம்பி பிறந்திருப்பதாக இன்று கடிதம் வந்திருக்கிறது. அதனால் எனக்கு வருமானம் எதுவும் இல்லை !''

''சரி, அதற்காக என்ன?''

''அதாவது என்னை உங்கள் கழுத்தில் கட்டி விட்டார்கள் ஏமாற்றி. அதனால் நம் காதல் பிரயோசனமில்லையல்லவா ?''

''யார் சொன்னது? உடைப்பில் போடு இந்த இன்பீரியாரிடிகாம்ப்ளெக்ஸ், பொருளாதாரச் சுதந்திரம் எல்லாவற்றையும். போ, போ ! எழுந்திருந்து போய்ச் சூடாக ஒரு கப் காப்பி போட்டுக் கொண்டு வா, போ !''




# அமிர்தாஞ்சனம்

## வலி உண்டாக்கும் உபாதையை ஆபத்தான நிலைவருமுன் போக்குகிறது













அமிர்தாஞ்சனம் வலியைப் போக்குவதோடு அல்லாமல் அதன் மூல காரணத்தையும் நீக்குகிறது. அது இரத்த நெருக்கத்தை அகற்றி சுலபமாக இரத்த ஓட்டத்தை மீண்டும் ஏற்படுத்த உதவுகிறது.

ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்கவேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடு நாள்வரை நீடிக்கிறது.




அமிர்தாஞ்சனம் லிமிடெட் மதராஸ்-4 பம்பாய்-1 கல்கத்தா-1 புது டெல்லி

# பின்னியின் காட்ஸ்வால்

**இந்த அற்புதமான துணி இரவு நேரங்களில் உங்களை வெதுவெதுப்பாகவும் பகல்வேளையில் இதமாகவும் இருக்க உதவுகிறது.**

**காட்ஸ்வால் விசேஷ மதிப்புடையது.**

இது உயர்ந்த ரகக் கம்பளியும் பருத்தியும் கலந்து அதி ஜாக்கிரதையுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது

நீடித்து உழைப்பதுடன் என்றும் மென்மையாக இருக்கிறது.

இது முக்கியமாக குழந்தைகளுக்கு ஏற்றது. மிக்க மென்மையான சருமத்தைக்கூட உறுத்தாதது.

இது திடீரென்று மாறும் சீதோஷ்ண நிலையிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது.

இது எப்போதும் பார்க்க நேர்த்தியாக இருக்கும். எந்த பருவகாலத்துக்கும் ஏற்றது.

காட்ஸ்வால் துணியை வீட்டிலேயே சலவை செய்யலாம்.

காட்ஸ்வால் சுருங்காதென உத்திரவாதம்.

பலவித கலர் துணிகள். பிரிண்ட் துணி. செக்ஸ் துணி, டார்டான்கள் இவற்றிலிருந்து உங்களுக்குப் பிடித்தமானவற்றைப் பொறுக்குங்கள்.

**காட்ஸ்வாலுக்கு ஈடு எதுவும் இல்லை !**

**அதிகக் குளிரிலிருந்து பாதுகாக்க பின்னியின் அங்கோலாவை அணியுங்கள். அழகிய பலவித நிறங்கள் !**

குளிர்ந்த இரவு நேரங்களில் குழந்தைகளை வெதுவெதுப்பாக வைத்துக்கொள்ளுகிறது.

குழந்தைகளை கவர்ச்சிகரமாகவும், சுகமாகவும் நாள் பூராவும் வைத்துக் கொள்ளுகிறது.

உங்களுக்குத் தேவையான காட்ஸ்வால் துணிகளை இந்த காட்ஸ்வால் அடையாளம் காணப்படும் அனுமதி பெற்ற கடைகளிலிருந்து கன்ட்ரோல் விலைக்கு வாங்கவும்




பெங்களூர் உல்லன், காட்டன் & சில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
அக்ரஹாரம் ரோட், பெங்களூர் 2
மானேஜிங் ஏஜெண்டுகள், பின்னி கம்பெனி (மதராஸ்) லிமிடெட்





# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 128 கர்ண நாதம்

ஆகவே, கர்ணநாதம் என்றதும் அதற்குக் காரணம் என்னவென்பதை முதலில் தெளிந்த பிறகு அதற்குத்தக்க சிகிச்சையை நிச்சயிக்க வேண்டும்.

கர்ணநாதத்துக்குள்ள காரணங்களில் மிக முக்கியமானவை என்று மூன்று வகைகளைத் தெரிவித்தாயிற்று. அவை

1. அடிக்கடி ஏற்பட்ட கர்ண ரோகங்களைச் சிகிச்சை செய்யாமல் உபேக்ஷித்ததின் விளைவு.

2. பொடுகு, பொட்டு, கரப்பான் போன்றவைகளின் மூலமோ - வேறு வழியாகவோ காதினுள் வந்துற்ற காளான்... காளான் பண்ணை.

3. ஆன்டிபயாடிக்ஸ் என்னும் (கிருமி நாசினிகளான) ஸ்ட்ரெப்டோமைஸின் போன்ற - அல்லது வெறும் குயினாவேதானாகட்டுமே - மருந்துகளைச் சேவிப்பதால் என்பவை.

இவற்றுள் மூன்றாவது இனத்தைச் சேர்ந்த கர்ணநாதத்துக்குள்ள சிகிச்சையைச் சொல்லியாயிற்று.

காதில் ஏற்பட்ட காளான் பண்ணையின் விளைவான கர்ணநாதத்தில், முதலில் பொட்டு, பொடுகு, சுண்டு, கரப்பான் போன்றவை தலையில் இருப்பின் அவற்றைப் போக்குவது அவசியம். இவற்றுக்கான சிகிச்சைகளை ஏற்கெனவே மிக விஸ்தாரமாகவும் கல்கியில் விளக்கி ஆயிற்று. [தயவுசெய்து பழைய பிரதிகளைப் புரட்டிப் பார்க்கவும்.]

காதிலுள்ள காளான் பண்ணைக்குக் காரணமான பொட்டு, பொடுகு, சுண்டு கரப்பான்களைக் குணப்படுத்தினால் மட்டும் போதுமா? காதிலுள்ள காளான் பண்ணையை எப்படிப் போக்குவது என்கிறீர்களா? சொல்கிறேன்.

1. "போரால்கஹால்" என்னும் மருந்தில் ஒன்றிரண்டு சொட்டுகளைக் காதில் விட்டுப் பஞ்சினால் மூடினால் போதும். இக்காளான்கள் கூண்டோடு கைலாசம் ஏறி விடும்.

"ரெக்டிபைட் ஸ்பிரிட்" என்னும் போதை தரும் மதுவர்க்கத்தைச் சேர்ந்த திரவத்தில் சிறிதளவு போரிக் ஆஸிட் என்னும் மருந்தைக் கரைத்ததுதான் போரால்கஹால் எனப்படுவது. இங்கிலீஷ் மருந்துகள் விற்கும் 'ஷாப்'புகளில் இது கிடைக்கும். ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டாக்டரின் சீட்டிருந்தால்தான் இது கிடைக்கும். மற்றப்படி இது கிடைப்பது கடினம். மதுவிலக்குச் சட்டம் அமுலுக்கு வந்ததின் விளைவாக, இந்த மருந்துக்கும் ஒரு 'கிடைக்காமை' வந்துற்றது. கிடைக்காமை - அல்லது கிடைத்தல் அரிது என்னும் நிலைதானே தவிர, மருந்து இல்லாமையாலல்ல.

பார்க்கப் போனால் ஏராளமாக உள்ள எந்தப் பொருள்தான் எளிதில் கிடைக்கிறது என்கிறீர்களா? அப்படிச் சொல்லாதீர்கள். இருக்கும் பொருள்களை விட்டுத் தள்ளுங்கள். பொருளே இல்லாத வாய்ப்பந்தல், வறட்டுப் பேச்சு இவை வேண்டிய மட்டும் கிடைக்கின்றனவே! சிலருக்கு இந்தபோரால்கஹாலைச் சிறிது காதில் விட்டதும் ஓர் எரிச்சல் ஏற்படும். பிறகு மருந்துப் புட்டியைக் கண்டவுடனே தெனாலிராமன் பூனை பாலைக் கண்டதும் ஓடி ஒளிந்துகொண்ட கதையாகிவிடும். ஆகவே சிறியதொரு பஞ்சுத் திரியை இம்மருந்தில் அளவோடு நனைத்து, அதிகப்படியுள்ளதையும் போக்கிவிட்டுக் காதினுள் வைத்துப் பஞ்சினால் மூடினால் போதும். நேரிடக் காதில் இதை விடவேண்டாம்.

ஸ்பிரிட் ஆனதால் காற்றுபட்டால் எப்படியும் உலர்ந்து விடுமே. அப்படிக் காற்றோடு கலக்கும்போது இந்த 'ஸ்பிரிட்டுக்' காற்று பட்டாலே போதும்; காளான் விலகும்.

2. சோழி-பலகாரை - கௌரி என்னும் பெயர்களால் அழைக்கப்படும் பொருள் ஒன்று உண்டல்லவா? அதில் ஒன்றை அடுப்பிலிட்டுச் சுடவும். சற்று நேரம் சூடேறினதும், இது 'டப்' என்று வெடித்துவிடும். பிறகு இதை அடுப்பிலிருந்து எடுத்து ஆறினதும் பொடித்து வைத்துக் கொள்ளவும். இந்தப் பலகாரை பஸ்மத்தில் 1. ஒரு சிட்டிகையளவைக் காதிலிட்டு அதன்மேல் சில துளிகள் எலுமிச்சம் பழ ரஸத்தைக் காதில் விடவும். மளமளவென்று சற்றுப் பொங்கும். பயப்பட வேண்டாம். இதனால் காதில் சூடோ, எரிச்சலோ எதுவும் உண்டாகாது. பிறகு தலையை மறுபுறம் சாய்த்துக் காதில் விட்ட மருந்துகளைக் கவிழ்த்துக் களைந்து-பஞ்சினால் துடைத்துச் சுத்தஞ் செய்யவும். இதனாலும் காளான் மாறும்.

3. கடல் நுரை என்று ஒரு மருந்து. சுக்கு, மிளகு விற்கும் மருந்துக் கடைகளில் கிடைப்பது. மாவிலை போன்ற சொறசொறப்பான ஒரு சாதனத்தை "இதுதான் கடல்நுரை" என்று சிலர் கொடுப்பார்கள். இது கற்பலகை -

காரைத் தரைகளைத் தேய்த்துக் கழுவிச் சுத்தம் செய்யமட்டுந்தான் உதவும். சேனைக் கிழங்கைப்போல் பெரிய பெரிய வெளுத்த அல்லது சிறிது அழுக்குப்பட்ட வெண்மை நிறமுள்ள - கெட்டியான பொருள் வேறொன்று உண்டு. இதைத் தான் கடல்நுரை என்று தெரிந்து வாங்க வேணும். இந்தக் கடல் நுரையையும் காதில் ஒரு சிட்டிகையிட்டுக் காடியில் சில துளிகளையும் அதன்மேல் விட்டாலும் மளமளவென்று பொங்கி அடங்கும். பிறகு மேலே தெரிவித்த விதம் காதைச் சுத்தம் செய்யவும். இதனாலும் காளான்கள் தீரும்.

4. க்ஷாரதைலம் என்று ஒரு மருந்து. இதைச் செய்துகொள்வது சிறிது சிரமம். அவசியமும் இல்லை. நாட்டு மருந்துகள் செய்து விற்கும் இடத்திலிருந்து வாங்கிக் கொள்ளலாம். இந்தத் தைலத்தில் ஒன்றிரண்டு சொட்டு காதில் விட்டுப் பஞ்சினால் மூடினால் போதும். தினந் தோறும் உபயோகிக்க வேணுமென்ற நிர்ப்பந்தமும் இல்லை. ஒருநாள் க்ஷார தைலம் மறுநாள் போராவ்கஹால் மறு நாள் க்ஷார தைலம் என்று இப்படி உபயோகித்து வந்தாலும் காலக்கிரமத்தில் காளானின் தொல்லை தொலையும்.

5. அதிவிடயம், பெருங்காயம், சதகுப்பை, லவங்கப்பட்டை, ஸ்வர்ஜிக க்ஷாரம், சுக்கு, மிளகு, திப்பிலி இவற்றைக் கல்க்கமாக அரைத்துக் கொண்டு எண்ணெயும் காடியும் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தில் ஒன்றிரண்டு சொட்டு மேற்சொன்ன விதம் விட்டு வந்தாலும் நல்லதுதான்.

இவ்விதம் வந்துற்ற காளானைக் களைய முயலுவதோடு, இக்காளான்களால் ஏற்பட்ட விளைவையும் போக்க வேண்டும். காதினுள் பரவும் லஸிகையைக் காளான்கள் உறிஞ்சிக் குடிப்பதனால் அங்கு ஒரு வறட்சி ஏற்படும். ஆகவே வாயுவுக்குச் சீற்றமுண்டாகிக் காதில் சப்தம் கேட்கத் தொடங்குகிறதென்று விளக்கியது நினைவிருக்குமே! இந்த வறட்சியைப் போக்கி - நெய்ப்பை உண்டாக்கி வாதத்தின் சீற்றத்தைச் சமனஞ் செய்வித்தாலல்லவா காதிலுள்ள சத்தம் நிற்கும் ?

அதற்காக, தினசரி தலைக்குச் சிறிது க்ஷீரபலா தைலத்தையோ அல்லது மாஷ தைலத்தையோ உச்சியிட்டுத் தேய்த்து ஊறிப் பிறகு அதையே தலைக்குத் தடவி முடி சீவிக் கொள்ளவும். தலைக்கு ஜலம் விட்டுக் குளிக்கவே கூடாது. தினசரி தேய்த்து வரும் எண்ணெய் சேர்ந்து சேர்ந்து முடியெல்லாம் பழம்புளிபோல் ஒட்டிப் பிடித்து நாற்றம் எடுக்கத் தொடங்கி விடுமே! அப்படி ஆகாமல் இருக்க அன்றாடம் அதிகப்படியான தைலத்தை ஒரு கந்தைத் துணியால் துடைத்துக் களைந்து விடுவது நல்லது. அப்படியும் தீராததாகுமானால் 10 - 15 நாளைக் கொருதரம் இதே தைலத்தில் மேலும் கொஞ்சம் தலைக்குத் தேய்த்து, ஊறாமல் உடனே வெந்நீரில் தலை குளித்து-ஈரத்தைத் துவட்டிச் சுத்தமாக்கிச் சாம்பிராணிப் புகை காட்டிக் காயவைத்துக் கொள்ளவும். இவ்வாறு தலைகுளிப்பது அடிக்கடி செய்யக்கூடாது. மற்றும் குடிப்பது, தினசரி கழுத்துவரையில் குளிப்பது போன்றதற்கெல்லாம் வெந்நீரேதான் ஏற்க வேண்டும். சாப்பிடுவதெல்லாம் சூடாக இருக்கும் போதே ஏற்றல் வேண்டும். பீர்க்கங்காய், சுரைக்காய், தக்காளி போன்ற தண்ணீருள்ள காய்கறிகளும் மீனும் அபத்தியமாகும். ஆனால் கீரைகள், கலியாணப் பூசணிக்காய் இவை இரண்டும் ஜலமுள்ளவையானாலும் அபத்தியமல்ல, தணுத்த காற்று கொள்ளக்கூடாது. வேகமாகச் செல்லும் மோட்டார்-ரயில் வண்டிகளில் பிரயாணஞ் செய்யும் போதும் ''விர்ர்ர்'' என்று முகத்தில் அடிக்கும் காற்றைத் தவிர்ப்பது அவசியம். மறக்கக் கூடாது. காதில் பஞ்சை அடைத்துக் கொண்டிருக்கிறேன். தலையில் - காதுகளையும் மறைத்து 'மப்ளர்' கட்டிக் கொண்டிருக்கிறேன் என்பது போன்ற குதர்க்கங்கள் நல்லதல்ல.

ஆண் மக்களானால் தலைமுடியைக் கூடுமான அளவு குறைத்து வைத்துக்கொள்வது மிகவும் அவசியம். ''அமெரிக்கன் க்ராப்'' என்று பெயர் வைத்துக்கொண்டு முட் புதர்போல் மண்டிக் கிடக்கும் முடியுள்ள கலியுக கங்காதரன்களுக்குத் தலையில் உச்சியிடும் தைலம் முடிகளை முழுதும் நனைக்கவே போதாதே! ஊறிட என்ன நிற்கும்? மேலும், இந்த முடிகளைப் படியவைத்து முடி சீவிக் கொள்ள வேண்டுமென்று கொஞ்சம் தண்ணீரைத் தலையில்.....அது கூடவே கூடாது. ஆகவே தான் ''ஸம்மர் கிராப்'' செய்துகொள்ள வேணுமென்று தெரிவித்தது.

இந்தத்தைலங்களில் ஒன்றை இவ்வாறு உபயோகிப்பதால் காதினுள் நெய்ப்பு ஏற்படும். வறட்சி நீங்கும். கர்ணநாதம் குணமாகும்.

அவசியமானால் மூன்று முறைகள் மடக்கிக் காய்ச்சிய க்ஷீரபலா தைலத்தை உபயோகிக்கலாம்.

ஆமாம்! இந்த க்ஷீரபலா - மாஷ தைலங்களை எப்படிச் செய்வது என்கிறீர்களா?

மேலும் - கர்ணநாதத்தில் உள்ளுக்கு ஒன்றும் மருந்து வேண்டாமா என்று கேட்கிறீர்களா?

# பல் முளைக்கும் பிராயமா?

## வேதனையின்றி இலகுவாகப் பல் முளைக்க உதவுவது பிராமிட் பிராண்ட் கிளிஸரின்






**பல் முளைக்கும் பிரச்னையா? புண்பட்ட ஈறுகளா?**
மென்மையான துணியொன்றை உங்கள் விரல்மீது சுற்றிக்கொண்டு பிராமிட் கிளிஸரினில் நனைத்தெடுத்து குழந்தையின் ஈறுகள்மீது இலேசாகத் தேய்த்திடுங்கள். அது சட்டென்று குணமளிப்பதுடன், சிறுவர்கள் ரசிக்கும் இனிய சுவையுள்ளது. மருத்துவத்திற்காகவும், அழகுசாதனங்களுக்காகவும், பருவகாலங்களுக்காகவும் பயன்படும் சுத்தமான பிராமிட் கிளிஸரினுக்குப் பற்பல வீட்டு உபயோகங்களும் உண்டு.

**இலவசம்** துண்டுப் பிரசுரம்! இக்கூப்பனைப் பூர்த்தி செய்து "இந்துஸ்தான் லீவர் லிமிடெட், தபால் பெட்டி நம்பர் 409, பம்பாய்" என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

பிராமிட் கிளிஸரினின் வீட்டு உபயோகங்களை விவரிக்கும் இலவசத் துண்டுப் பிரசுரம் ஒன்றை அனுப்பவும்.

| என் பெயரும் விலாசமும் | நான் வாங்கும் மருந்துக் கடையின் பெயரும் விலாசமும் |
|---|---|
| ........................................ | ........................................ |
| ........................................ | ........................................ |
| ........................................ | ........................................ |

KWM

விநியோகஸ்தர்கள்: ஐ.வி.ஐ.(இ)ப்ரை.லிட்., பம்பாய், கல்கத்தா, தில்லி, சென்னை PYG 13-50TM



# மந்திரமும் மகாமந்திரமும்

மூன்ஷி

ஒரே ஒரு ஊரில் மூக்கய்யா, மூக்கய்யா என்று ஒரு சிறுவன் இருந்தான். அவனுக்கு அப்பா கிடையாது. அம்மா ஒரு ஏழை. அவளை அக்கம் பக்கத்தார் 'அந்த வெகுளிப் பொம்பிளை' என்பார்கள். அவள் எவ்வளவோ கஷ்டப்பட்டு உழைத்துப் பார்த்தாள். ஆனால் அவளுடைய சம்பாத்தியம் இருவருக்கும் காணவில்லை. அவள், பாவம், தான் கால் வயிறு, அரைக்கால் வயிறு சாப்பிட்டுத் தன் அன்பார்ந்த மகனுக்கு வயிறு நிறையச் சோறு போட முயன்று வந்தாள்.

ஒரு நாள் அவள் மளிகைக்கடைக்குப் போனபோது விலைவாசி ரொம்ப ரொம்ப ஏறியிருந்தது. அவள் மலைத்து, ''ஏன் ஐயா!'' என்று கேட்டாள். ''தெரியாதா? சண்டையினால்தான்'' என்றார்கள். ''சண்டையா? யாருக்கும் யாருக்கும்?'' என்று கேட்டாள்.

இது கூடத் தெரியாதா? நம் ராஜாவுக்கும் இன்னொரு ராஜாவுக்கும்'' என்றார்கள். ''நம்ம ராஜாவுக்கு ரொம்ப வயசாகிப் போச்சே. எப்படிச் சண்டை கிண்டை பிடிக்க முடியும்?'' என்று அனுதாபத்துடன் வியந்தாள். 'பைத்தியமே! ராஜாவா சண்டை பிடிப்பார்? முக்கிய மந்திரி சிப்பாய்களைத் திரட்டி, 'தேசாபிமானிகளே! நாட்டுக்கு மதிலும் மக்களுக்குக் கவசமும் போன்ற வீரர்களே, ராஜாதிராஜனுக்காகத் துணிந்து உயிர் விடுங்கள், எதிரியைக் கொல்லுங்கள், போரில் வெல்லுங்கள், கீர்த்தி அடையுங்கள், அமரர் ஆகுங்கள்' என்று ஏவுவார். அவர்களும் துணிந்து மன்னனுக்காக உயிர் துறப்பார்கள். சில சமயம் எதிரியை வெல்லுவார்கள்'' என்று சிலர் விளக்கினார்கள்.

'சிப்பாய்கள் செத்தால் அரிசி விலை ஏன் ஏற வேண்டும்?' என்று அவளுக்குப் புரியவில்லை. ஆனால் அவர்கள் பொறுமையுடன் கடினமான புது வார்த்தைகளையும் கருத்துக்களையும் அடுக்கிப் பேசியதால் அவளுடைய மலைப்பு அதிகரிக்கத்தான் செய்தது. கடைசியில் கண்டு மிஞ்சியது வழக்கமாகக் கிடைக்கும் அரிசியில் பாதிக்கும் குறைவு.

ஒரு நாள் அக்கம்பக்கத்தார் ''ஏன் கிழவி எலும்பும் தோலுமாக இளைத்து விட்டாய்? சாப்பாட்டுக்குக் காணவில்லையா? அதிகக் கூலி கேட்பதற்கு என்ன?'' என்று கேட்டார்கள். அவள் தன் எஜமானனிடம், 'ஐயா! விலைவாசி ஏறிவிட்டது. சம்பளம் காணவில்லை. மகனுக்கு அரைவயிறு. எனக்கு அதுவுமில்லை'' என்றாள். எஜமானன் சிரித்துக் கொண்டே, ''அவ்வளவுதானே? கிழவி ஏன் இன்னும் கேட்கவில்லை என்று நினைத்தேன். கொஞ்சம் சேர்த்துத் தருகிறேன் போ'' என்றான். அவள் அவனை மனமார வாழ்த்திப் பெரிய கூடையுடன் கடைத் தெருவுக்குப் போனாள். ஆனால் பாவம், சின்னக் கூடையே போதுமானதாக இருந்தது. விலைவாசி முன்னிலும் அதிகமாக ஏறி விட்டது.

ஒரு நாள் கடைக்காரன் ''என்ன கிழவி வெறுங்கையோடு நிற்கிறாய்? கார்டு எங்கே?'' என்று கேட்டான்.

''என்ன கார்டு, ஐயா !'' என்றாள்.

''என்ன கார்டு என்றால் ரேஷன் கார்டு தான். வேறு என்ன கார்டு உனக்கும் எனக்கும்'' என்று அதட்டிச் சொன்னான் கடைக்காரன். விடிந்தெழுந்தால் மூட மக்களோடு துன்பம் என்று அவனுக்கு ஒரே எரிச்சல்.

கிழவி பதறாமல், ''அதென்ன ஐயா, புரியவில்லையே'' என்றாள். அங்கு நின்ற ஒருவன் பொறுமையுடன் விளக்கிக் கூறினான். அவள் நன்றி கூறி வெறுங் கையுடன் எஜமானனிடம் போய், ''ஐயா, ரேசன் கார்டாமே? வாங்கிக் கொடுங்க'' என்று வேண்டிக் கொண்டாள். பிறகு வீட்டில் மிஞ்சியிருந்ததையெல்லாம் பொறுக்கிக் கஞ்சி காய்ச்சி மொத்தமும் தன் மகனுக்கே படைத்தாள். ஆனால் அது காணாமல் போகவே, அவன் அவளுடன் சண்டைக்கு நின்றான். கடைசியில், 'பசி வந்தால் பத்தும் பறந்து போம்' என்பார்களே அந்தக் கணக்காய் அவன் தெருக் கோடிக்குப் பறந்து போய் விட்டான், மற்றச் சிறுவர்களுடன் விளையாடுவதற்காக. நாட்கள் சென்றன. 'இன்னமும் சீட்டு வரவில்லையே, சீட்டு வரவில்லையே' என்று தாய் ஏங்கினாள்.

கடைசியில் உணவுப் பங்கீட்டுச் சீட்டு வந்து சேர்ந்தது. ஆனால் என்ன பயன்? அதில் கண்டிருந்த சொற்ப உணவைத் தின்று பசியே தீராது. வேறு வழியில் சேகரித்துப்

பதுக்கி வைத்துத் தின்றும்தான் உண்டு. ஆனால் இப்பொழுது கிழவிக்கு அந்தக் கவலையுந்தான் ஏன்? தின்னச் சோறில்லை; உடலில் வலுவில்லை; நோயும் வாட்டியது. வேலைக்குச் செல்வதில்லை; கையில் காசில்லை; பங்கீடு எவ்வளவு குறித்திருந்தால் என்ன?....மகன் தந்தாரியாய்த் திரிந்தான்.

ஒரு நாள். தெருக் கோடிக் குப்பைத் தொட்டியிலிருந்து களிம்பேறிய பித்தளை மோதிரம் ஒன்று மூக்கய்யாவுக்குக் கிடைத்தது. அதை மணலால் பளபளப்பாகத் தேய்த்தான். உடனே கறுத்த பெருத்த பயங்கர உருவம் ஒன்று தென்பட்டது. ஆனால் பையன் பயந்து மூர்ச்சை போடவில்லை. பழைய மோதிரங்கள், பழைய விளக்குகள் வகையறாக்களின் மாய மர்மங்களில் மூக்கய்யன் புலி. ஆகவே அவன், "மோதிர பூதந்தானே? கட்டளைப்படி நடப்பாய் அல்லவா?" என்று க்ஷேமம் விசாரித்தான்.

"கேட்கவும் வேண்டுமா?" என்று அலுத்துக் கொண்டது பூதம். இப்பொழுது இதனிடம் என்ன கேட்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டே பையன் நெற்றியைச் சுளித்து யோசிக்கலானான். "ஏவல் புரிவது என் தலைவிதி; பள்ளிக்கூடப் பிள்ளைபோல் கேள்விக்கு விடையளிப்பது அல்ல; ஆனால் நீ சிறுவன் தான்; 'தூச்சி' சொல்லி விட்டு விதிகளை மீறலாம்; முதலில் வீட்டுக்குச் செல்வோம். நடுத்தெருவில் காற்றைப் பார்த்து நீ பேசுவது எனக்கு நாணமாக இருக்கிறது" என்று கூறியது பூதம்.

"அதுவும் நியாயந்தான்: நீ நல்லவன்; பூதத்தைக் கண்டு ஜனங்கள் ஏன் அஞ்சுகிறார்கள்?" என்றான் மூக்கய்யா.

"உண்மை, பயப்பட வேண்டியது நானல்லவா?" என்று ஒப்புக்கொண்டது பூதம்.

வீட்டுக்குள் சென்றதும் பையன் மறுபடியும் "ஊம்... என்ன கேட்கட்டும்?" என்று யோசித்தான்.

பூதம் அலுத்துக் கொண்டு, "இதென்ன இராத் தொல்லை? நல்ல பிள்ளையானால் முதலில் அம்மாவுக்கு மருந்து கேட்பான்" என்று எடுத்துக் கொடுத்தது.

தாய் குறுக்கிட்டு, "மொத்தம் எத்தனை வரம் உண்டு? இரண்டு மூன்றுதான் என்றால் மருந்து கிடக்கட்டும். பிழைத்துக் கிடந்தால் பின்னடி பார்த்துக் கொள்ளலாம்" என்று யோசனை கூறினாள்.

அதற்குப் பூதம், "வேறு யாராவது கேட்டிருந்தால் இந்தக் கேள்விக்குப் பதிலே சொல்ல மாட்டேன். உங்களைப் பார்த்தால், என் அன்பார்ந்த அத்தையையே உரித்து வைத்தாற் போலிருக்கிறது. ஆகையால் சொல்லி விடுகிறேன். ஆயிரம் கட்டளையிட்டாலும் கொண்டு செலுத்தத்தான் வேண்டும்—தலைவிதி" என்றது.

உடனே அவள், "என் மகனுக்கு நல்ல சாப்பாடும் எனக்கு ஏதாவது மருந்து விருந்து கொடுத்துதவும்" என்று மரியாதையுடன் கூறினாள் கிழவி.

ரேஷன் காலத்தில் நாட்டு அரசன் கூட (பிறர் முன்னிலையில்) சாப்பிடத் தயங்குவான். அப்படிப்பட்ட சிறந்த உணவு மூக்கய்யனுக்குக் கிடைத்தது. தாய்க்குச் சுடச்சுடக் கஞ்சி, முதல்தரமான பால், தாராளமாகச் சர்க்கரை எல்லாம் கிடைத்தன. "உங்கள் நோய்க்கு மருந்தும் இதுதான், விருந்தும் இதுதான், விருந்தும் இதுதான்!" என்று சொல்லிப் பூதம் பகபகவென்று சிரித்தது.

இப்படியாகத்தானே பல நாட்கள் இன்பமாய்க் கழிந்தன. கடைசியில் ஒருநாள் உணவுப் பங்கீடு பரிசோதகர்கள் கதவைத் தடதடவென்று தட்டி, "யாருள்ளே? சீட்டைப் பார்க்கட்டும்" என்றார்கள்.

வந்தது வினை, கடையின் பெயர்கூடப் பதிவு செய்யப்படாமல் புத்தம் புதிதாக இருந்தது சீட்டு, தேதியோ பழைய தேதி. அவர்கள் சந்தேகத்துடன் வீட்டைச் சோதனை போட்டார்கள்... சாக்குச் சாக்காக அரிசி, கோதுமை மாவு, பருப்புகள், ரவை வகையறா! மூலைகளில் வாதாங்கொட்டை, முந்திரிப் பருப்பு முதலான குவியல்கள்! உறிகளில் நெய்ச் சட்டிகள், தேன் ஜாடிகள்! கண்ணாடிக் குதிரில் ஓர் அங்குலம் எண்ணெய் மிதக்க ஆவக்காய் ஊறுகாய்'... பரிசோதகர்களின் வாயிலிருந்து ஜலம் அருவியாய்ப் பெருகியது. வெள்ளை வெளேரென்ற அரிசியைப் பார்த்ததும் அது கறுப்பு மார்க்கெட்டு சரக்குதான் என்று தெளிவாய்த் தெரிந்தது. தாயும் மகனும் 'ஐய்யோ, முறையோ' வென்று கூவிக் கொண்டு சிறை சென்றனர். அக்கம் பக்கத்தார், "நான் அன்றைக்கே சொல்ல வேண்டும் என்று நினைத்தேன்" என்பதைத் தயங்காமல் அறிவித்தார்கள்.

மூக்கய்யனுக்கு ஜெயிலில் அடைபட்டிருப்பது பிடிக்கவில்லை, அழுதவண்ணம் இருக்கிறான் என்பதைக் காணச் சகிக்காமல் கிழவியானவள் அரசனைப் பேட்டி காண விரும்பிக் காவலாளியின் காலில் விழுந்தாள். அவனும் இரங்கி அவளைக் கொலு மண்டபத்துக்கு அழைத்துச் சென்றான். கிழவி மன்னன் முன் புழுப் போல் விழுந்து, "அநாத ரட்சகனே, ஏழைக்கு அடைக்கலமே, நாங்கள் ஒரு தப்பும் செய்யவில்லை; மோதிரத்தின் மந்திர சக்தியால் உயிர் வாழ்கிறோம். வேண்டுமானால் பாருங்கள்" என்று பிரலாபித்து, மோதிரத்தைத் தேய்த்து "ஒன்றாந்தரமான மல்கோவா மாம்பழம் ஒரு கூடை!" என்று கட்டளையிட்டாள். டிசம்பர் மாதத்தில் சேலம் மாம்பழம் கிடைக்குமா? இருந்தாலும், தொப்பென்று ஒரு மாம்பழக் கூடை வந்து





**கான்ஸ்டேபிள்** : என்ன ஐயா சாமி யார்! உங்கள் பசிக்கு மனமிரங்கி அந்த ஓட்டல்காரர் ஓர் இட்டிலி கொடுத்தால் அவர் தலை மேல் கல்லை விட்டெறிந்து காயப்படுத்தினீராமே!

**சாமி** : பொய். கல் இல்லை! நான் விட்டெறிந்தது அவர் கொடுத்த இட்டிலியைத்தான்!

விழுந்தது. பழங்களின் பொன்னிறமும் மணமும் சபையோரை மயக்கின.

அரசன், "அதெல்லாம் சரி, கிழவி! சர்க்கார் விதிகளை ஏன் மீறினாய்? அதல்லவா முக்கிய குற்றம்?" என்று அதட்டினான்.

"எவர் வாய் உணவையும் நாங்கள் திருடவில்லையே, அரசே! நாங்கள் பண்டங்கள் வாங்காத வரை பிறருக்கு நன்மைதானே!"

அரசனுக்குச் சரியான விடை தோன்றவில்லை. ஆகவே, "அதெல்லாம் ஒப்புக்கொள்ள மாட்டேன். நீ செய்தது குற்றம். ஆனால் நீயோ மூடக் கிழவி. உன் மகனோ அறியாச் சிறுவன். ஆகையால் உன்னை மன்னிக்கிறேன். நீ அந்த மோதிரத்தை என்னிடம் கொடுத்துவிடு. உன் குடும்பத்தை நான் காப்பாற்றுகிறேன்" என்றான்.

மந்திரிகள் ஆமோதித்தனர். கிழவியோ, "இது தங்களுக்கு எதற்கு அரசே? தங்களிடம் தான் அம்பாரி அம்பாரியாகக் குவிந்திருக்கிறதே" என்று மிகுந்த தயக்கத்துடன் ஆட்சேபித்தாள்.

அரசன் நரைத்த மீசை துடிக்க, "உன் அதிகப் பிரசங்கித்தன மெல்லாம் இங்கே வேண்டாம். நீ யார் கேட்பதற்கு?" என்று அதட்டி, "அம்பாரி அம்பாரியாகக் குவிந்திருந்தால் பட்டாளம் பட்டாளமாகத் தின்னக் காத்திருக்கிறதே. படியளப்பவனுக்கல்லவா தெரியும்! சேனை தன் வயிற்றின் மேல் அல்லவா செல்கிறது" என்று தன் மனத்தில் உள்ளதை உதிர்த்துவிட்டான்.

கிழவி திகைத்தாள். சிப்பாய் கால் வீசி நடப்பதை அவள் பார்த்திருக்கிறாள்; குப்புறப் படுத்து ஊர்ந்து செல்வதைப் பார்த்ததில்லை.

சபையில் இருந்த விநியோக இலாகா சிப்பந்திகளும் உணவுப் பொருள் வியாபாரிகளும் கவலை கொண்டனர். கிழவியோ "ஐயா! மன்னிக்கவும். 'குடிகள் வரி செலுத்த வேண்டும்; சிற்றரசர்கள் கப்பம் கட்டவேண்டும்; ஆனால் லஞ்சம் கொடுப்பதும் வாங்குவதும் மகா பாவம்' என்று கோவிலில் கதை வாசிக்கும் புராணிகர் அடிக்கடி சொல்வார். நான் மோதிரத்தைத் தந்து விடுதலை கோர மாட்டேன்" என்று ஹிஸ்டீரியா வந்தவள் போல் கதறினாள்.

உத்தியோகஸ்தர்களும் வணிகர்களும் கை தட்டி "கேளும், கேளும்" என மெச்சினர். அரசன் வெட்கி, "எனக்குத் தெரியாதா, என்ன? நீ உண்மையிலேயே நல்லவளா இல்லை நல்லவள்போல் தந்திரமாய் நடிக்கிறாயா என்று சோதித்தேனே தவிர, வேறல்ல. மோசக்காரர்கள் உலகத்தில் எத்தனை பேர்கள் இல்லை? அகம் ஒன்று, புறம் ஒன்று பேசுவதெல்லாம் ரொம்பத் தப்பு! சரி, நீ மகனுடன் வீட்டுக்குப் போகலாம். அந்தக் கூடை இப்படியே இருக்கட்டும்" என்று தீர்ப்புக் கூறினான்.

எல்லா மந்திரிகளும் வியாபாரிகளும் 'நமது மன்னர் மகா மேதாவி. மிக நல்லவர். இணையற்ற நியாயவான். வாழ்க நம் மன்னர்! வாழ்க நம் நாடு!" என்று ஆரவாரித்தனர். மாம்பழத்தின் வாசனையை உறிஞ்சினர்.

வீட்டை அடைந்ததும் கிழவி பூதத்தை வரவழைத்து, "இத்தனை நாட்கள் உம்மைத் துன்பப் படுத்தியதற்கு வருந்துகிறேன். இப்பொழுது ஒரே ஒரு கடைசி வரம் - இருவர் சோற்றுக்குக் காணும் அளவுக்கு உழைக்க எனக்கு உடம்பில் பலம் கொடுத்துவிட்டு, பிறர் ஆசையைக் கிளப்பும் இந்த மோதிரத்தை எடுத்துக் கொண்டு மாயமாய் மறைந்துபோம்!" என்ற கருத்துக்கிணங்க வேண்டிக் கொண்டாள்.

பூதமும் அதன்படியே போதுமான அளவு ஆரோக்கியமும் சக்தியும் அவளுக்கு அளித்து, மோதிரத்தைப் பத்திரமாய் எடுத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் மறைந்தது.

பூதம் திடீரென்று தோன்றியபோது கூட அவ்வளவு திகிலில்லை. அது கடைசி முறையாக மறைந்ததும் மூக்கய்யாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. நிலைமை புரிந்து பதற்றம் சற்றுத் தணிந்ததும் அவன் தாயுடன் 'வாங் வாங்' என்று சண்டை பிடித்தான். ஆனால் தாய் அதற்குள் அறுசுவையுடன் உணவு தயாரித்து, அவனுக்களிக்கவே அவன் மனம் குளிர்ந்தான்.

மந்திர மோதிரம் மறைந்ததைக் கேள்வியுற்ற அரசனும் அமைச்சரும், "நல்ல வேளை! என் சத்துருவின் கையில் போய்ச் சேர்ந்துவிடவில்லையே!" என்று சொல்லிச் சமாதானம் அடைந்தனர்.

கண்டிராக்டர்கள் "நல்ல வேளை! பொல்லாக்கிழவி ராணுவ விநியோக ஒப்பந்தம் ஏற்றுக்கொள்ள வில்லையே!" என்று மனத்தைத் தேற்றிக் கொண்டு நவதானியங்களுக் கொப்பப் பெரு மணலும் கனிமண்ணும் சேர்த்தனர்.

உணவுப்பங்கீடு இலாகாத் தணிக்கையாளர், "இனிமேல் நம் கணக்குகள் பிசகின்றி இருக்கும். ஒரு கிழவி எப்படி நம்மைச் சிக்கலில் மாட்டிவிட்டாள்!" என்று எண்ணி நாற்காலியில் சாய்ந்து சிகரெட்டு பற்ற வைத்தனர்.

ஆனால் ஒருவராவது '**உலகத்தைக் காக்கும் மகா மந்திரம் பிறர் இலவச உதவியல்ல, தன் உழைப்பு**' என்ற படிப்பினையை உணர்ந்து, கிழவியைப் பாராட்ட முன் வரவில்லை.




# வர்த்தக வளர்ச்சிக்கு 'வான்'கள் அவசிய சாதனங்களாகும்

**சிக்கன முறையிலே**
**வன்மையாக**
**தோற்றப் பொலிவுடன்**
**டி.வி.எஸ் ஸில், பாடிகள்**
**நிர்மாணிக்கப்படுகின்றன.**

இன்று பொருளாதாரத் துறையில், எல்லோரையும் வாட்டி வரும் பிரச்னை, பண்டங்களை எப்படி விநியோகிப்பது என்பதாகும். நாட்டில் தொழில் வளம் பெருகும்போது கூடவே விநியோகப் பொறுப்பும் அதிகரித்து வருகிறது.

இதை உணர்ந்தே தொழில் ஸ்தாபனங்கள் தங்களுடைய தேவைக்கு ஏற்றபடி விநியோகப் பணியை நிறைவேற்றச் சொந்தமாகவே வான்களை அமைத்துக் கொள்கின்றன. இந்தியாவின் மிகப் பெரிய டி.வி.எஸ். பாடி நிர்மாணிப்புத் துறையின் மூலம் தங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுங்கள்.

டி.வி.எஸ்ஸிலும் நிர்மாணிக்கப்படும் பாடிகள் வன்மை வாய்ந்தவை—நீடித்த கால சேவைக்கு உகந்தவை.





டி.வி.எஸ். அமைக்கும் பாடிகள் கனக் குறைவாயிருப்பதால் அதிகப்படி நிறையை ஏற்றிச் செல்லக் கூடியவை.








**டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் ஸன்ஸ்**
**பிரைவேட் லிமிடெட், மதுரை**

கிளைகள்:
திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர்

# இருமல் தொல்லையா !

## ஸெப்ரால்

**சாப்பிடுங்கள்**

**அது உடனடியாக**

**நிவாரணம்**

**அளிக்கிறது**






# 'ZEPHROL'

trade mark brand

## ஸெப்ரால் காப் ஸிரப்




தயாரிப்பாளர்கள் மே ஆண்ட் பேக்கர் லிமிடெட்.

விநியோகஸ்தர்கள் :

**மே ஆண்ட் பேக்கர் (இந்தியா) பிரைவேட் லிட்**

பம்பாய் . கல்கத்தா . கௌஹாத்தி

மதராஸ் . புதுடில்லி.

# படித்துப் பாருங்கள்

## Sports and Pastime Annual 1959

உழைத்த களைப்பு நீங்கவும், ஓய்வு நேரத்தை உல்லாசமாகக் கழிக்கவும் ஏற்பட்டவை விளையாட்டுகள். இவற்றை உயர் கலையாக வளர்த்து, அவைகளுக்கு வாழ்க்கையில் முக்கியமான இடம் அளித்தால் மட்டும் போதாது என்று கருதி, உன்னதமான ஸ்தானத்தையும் கொடுத்து, ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கும், இளைஞர்களுக்கும் இன்பமூட்டி வருகிறது, 'ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம்' என்னும் பிரபல ஆங்கில வாரப் பத்திரிகை.

இதனுடைய 1959-ம் ஆண்டு விசேஷ மலர் மற்ற வருஷ அனுபந்தங்களைப் போலவே கலையழகும் கருத்துயர்வும் கொண்டு பிரகாசிக்கிறது. விளையாட்டு உலகில் இவ்வாண்டுவிசேஷ நிகழ்ச்சிகளைக் கண்ணோட்டமாக ஆராய்கிறது முதல் கட்டுரை. உலக அரங்கில் இந்தியாவுக்குப் பெருமை தேடித் தந்துள்ள டென்னிஸ் ஆட்டக்காரர் திரு ஆர். கிருஷ்ணனைப் பற்றிய கட்டுரை மிக அழகாக அமைந்துள்ளது. 'கிரிக்கெட்' கோஷ்டித் தலைவரிடம் இருக்கவேண்டிய குணதிசயங்களையும் திறமைகளையும் ஆஸ்திரேலிய கிரிக்கெட் ஆட்டக்காரர் ஜாக் ஃபிங்கல்டன் ஒரு கட்டுரையில் வெகு ரசமாக எடுத்துரைக்கிறார். அதிர்ஷ்டம் தலைவர் பக்கம் இருக்க வேண்டியது அவசியம் என்று அவர் குறிப்பிடும்போது வாழ்க்கையில் வெற்றிக்கு மட்டும் அல்லாமல் விளையாட்டில் வெற்றிக்கும் கூட இதன் பலம் எவ்வளவு வேண்டியிருக்கிறது என்பது விளங்குகிறது. அமெரிக்காவின் 'டென்னிஸ்' விளையாட்டின் எதிர்காலத்தைப் பற்றி, அரசியல் விஷயங்களை விவாதிக்கும் அதே திறமையுடன் திரு கே. பலராமன் ஒரு கட்டுரையில் ஆராய்கிறார். 'டெஸ்ட் கிரிக்கெட்' நினைவுகளை விளையாட்டுச் செய்தி விரிவுரையாளர் திரு எஸ். கே. குருநாதன் ருசிகரமாக ஒரு கட்டுரையில் வர்ணிக்கிறார். ரஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் அரசியலில் உள்ள போட்டி போல் விளையாட்டிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகளை ஒரு கட்டுரை விவாதிக்கிறது. பிரபல ஆட்டக்காரர்களான பி. பி. எச். மே. (இங்கிலாந்து டெஸ்ட் கோஷ்டித் தலைவர்), கன்ஹாய், (மேற்கிந்திய டெஸ்ட் ஆட்டக்காரர்) டி. கே. கெயிக்வாட், (இந்திய கிரிக்கெட் கோஷ்டித் தலைவர்) முதலியோர்களின் முழு வர்ணப் படங்களும், மற்றும் இதர கோஷ்டிப் படங்களும் மலருக்குச் சோபையளிக்கின்றன. திரைப்பட உலகத்துக்கும் உரிய இடம் அளிக்கப்பட்டுள்ளது. 'மொகல்-ஏ ஆஜாம்' என்னும் படத்திலிருந்து சில காட்சிகளும், மாலா ஸின்ஹா, ஷகிலா, ராஜேந்திர குமார், பிரதிப் குமார் ஆகிய இந்திய நட்சத்திரங்களின் வர்ணப் படங்களும் மலருக்கு மணம் அளிக்கின்றன. இவ்வருஷ ஆங்கில சஞ்சிகைகளின் அனுபந்தங்களின் வரிசையில் ஸ்போர்ட் அண்ட் பாஸ்டைம் விசேஷ மலர் எல்லா வகையிலும் முதலில் நிற்கிறது. வாசகர்களுக்கு ஒரு நல் விருந்து.




ஆசிரியர் ஸ்போர்ட் அண்ட் பாஸ்டைம்: கஸ்தூரி பில்டிங்ஸ், மவுண்டு ரோடு, சென்னை-2 விலை: ரூ. 1-25. —எம். எஸ். சிவசாமி

## நாரணன் விளையாட்டு

இராமாயணக் கதையின் ஒவ்வொரு பெயரும் ஒரு சிறந்த உட்பொருள் நுணுக்கத்தைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது. 'கம்பராமாயணம்'-என்னும்போது உடைமை குறித்து நிற்கும் தொடரால் கம்பருக்குச் சிறப்பு. அதுபோன்றதே வான்மீகி ராமாயணமென்ற தொடரும். 'இராமாவதாரம்' — என்ற பெயரோ காவியநாயகனை இராமனுடைய அவதாரச் சிறப்பைத் தாங்கி நிற்கிறது. 'இராம கதை', 'இராம காதை' என்ற பெயர்களும் கூடக் காவியத் தலைவனின் பெருமையையே புகல்கின்றன.

தெய்விகத் தொடர்பும், மூலமான அடிப்படை உண்மையை விளக்கும் ஆற்றலும், வாய்ந்த வேறொரு அழகிய பெயரும் இராம காவியத்துக்கு இருக்கிறது. ஆசிரியர் 'மாலி' அவர்கள் நாரணன் விளையாட்டு என்னும் அந்தச் சிறப்பு வாய்ந்த பெயரைத் தேர்ந்துணர்ந்து, தம் நூலுக்கு இட்டிருக்கிறார்கள்.

**"நாரணன் விளையாட்டு எலலாம்**
**நாரதமுனிவன் கூற**
**ஆரணக் கவிதை செய்தான்**
**அறிந்தவான் மீகிஎன்பான்"**

என வரும் பழைய பாடலைச் சான்று காட்டிக் கம்பன் கவிச்சுவைத் திறன் ஆய்ந்து காணும் தம் நூலுக்கு 'நாரணன் விளையாட்டு' என்று பெயரிட்டிருக்கிறார்கள் 'மாசி' அவர்கள்.

'மாசி' என்னும் பெயருக்குள் புகுந்து கொண்டிருக்கும் மதுரை தமிழ்நாடு நாளிதழின் ஆசிரியரான திரு கருமுத்து தி. மாணிக்கவாசகம் அவர்கள் இலக்கியச் சுவை கண்டு திளைப்பதில் பேரார்வம் படைத்தவர். அறுபதுக்கு மேற்பட்ட சிறு சிறு தலைப்புக்களில் கம்பன் காவிய எழிலையும், இராமாயணக் கதை நலனையும் சுவை குன்றாமல் நிறைவும் இடையிடையே வருமாறு எழுதியிருக்கிறார். பொருத்தமான இடங்களில் ஆங்கில மொழியிலிருந்தும், வடமொழியிலிருந்தும் மேற்கோள்கள் காட்டப் பட்டிருக்கின்றன. தமிழ் மொழியிலுள்ள வேறு வேறு இலக்கியங்களிலிருந்தும் நல்லநல்ல எடுத்துக் காட்டுக்களை ஆசிரியர் கையாண்டிருக்கிறார். இலக்கிய நூலின் இரண்டாம் பாகத் தொடக்கத்தில் 'ஒரு கண்ணோட்டம்' என்ற தலைப்பிலும், மூன்றும் பாகத் தொடக்கத்தில் 'யுத்த காண்டத் தோற்றுவாய்' என்ற தலைப்பிலும் ஒரு பெரும் பகுதியை முன்னோட்டமாகச் சுருக்கி ஆராய்ந்து விவரிக்கும் தொகைவிரி' —யாப்பு முறையை ஆசிரியரிடம் காண்கிறோம். ஒவ்வொரு தலைப்பிலும் கம்பனுடைய கவிதை மூலங்களிலே நயமான பகுதிகளையும் நடுநடுவே தந்திருக்கிறார் ஆசிரியர்.

"குற்றமற்ற மனிதனை உலகிலே காண முடியுமா?" என்ற கருத்தை ஆராய எழுந்ததே இராமாயணம் என்று வான்மீகி முனிவரின் கருத்தை முடிப்புரை கூறி விளக்குவது இந்த நூலுக்கே மணிமுடி வைத்தாற் போல் தோன்றுகிறது. கம்பர் உத்தர காண்டம் பாடாமையின் காரணமாகக் கூறப்படும் கருத்தையும் நூல் இறுதியில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஆசிரியரும் தமது நூலை முடிசூட்டும் மங்கல நிகழ்ச்சியோடு நிறைவேற்றியிருக்கிறார். உத்தரகாண்டம் பற்றிச் சொல்லும்போது, பவபூதியின் 'உத்தர ராம சரிதம்' பற்றியும் சிறிது குறிப்பிட்டு விவரித்திருக்கலாம். நூல் நிரம்ப வருகிற பலமொழி மேற்கோள்களும், சுவையான சொல்லும் முறையும், ஆராய்ச்சி நுண்மையும், நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன. இலக்கியச் சுவையுள்ளவர்கள் அவசியம் படிக்க வேண்டிய நூல்களில் 'மாசி' அவர்களின் 'நாரணன் விளையாட்டும்' ஒன்று. நானூறு பக்க அளவுள்ள இந்த நூலின் விலை இரண்டரை ரூபாய் தான் என்று அறிகிறபோது மேலும் வியப்பாக இருக்கிறதல்லவா? நூலைப் பலரும் படித்துப் பயன்பெற வேண்டுமென்ற ஆசிரியரின் ஆர்வமும், பெருந்தன்மையுமே இதற்குக் காரணமாகும். இந்த ஆர்வமும், பெருந்தன்மையும் பாராட்டுக்குரியன.

கிடைக்குமிடம்: 'தமிழ்நாடு' அலுவலகம்-ஆண்டாள்புரம், திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை. —நா. பா.

## எல்லோரும் வாழவேண்டும்.

சொற்பொழிவுகளையும், கட்டுரைகளையும் சேர்த்துத் தொகுத்து இந்த நூலைப் பல பொருள் பற்றிய கட்டுரைத் தொகுப்பாகச் செய்திருக்கிறார் ஆசிரியர்.

உள்ளீட்டில் காணப்படும் கட்டுரைகளும், சொற்பொழிவுகளும் ஆசிரியருக்குப் பல துறைகளிலும் உள்ள ஈடுபாட்டையும் ஆராய்ச்சி உணர்வையும் நமக்குப் புலப்படுத்த முனைகின்றன. சரித்திரம், தொல்கலை ஆராய்ச்சி, கலை, சமயம், இலக்கியம், பண்பாடு ஆகியவற்றில் ஆசிரியருக்கு எத்தனை ஆழ்ந்த புலமை இருக்கிறது என்பது தெளிவாகப் புலப்படுகிறது! ஆசிரியர் மக்களின் உணர்ச்சிகளை நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார் என்பது இந்தத் தொகுப்பிலிருந்து நன்றாக விளங்குகிறது. அதைச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டிருப்பதையும் காண்கிறோம். ஆனால் சாதிக் குழப்பத்தையும் மொழிக் குழப்பத்தையும் 'ஒரு சிலரைப் பலர் வெறுக்கும் நிலையையும்' அகற்ற இவர் பாடுபடுகிறாரா என்பதை நல்லறிஞர்களே கண்டறிய வேண்டும்.

தமிழறிஞர்களில் பெரும்பாலோர் தற்கால இலக்கியங்களைப் பற்றிச் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை என்று இப்பொழுதுள்ள எழுத்தாளர்களுக்கு ஒரு குறை இருந்து வருகிறது. இது உண்மையோ என்பதை இந்தத் தலைமையுரையிலுள்ள சில தவறுகள் எண்ணச் செய்கின்றன.

கமலாம்பாள் சரித்திரம் எழுதியவர் ராஜமையர் என்பது எல்லாருக்கும் தெரியும். ஆனால் ஆசிரியர் கமலாம்பாள் சரித்திரம் எழுதியவர் மாதவையா என்று (88-ம் பக்கத்தில்) குறிப்பிடுகிறார். பெருங்கதை என்னும் புதின எழுத்தாளருள் கி. வா. ஜகந்நாதன் பெயரும் காணப்படுகிறது. அவர் எப்பொழுது புதினம் எழுதினார், அதன் பெயர் என்ன என்பத ஒருகால் ஆசிரியருக்குத் தெரியுமோ, என்னவோ? கி. வா. ஜ. புதினம் எதுவும் இதுவரையில் எழுதியதில்லை. சிறுகதை எழுதாதவர் பெயர் ஒன்று அந்த வரிசையில் காணப்படுகிறது.

இவற்றைப் பார்க்கும்போது தலைமையுரையைப் பின்னர் சரி பார்க்கவில்லை என்று தோன்றுகிறது.

பேராசிரியர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் சிறந்த தமிழறிஞர், பல நூல்களின் ஆசிரியர். 'எல்லோரும் வாழ வேண்டும்' என்ற இந்தக் கட்டுரைகளில் அவருக்குப் பிரசார நோக்கமே மிகுதியாக இருப்பதாகத் தெரிகிறது. கலைநோக்கு கண்ணுக்குப் புலப்படவில்லை: கருத்துக்கும் அகப்படவில்லை.

தமிழ் நடைக்கே உரிய இனிமையும் நயமும் மறுமலர்ச்சித் தமிழில் காணப்படும் ஒயிலும் துள்ளலும் இவரது தமிழ் நடையில் இல்லை. வள்ளுவர் பண்ணையார் இந்நூலை நல்ல முறையிலே வெளியிட்டிருக்கிறார்கள்.

கிடைக்குமிடம்: வள்ளுவர் பண்ணை, சென்னை. விலை ரூ. 2. —ஆர். வி.

Printed and Published by R Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras 10
Managing Editor T Sadasivam

பளபளப்பான
நீண்ட கரும்
கூந்தலழகுக்கு...

# இராஸ்மிக்

பர்ப்யூம்ட்

## கோகனட் ஹேர் ஆயில்

இப்பொழுது அழகான இப் புதுமாதிரி சீசாவில்
ரோஜா அல்லது மல்லிகை
மணத்துடன் கிடைக்கிறது.




ECHO- 4A—50 TM

லண்டனிலுள்ள இராஸ்மிக் கோ. லிட்., சார்பாக
இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon